# நாடோடி இலக்கியம்




கி.வா.ஜகந்நாதன்

# முன்னுரை

ஒரு நாள் என் நண்பர் கா. ஸ்ரீ. ஸ்ரீ. என் வீட்டுக்கு வந்தார். அவசர அவசரமாக, "உங்களைப் பார்க்க டாகுர் வந்திருக்கிறார்; வாருங்கள்" என்று அழைத்தார். 'டாகுராவது! வரவாவது! ஏதோ புரளி பண்ணுகிறார்' என்று நான் நினைத்தாலும், அவர் ஏன் அப்படிச் சொல்லுகிறார் என்பது விளங்கவில்லை. எழுந்து சென்று வாயிலுக்கு வந்தபோது ஆஜானுபாகுவான ஒருவர், கருகரு வென்ற தாடியோடு நெடுஞ்சட்டை அணிந்து கொண்டு நின்றார். கா. ஸ்ரீ. ஸ்ரீ. அவரை எனக்குப் பழக்கம் செய்துவைத்தார். அவரது தாடியும் உயர்ந்து வளர்ந்த உருவமும் மகாகவி ரவீந்திரரை நினைப்பூட்டின; அதனால் தான் அவரை டாகுரென்று நண்பர் சொல்லி என்னைப் பிரமிக்க வைத்தார். உருவ ஒற்றுமையோடு, ஒரு லட்சியத்துக்காக வாழ்க்கையை நடத்தும் வகையிலும் அவ்விருவரிடையேயும் ஒற்றுமை இருந்தது.

அந்த ஆஜானுபாகுவே ஸ்ரீ தேவேந்திர ஸத்யார்த்தி என்பவர். இந்தியா முழுவதும் அலைந்து திரிந்து நாடோடிப் பாடல்களைத் தொகுப்பதையே வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட பெரிய நாடோடி அவர். பஞ்சாப்பில் பிறந்து வளர்ந்து கல்வி பயின்ற காலத்திலேயே நாடோடிப் பாடல்களில் அவர் உள்ளம் ஆழ்ந்துவிட்டது. தாய் தகப்பனருக்குத் தெரியாமல் பள்ளிக்கூடத்தை விட்டு ஓடிவிடுவாராம். நாடோடிப் பாடல்களில் மனம் புதைந்து போய் ஆட்டிடையனையும் குடு குடுப்பாண்டியையும் ஏற்றக்காரனையும் தேடியடைந்து அவர்கள் பாடும் பாடல்களைக் கேட்டு நிற்பாராம். அக்காலம் முதல் இன்றளவும் இயற்கையோடு ஒன்றியெழும் கிராம கீதங்களைத் தொகுப்பதையே சிறந்த பணியாகச் செய்துவருகிறார்.

'நாடோடிப் பாடல்களுக்காக வாழ்க்கை முழுவதையும் செலவிட வேண்டுமா, என்ன?' என்ற கேள்வி பலருக்கு எழக்கூடும். தேவேந்திர ஸத்யார்த்தியோடு ஒரு நாள பழகிப்பேசி இருந்தால், இந்திய நாட்டில் புதைபொருளாக, மறைந்த களஞ்சியமாக உள்ள நாடோடிப் பாடல்களை அநுபவிப்பதற்கும் தொகுப்பதற்கும் ஒரு பிறவியல்ல, பல பிறவிகள் வேண்டியிருக்கும் என்பதைத் தெளிவார்கள். ரவீந்திரநாத டாகுரும், மகாத்மா காந்தியடிகளும் இந்த நாடோடியின் தொண்டை வியந்து பாராட்டி யிருக்கிறார்கள்.

1940 - ஆம் வருஷம் ஸத்தியார்த்தியவர்கள் தமிழ் நாட்டுக்கு வந்து ஐந்து மாதங்கள் பிரயாணம் செய்தார். சென்னையில் தங்கியிருந்த காலத்தில் அவரோடு பல முறை சந்தித்துப் பேசிப் பழகும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. என்னுடைய ஆசிரியராகிய மகாமகோ பாத்தியாய டாக்டர் ஐயரவர்களை அவர் கண்டு தம் கைங்கரியத்தைப் பற்றிச் சொன்னார். மங்கி மடிந்து கொண்டிருந்த இலக்கியச் செல்வத்தைத் தொகுத்துப் பண்படுத்தி வழங்கிய அப்பெருவள்ளல் ஸ்ரீ ஸத்தியார்த் தியின் தோற்றத்தில், அவருடைய ஒளி வீசும் கண்களில், அவர் பேசும் வெண்கலத் தொனியில், காட்டிய ஆர்வத்தில், சொன்ன விஷயங்களில் ஒன்றிப் போனார். அந்த அந்த நாட்டில் பாடல்களைத் திரட்டுவதற்குக் கால்நடையாக நடந்தும் பட்டினி கிடந்தும் காடும் மலையும் கடுகி வழிநடந்தும் அவர் பட்ட பாடுகளைக் கேட்கக் கேட்க என் ஆசிரியப் பிரானுடைய உள்ளம் உருகியது. "ஏற்றப் பாட்டுக்கு எதிர்ப்பாட்டில்லை, பூசாரி பாட்டுக்குப் பின் பாட்டில்லை என்ற பழமொழி தமிழ் நாட்டில் உண்டு. பெண்மணிகள் குழந்தைகளைத் தாலாட்டும் போதும் துக்கத்தினால் ஒப்பாரி வைத்து அழும்போதும் அவர்களிட மிருந்து வெளியாகும் பாடல்கள் உணர்ச்சி மயமாக இருக்கும். தொழிலாளிகள் பாடும் பாடல்கள் தமிழில்

கணக்கு வழக்கில்லாமல் இருக்கின்றன. நீங்கள் நல்ல காரியம் செய்கிறீர்கள்'' என்று பாராட்டினுர். ''என் முயற்சி நல்ல பயனை அடையும்படி ஆசீர்வாதம் செய்யுங்கள்'' என்று நாடோடி ஸத்தியார்த்தி வேண்டிக்கொண்டு ஆசியையும் பெற்ருர்.

நாடோடிப் பாடல்களை வெளியிடும் விஷயத்தில் கலைமகள் ஓரளவு தொண்டு செய்த பெருமைககு உரியது. கலைமகள் ஆரம்ப இதழ்களில் சில பாடல்கள் வெளியாயின. அவற்றையும் நான் தொகுத்து வைத்திருந்த சில பாடல்களையும் ஸத்தியார்த்தியவர்களிடம் காட்டினேன். அவர் சிலவற்றைத் தேர்ந்து எடுத்துக் கொண்டார்.

அக்காலத்துக்கு முன்பே நாடோடிப் பாடல்களில் ஓரளவு ஈடுபாடு எனக்கு இருந்தாலும், ஸத்தியார்த்தியோடு பழகியதனுல் அந்த ஈடுபாடும், தமிழ் நாடோடிப் பாடல்களைத் தொகுக்க வேண்டுமென்ற ஆர்வமும் மிகுதியாயின. ஸத்தியார்த்தியவர்கள் இத்துறையில் புகுநது உழைக்கும்படி ஊக்கமூட்டினுர். அது முதல் நான் செல்லும் இடங்களில் உள்ளவர்களின் மூலமாகவும், நண்பர்களின் மூலமாகவும், பாடல்களைத் தொகுக்கலானேன்.

எத்தனையோ வகையான பாடல்கள் தமிழ் நாட்டில் உலவுகின்றன. தொழிலாளிகள் தங்கள் தொழில் சம்பந்தமாகப் பாடும் பாடல்கள் பல; தங்கள் சிரமத்தைப் போக்கிக்கொள்ள ஆனந்தமாகப் பாடும் கீதங்கள் பல; சிறுவர் சிறுமியர் விளையாடும்போது பாடும் பாடல்கள் பல; தாய்மார்கள் குழந்தைகளைத் தாலாட்டிச் சீராட்டி முத்தாடிச் சோறூட்டி நிலாக் காட்டும் போது பாடும் இன்பப் பாடல்கள் பல; கதைகளை விளக்கும் பாடல்கள் பல. இப்படிப் பலபல திறங்களில் மலர்ந்துள்ள நாடோடி இலக்கியத்தில் எந்தச் சுவை இல்லை? காதல் இல்லையா?

வீரம் இல்லையா? நகைச்சுவைக்குத்தான் குறைவா? இலக்கியச் சுவைக்குப் பஞ்சமா? மனித உணர்ச்சிகளை எவ்வளவு அழகாக, தெள்ளத் தெளிய அவை எடுத்துக் காட்டுகின்றன! கரடு முரடான உள்ளத்தை உருக்குவன சில பாடல்கள்; குழந்தைகளின் உள்ளத்தில் குதூகலத்தைப் புகுத்துவன சில; சோகத்தில் மூழ்கச் செய்வன சில.

தமிழ் நாட்டில் மனிதன் நடமாடத் தொடங்கிய கால முதல் இந்தப் பாடல்கள் பிறந்து வளர்ந்து வருகின்றன. பரந்த தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளிலும், வயல் வெளிகளிலும், வீடுகளிலும், வீதியிலும் உலவும் இவற்றைத் தொகுத்து வகைப்படுத்தி வெளியிடுவதில் நாம் இன்னும் சிரத்தை கொள்ளவில்லை. ஹிந்தி முதலிய மொழிகளில் நாடோடிப் பாடல்களைத் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். தமிழ் நாட்டில் பாடல்களுக்குப் பஞ்சமே இல்லை. இப்போது முயன்றாலும் லக்ஷம் பாடல்களுக்குக் குறையாமல் சேர்க்கலாம். இயற்கை வாழ்வினின்றும் விலகி நிற்கும் நாகரிகத்தில் தலைப்பட்டிருக்கும் பலருக்கு இப்பாடல்களின் அருமை பெருமைகள் தெரிவதில்லை. நாடோடிப் பாடல்களைப் பாடுவாரும் வரவரக் குறைந்துகொண்டே வருகிறார்கள். எனவே, இதுதான் நாடோடிப் பாடல்களைச் சேகரிக்க நல்ல தருணம். நாளாக ஆக இப்போது கிடைக்கும் பாடல்கள் மறைந்து போய்விடும்.

இப்பாடல்களை அப்படியப்படியே சொல்வதைவிட ஒரு நிலைக்களத்தை அமைத்துப் பொருத்திக் காட்டினால் தமிழ் நாட்டார் அவற்றில் ஈடுபடுவார்கள் என்று எண்ணினேன். இலக்கியத்தோடு ஒப்பிட்டு இவற்றினிடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமை நயங்களை எடுத்துக் காட்டவேண்டுமென்பது என் அவா. அந்த அவா உருவாகி இக்கட்டுரைகளாக வந்திருக்கின்றன. இவை **'சுதேசமித்திரன்'** வாரப்பதிப்பில் வெளிவந்தவை; அங்கங்கே சில சிறு மாற்றங்கள் மாத்திரம் செய்திருக்கி

றேன். இவற்றை வெளியிட்டு உதவிய சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். ஸ்ரீநிவாஸன் அவர்கள்பால் மிக்க நன்றி பாராட்டுகிறேன்.

சிலகாலமாக நாடோடிப் பாடல்களைத் தொகுப்பதிலும் அவற்றைப் பற்றிய கட்டுரைகளை எழுதுவதிலும் சில அன்பர்கள் ஈடுபட்டிருப்பதைக் காண எனக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாகிறது. தமிழ் நாட்டில் வழங்கும் பாடல்கள் அவ்வளவையும் தொகுத்து வெளியிடுவதென்றால், எவ்வளவோ பேர்கள் உழைக்கவேண்டும். அவ்வளவு பேருக்கும் வேலை இருக்கிறது. ஏறக்குறைய ஆயிரம் பாடல்களை நான் தொகுத்திருக்கிறேன்.

இந்தப் புத்தகம் நாடோடிப் பாடல்களின் சுவையைப் பொதுவாக உணர்வதற்கு ஒரு கருவியாக இருக்குமென்று நம்புகிறேன். இனியும் இந்த முறையில் சில புத்தகங்கள் வெளிவரும். பாடல்களைத் தனியே தொகுத்துக் குறிப்புக்களுடன் வெளியிட எண்ணியிருக்கிறேன். இறைவன் திருவருள் துணை செய்யவேண்டும்.

இங்ஙனம்,

**கி. வா. ஜகந்நாதன்.**

# பொருளடக்கம்

# 1
# இயற்கைப் பாட்டு

உலகம் முழுதும் சங்கீத மயம். இசையினிமை சூழ்ந்தது இயற்கை. இயற்கையின் எழிலைக் கண்டு இன்புறுவதற்குச் சிலரே கண் படைத்திருக்கிறார்கள். அவ்வாறே இயற்கையில் எழும் இன்னிசையைக் கேட்டு நுகரும் ஆற்றல் சிலருக்கே இருக்கிறது. காற்று, மரங்களுக்கிடையிலே மெல்லத் தவழ்ந்து அவைகளின் இலைகளை அசைத்துப் பாடுவதைக் கேட்பவர்கள் எவ்வளவு பேர்? ஒவ்வோர் இலையும் காற்றென்னும் இசைப் புலவனுக்கு ஒவ்வொரு ஸ்வர ஸ்தானமாக உதவுகிறது. மலை அருவி தாவிக் குதித்துத் தவழ்ந்து வருகிறதே, அதன் ஓட்டத்திலே அமைந்திருக்கும் ஒல்லொலியின் இன்னிசையை எல்லாரும் அநுபவிக்க முடிகிறதா? வீணையின் ஸ்வர ஸ்தானங்களின்மேல் நடக்கும் விரல் இசையை உண்டாக்குகிறது; அருவியெனும் மங்கை மலையையே வீணையாக்கித் தன்னுடைய ஓட்டத்திலேயே சங்கீதத்தைப் பிறப்பிக்கிறாள். அவள் தாண்டிக் குதிக்கும்போது முத்தாய்ப்பு விழுகிறது. மெல்லெனச் செல்லும்போது நிரவல் செய்கிறாள். ஆற்று நீர் ஓசையிலே, அமைந்து அடங்கி எழும் நாதத்திலே, இசையின் இனிமை இருக்கும் இரகசியத்தை யார் அறிந்திருக்கிறார்கள்? வெள்ளலைக் கைகளைக் கொட்டி முழங்கும் கடல் சதா ஒலமிட்டுக் கொண்டிருக்கிறதே, அதனுடைய பிரணவ கோஷத்தைச் செவியால் நுகரும் உள்ளம் படைத்தவர்கள் எத்தனை பேர்? உலகத்துப் பேரொலியை யெல்லாம் அடக்கி மீதூர்ந்து எழுந்து இசைக்கும் அந்த மகோததியின் நாதத்திலே தோற்றும் பேரமைதியை உணர்ந்தவர் யார்?

இந்த இனிய இயற்கைச் சங்கீத உலகத்திலே நாமெல்லாம் செவிடர்களாகத்தான் நடமாடுகிறோம். தினந்தோறும் கேட்டாலும் அதன் அளவில் நம் காது மரத்துவிடுகிறது. ஆனால் இந்த இன்னிசையை அநுபவிக்கும் சாதியினர் உலகத்தில் இருக்கிறார்கள். அதிகமாக இல்லை; சிலரே இருக்கிறார்கள். மனிதனுடைய உள்ளமாகிய காடாந்தகாரக் குகையிலே ஒளிந்திருக்கும் எண்ணங்களை யார் உணருகிறார்களோ, மனித உள்ளத்திற்கு எட்டாத கற்பனைச் சிகரத்தையும் அவரது மனம் ஆழம் காண முடியாத கருத்தாழத்தையும் தங்கள் சிருஷ்டியிலே வைத்து மலைகளையும் கடல்களையும் யார் உண்டாக்குகிறார்களோ, கல்லும் புல்லும், இலையும் தளிரும், மரமும் மலையும் நமக்கு ஊமைகளாயிருக்க அவற்றின் மொழியை உணர்ந்து தெய்வத்தின் திருக்கை யழகைத் தெளிந்து யார் வெளிப்படுத்துகிறார்களோ, மின்னல் வெட்டுப் போன்ற சில வார்த்தைகளிலே மக்களுடைய முரட்டு இருதயத்தைப் பண்படுத்த யார் வல்லவர்களோ, அந்த மேதாவிகள், அந்தத் தெய்வப் பிறப்பினராகிய கவிஞர்கள், இந்த இசையை நுகர்ந்து நுகர்ந்து மகிழ்கிறார்கள்.

பாரதியார் இந்த இயற்கைச் சங்கீதத்திலே மனத்தைப் பறிகொடுத்தவர்:

"கானப் பறவை
கலகலெனும் ஓசையிலும்
காற்று மரங்களிடைக்
காட்டும் இசைகளிலும்
ஆற்றுநீர் ஓசை
அருவி ஒலியினிலும்
நீலப் பெருங்கடலெந்
நேரமுமே தானிசைக்கும்

ஓலத் திடையே
உதிக்கும் இசையினிலும்
......நெஞ்சைப்
பறிகொடுத்தேன் பாவியேன்.''
—குயிற்பாட்டு.

மிகவும் கூர்மையான காது படைத்தவர்களைத் தமிழில், 'எஃகுச் செவி படைத்தவர்கள்' என்று சொல்லுவார்கள். பாரதியாரும் அவரோடு சேர்ந்த கவிஞர் கூட்டத்தினரும் எஃகுச் செவி படைத்தவர்கள்; முதல் தரமான காதுகளை உடையவர்கள். நாமோ மரச்செவி படைத்தவர்கள்; மூன்றுந்தரமான காதுகளைப் பெற்றவர்கள்.

இரண்டாந் தரமென்று நடுவிலே ஒன்று இருக்கிறது. இயற்கைச் சங்கீதம் இயற்கைத் தேவியின் நடனத்திலே, ஒய்யாரச் சிரிப்பிலே, உல்லாச நடையிலே உண்டாவது. மனித லோகத்திலே வேறு ஒரு வகை இயற்கைச் சங்கீதம் உண்டு. அதில் இயற்கையின் மணம் அதிகமாகவும் செயற்கையின் மணம் கொஞ்சமாகவும் இருக்கின்றன. முன்னே சொன்ன இசையிலே பாட்டு இல்லை; வெறும் இசைதான் இருக்கிறது. இப்பொழுது சொல்லும் சங்கீதத்திலே பாட்டும் இருக்கிறது. பாட்டென்றால் கவிதையும் கூட வருவதுதானே? இந்தச் சங்கீதத்தைக் கேட்பதற்குக் கூட, 'நாகரிகம் படைத்த' நமக்குக் காதுகள் இல்லை.

இந்தப் பாட்டிலே ஓசை இனிமையும் கருத்தழகும் மலிந்து கிடப்பதை நாம் உணர்வதில்லை. சங்கீதக் கச்சேரி என்று பேர் வைத்துக்கொண்டு அதற்கு ஓர் இடமும் பக்க வாத்தியங்களும் காலமும் நிர்ணயித்துப் பாடுகிற செயற்கை யிசையிலே மயங்கிக் காக

கொடுத்துக் கேட்கப் பழகின நமக்கு இந்தப் பாட்டிலே நாட்டம் செல்வதில்லை.

வயல் வெளியிலே ஏற்றத்தால் தண்ணீர் இறைக்கிறார்களே, அங்கே நடைபெறும் இயற்கைச் சங்கீதக் கச்சேரியைக் கேட்க விருப்பமுள்ளவர்கள் போய்க் கேளுங்கள். ஏற்றத்தில் ஏறி மிதிப்பவன் ஒருவன்; கீழே சால் பிடிப்பவன் ஒருவன். இந்த இரண்டு பேர்களே அந்தக் கச்சேரியை நடத்துகிறார்கள். ஏற்றமும் சாலுமே பக்கவாத்தியங்கள். முக்கியமான சங்கீத வித்துவான் சால்பிடிப்பவன். அவன் பாடும் பாட்டிலே இசை பொங்குகிறது. கருத்து உள்ளடங்கி இருக்கிறது. இரண்டையுமே உணர்ந்து இன்புறுபவர்கள் உலகத்தில் சிலரே. வான விதானத்தின் கீழே பச்சைப் பயிரின் அழகு படர்ந்த பரப்பில், ஏற்றநீர் ஓடும் சலசலப்பு ஒலியானது சுருதிபோட, சாலை முகக்கும் போதும் மேலே கவிழ்க்கும்போதும் தாளம் பிறக்கப் பாடும் அந்த ஏற்றக்காரர்களுடைய சங்கிதம், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள், ஓர் இடத்திற்குள் சிறைப்படவில்லை. அவர்கள் உள்ளம் விரிந்து உவகை பொங்கும்போது வேலையிலே முனைகிறார்கள். அவர்கள் தம் உடல் முழுதும் வளைந்து வேலைசெய்யும்போது அதனால் உண்டாகும் தேகசிரமத்தை அந்த இனிய பாட்டு மறக்கச் செய்கிறது. அவர்களுடைய உழைப்பில் சங்கீதம் இன்பத்தைப் புகுத்துகிறது. தம்மை மறந்து உழைக்கும் அவர்களுக்கு அந்த இசையே நிழலாகவும் சோறாகவும் இருந்து சிரம பரிகாரத்தை உண்டாக்குகிறது. சங்கீதம், பாடுபவனுக்கும் கேட்பவனுக்கும் ஒருங்கே இன்பமூட்டுகிறதென்ற தத்துவத்தை அவர்களிடம் நாம் தெளிவாகக் காணலாம். ஏற்றப் பாட்டு ஒன்றுதானா? நெல் இடிக்கும் பெண்கள், காரை குத்தும் மங்கையர் முதலிய மெல்லியலார் கூட்டத்திலே பிறக்கும் நயமான இசையைக் கேட்டுப் பாருங்கள். தும்மியடிக்கும்போது அவர்கள் வளைக்கரங்கள் குலுங்கப்

*பாடும் சங்கீதத்திலே உண்டாகும் இன்பத்துக்கு ஈடு உண்டா?*

*பாரதியார் இயற்கையோடு இணைந்த இந்த இசையிலும் மனதைப் பறிகொடுத்துவிடுகிறார்.*

"ஏற்றநீர்ப் பாட்டின்
இசையினிலும் நெல்இடிக்கும்
கோற்றொடியார் குக்குவெனக்
கொஞ்சும் ஒலியினிலும்
சுண்ணம் இடிப்பார்தம்
சுவைமிகுந்த பண்களிலும்
பண்ணை மடவார்
பழகுபல பாட்டினிலும்
வட்டமிட்டுப் பெண்கள்
வளைக்கரங்கள் தாம்ஒலிக்கக்
கொட்டி இசைத்திடுமோர்
கூட்டமுதப் பாட்டினிலும்
......நெஞ்சைப்
பறிகொடுத்தேன் பாவியேன்".

*இந்த மாதிரியான பாடல்களிலே நெஞ்சைப் பறி கொடுத்தவர்கள் பலர். சிலப்பதிகாரம் செய்த இளங்கோவடிகள், ஆழ்வார்கள், நாயன்மார்கள், கம்பன் முதலிய கவிஞர் பலரும் இந்தக் கூட்டமுதப் பாட்டிலே உள்ளத்தைக் கொள்ளை கொடுத்தவர்களே.*

*அவர்கள் நூல்களை எடுத்துப் பாருங்கள். இளங்கோவடிகள், பெண்கள் அம்மானை ஆடும்போதும் பந்தாடும்போதும் பாடும் பாட்டுக்களைக் கவனித்திருக்*

கிறார். அந்த மாதிரியான பாடல்களைத் தாம் இயற்றிய சிலப்பதிகாரத்தில் சேர்த்திருக்கிறார். அம்மானை வரி, கந்துக வரி என்ற பெயரோடு அவருடைய காவியத்திலே உள்ள பாடல்களைப் படிக்கும்போது முன்னே சொன்ன இயற்கையோடு இணைந்த பாட்டுக்களைக் கேட்டு மயங்கினவர் இளங்கோவடிகள் என்பதை உணரலாம். திருவாசகத்தில் தோள் நோக்கம், சாழல், திருவுந்தி என்ற பெயர்களோடு வரும் பாட்டுக்களெல்லாம் இந்த இயற்கைப் பாட்டுக்களின் போலிகளே.

அந்தப் பாட்டுக்களின் உருவம், உலகில் பாமர மக்களும் குழந்தைப் பெண்களும் பாடும் பாடல்களிலிருந்து திருடிக்கொண்டது. கருத்து மாணிக்க வாசகருடையது. அவற்றின் உருவத்திலும் ஓசையிலும் நாடோடி உலகத்தைக் காண்கிறோம்; கருத்திலே மாணிக்கவாசகரை உணருகிறோம்.

இளங்கோவடிகள் முதல் பாரதியார் வரையில் கேட்டு அநுபவித்த அந்த இயற்கைப் பாட்டுக்களை நாமும் கேட்கப் பழக வேண்டாமா?

## 2

# பாட்டி கதையும் பாட்டும்

ஒரு மடமங்கை, எல்லா நலமும் வளமும் நிரம்பியவள், ஓர் அழகிய மஞ்சத்தில் படுத்துக் கிடக்கிறாள். அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிறாள். அவளுக்கு நோய் ஒன்றும் இல்லை. ஆயினும் அவ்வாறு சோர்ந்து கிடப்பதற்குக் காரணம் என்ன? அருகே, ஒரு தோழி சைத்தியோபசாரம் செய்து கொண்டு நிற்கிறாள். அவளருகில் ஒரு கிழவி அமர்ந்து கொண்டிருக்கிறாள். நங்கையின் எழில் ததும்பும் மேனியிலே வாட்டமும், ஒளி துளும்பும் முகத்திலே கவலைக் குறியும் குயிலினிமை கொண்ட குரலிலே துயர்த் தொனியும் மேலோங்கி நிற்கின்றன.

''வந்துவிடுவார்; கவலைப்படாதே'' என்று அந்தக் கிழவி ஆறுதல் சொல்கிறாள்.

''வந்து விடுவாரா?.. எங்கே, இன்னும் வரக் காணோமே!.. சிறிது போசாமல் இருங்கள்.. அது என்ன சத்தம்?.. தோழீ, ஓடிப்போய்ப் பார்: அவர் தேர் வருகிறதா என்று பார்த்துவா'' என்று அடிக்கடி நங்கை சொல்லுகிறாள். தோழியும் அவளைத் திருப்தி செய்வதற்காகப் போய்ப் பார்த்து விட்டு வருகிறாள். 'அவர் தேர் வரவில்லை' என்பதைத்தான் திருப்பித் திருப்பிச் சொல்லும் நிலையில் இருக்கிறாள் தோழி. பாவம்! ஆவலோடு எதிர்பார்க்கும் நாயகிக்கு ஏமாற்றம் உண்டாகிறது.

அந்த நாயகியின் நாயகன் வெளி நாட்டுக்குப் போயிருக்கிறான். தன்னுடைய அரசன் செய்யும் போருக்குத் துணையாகவோ, தானே ஒரு படைக்குத்

தலைமை வகித்தோ, வேறு ஏதோ முக்கியமான காரியத்தை மேற்கொண்டோ என்றும் பிரியாத தன் அருமைக் காதலியைப் பிரிந்துபோயிருக்கிறான்.

கணமேனும் அவனைப் பிரிந்தறியாத காதலி இந்தப் பிரிவினால் அளவற்ற துயரத்துக்கு உள்ளாகிறாள். அவன் வந்துவிடுவான் என்ற நம்பிக்கையால் உயிர் வாழ்கிறாள். ஒரு நாள் கழிவது ஒரு யுகமாக இருக்கிறது. உணவு செல்லவில்லை. அவளுக்கு விருப்பமான பொருள்கள் எல்லாம் இப்போது வெறுப்பைத் தருகின்றன. மலரணிந்து ஆடை புனைந்து அணிகளைப் பூட்டி எழிலுருவாகத் திகழ்ந்த அவள் இப்போது அவற்றை ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

இப்படி எத்தனை நாள் இருப்பது? அவளுடைய உயிர்த்தோழி, நாயகன் தன் கடமையைச் செய்யப் போயிருக்கிறானென்பதையும், விரைவில் வந்து விடுவான் என்பதையும் தக்க காரணங்களைக் கூறி வற்புறுத்துகிறாள். அதெல்லாம் நாயகியின் காதில் விழுகிறதா, என்ன?

அந்தக் கிழவி இருக்கிறாளே, அவள்தான் நாயகியின் செவிலித் தாய்; தலைவியை இளம்பருவ முதல் தாலாட்டிச் சீராட்டி வளர்த்தவள். தன்னுடைய கண்மணியைப் போன்ற தலைவி வாடிய பசுங்கொடி போலத் துவண்டு கிடப்பதைப் பார்த்து அவளுடைய மனம் உருகுகிறது. "அவர் வந்து விடுவார்" என்று சொல்வதனால் அவ்விள நங்கைக்குத் துக்கம் அதிகமாகிறதே ஒழியக் குறைவதாகக் காணவில்லை. 'இவளுக்கு அவரைப்பற்றிய நினைப்பை மூட்டுவதே பிசகு போலும்!' என்று அநுபவத்தில் தேர்ந்த அவள் கண்டு பிடிக்கிறாள்; 'இவள் மனத்தை அந்த எண்ணத்திலிருந்து மீட்க என்ன வழி?' - யோசிக்கிறாள் கிழவிப் பாட்டி.

பாட்டி, கதை சொல்வதிலும் குழந்தைகள் மனத்தையும் கவரும் பாட்டுக்களைச் சொல்வதிலும்

மிகவும் தேர்ந்தவள். தமிழ் நாட்டுப் பாட்டிகள் யாவரும் அப்படித்தான் இருந்தார்கள்.

கிழவி கதை சொல்ல ஆரம்பிக்கிருள்: ''ஒரே ஒரு காட்டிலே ஒரே ஒரு யானை. அது மனம் போனபடி திரிந்து கொண்டிருந்தது. ஓர் ஊருக்குப் பக்கத்திலே வந்தது. அப்போது ஒரே ஒரு குருவியாம். அந்தக் குருவி வந்து ஆனைமேலே உட்கார்ந்ததாம். 'என்னடா இது குறுகுறு என்கிறதே' என்று ஆனை தும்பிக்கையாலே தடவிப் பார்த்தது. குருவி அதன் கைக்குப் படாமலே இருந்தது. ஆனையால் ஒன்றும் செய்ய முடியவில்லை. 'யாரப்பா நீ?' என்று கோபத்தோடு கேட்டது. 'நான் தான் சிட்டுக் குருவி; ஆனை மாமாவைப் பார்க்க வந்தேன். சௌக்கியந் தானே? உங்கள் ஊரில் எல்லோரும் சுகமா?' என்று தைரியமாகக் குருவி பேசியது.''

என்ன ஆச்சரியம்! இந்தக் குருவிக் கதை பிரிவுத் தீயிலே வதங்கிக் கிடக்கும் அந்த மடமங்கையின் கவனத்தைத் திருப்புகிறதே! கிழவி, ஆனையும் குருவியும் சிநேகம் பண்ணிக்கொண்டு எங்கெங்கேயோ போய் என்ன என்னவோ பண்ணினவென்று கதை சொல்கிருள். தலைவி முதலில் அசட்டையாகக் கேட்டாள். பிறகு கொஞ்சம் கூர்ந்து கவனித்தாள். அப்பால் அதிலே ஈடு பட்டு விட்டாள்.

கிழவி மிகவும் தந்திரக்காரி; தலைவி கதையைக் கவனிக்கிருளா இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ள எண்ணி, சுவாரசியமான இடத்தில் கொஞ்சம் மௌனம் சாதிக்கிருள்.

தலைவி படபடப்போடே, ''அப்புறம்?'' என்று கேட்கிருள்.

கிழவி தன் தந்திரம் பலித்து விட்டதென்று எண்ணி மகிழ்கிருள். பிறகு கதை வர்ணனைகளோடும் தொனி பேதங்களோடும் உரையாடல் நயங்களோடும் படர்கிறது.

ஒவ்வொரு நாளும் வெவ்வேறு கதைகளைச் சொல்லி அந்தப் பாட்டி பொழுதைப் போக்குகிறாள். நடுநடுவிலே தலைவிக்கு நாயகனது நினைவு வந்து துன்புறுத்தினாலும் கதையைக் கேட்பதிலே அவள் ஊக்கம் அடைகிறாள்.

பாட்டி, கதையோடு நின்று விடுகிறாளா? இல்லை, இல்லை. ஒரே மாதிரியான சரக்கையே வெளியிட்டால் சலிப்பு ஏற்பட்டு மறுபடியும் வேதாளம் முருக்க மரம் ஏறிக்கொள்ளும் என்பதை அவள் நன்றாக அறிவாள். சிரிக்கச் சிரிக்கச் சில கதைகளைச் சொல்கிறாள். மன நோயினால் மெலிந்து கிடந்த தலைவி களுக்கென்று சிரித்து விடுகிறாள்.

தலைவியின் மூளைக்கு வேலை கொடுத்து அவளுடைய யோசனையைத் திருப்பிவிடுவதற்கு மற்றோர் உபாயத்தைச் செய்யத் தொடங்குகிறாள் செவிலித் தாய். புதிர் போடுகிறாள். ''பிறையைக் கல்வி மலை நடக்கிறது'' என்று விடுகதை போடுகிறாள்; தலைவி யோசனையில் ஆழ்கிறாள். ''யானை'' என்று அதை விடுவிக்கிறாள்.

''நீரில் முழுக்மாட்டான், நீறு பூசும் பிராம்மணன். செக்கச் சிவந்திருப்பான். சிவப்பு ரத்தினம் போலிருப்பான். நீரிலே முழுகி விட்டால் ஊரில் வரும் காக்கை யாவான்— இது என்ன?'' பாட்டி போட்ட புதிர் லேசில் விடுவிக்க முடியவில்லை. உடன் இருக்கும் தோழியும் இதில் சேர்ந்து கொள்கிறாள். தலைவியும் யோசிக்கிறாள். அவள் தோன்றியதை எல்லாம் சொல்கிறாள். கிழவி ''இல்லை, இல்லை'' என்று மறுத்து வருகிறாள். ''நீ தான் சொல், பாட்டி; எங்களுக்குத் தெரியவில்லை'' என்று தலைவி தோல்வியை ஒப்புக் கொள்கிறாள்.

''நெருப்பு'' என்று பாட்டி கதையை விடுவிக்கிறாள்.

''பூ! இதுதானா?'' என்று தலைவி சொல்லிவிட்டு, ''இது தெரியவில்லையே!'' என்று அங்கலாய்க்கிறாள்.

ரோசம் மூளுகிறது. ''வேறு ஒன்று சொல்; நான் விடு விக்காவிட்டால் பார்'' என்று வீறு பேசுகிறாள் தலைவி. பாட்டி இந்தத் தடவை சிறிது சுலபமாகப் புதிர்போடு கிறாள். அதைத் தலைவி விடுவித்து விட்டு வெற்றிபெற்ற வீரன் அடையும் மகிழ்ச்சியை அடைகிறாள். இந்த விளையாட்டிலே பொழுது போவதே தெரியவில்லை.

பாட்டியிடம் இன்னும் புதிய சரக்கு இருக்கிறது. கதைகளும் விடுகதைகளும் சொல்லி அலுத்துப்போனால், அவள் ஆரம்பிக்கிறாள் பாட்டை. என்ன பாட்டுத் தெரியுமா? புத்தகத்தில் இல்லாத பாட்டு. வாய் மொழியாகப் பாட்டிகளின் பரம்பரையிலே வந்த பாட்டு அது. ஒடப் பாட்டு, மோதிரப் பாட்டு முதலிய நாடோடிப் பாட்டுக்களைப் பாட்டி ராகத்தோடும் அபி நயத்தோடும் சொல்லுகிறாள். தலைவி சொக்கிப் போகிறாள்.

* * * *

இந்தக் காட்சிகளை எங்கோ நாடகத்தில் கண்டதாக எண்ண வேண்டாம். தொல்காப்பியத்தில், தமிழில் உள்ள இலக்கிய இலக்கணங்களின் வகைகளைச் சொல்லும் பகுதியில், தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஆறுதல் கூறும் செவிலித் தாய் உபயோகப்படுத்தும் இலக்கியங்கள் இன்னவை என்ற செய்தி சில சூத்திரங்களில் சொல்லப் படுகின்றன. அவற்றிலும் அவற்றின் உரைகளிலும் உள்ள வற்றை ஊன்றிக் கவனிக்கும்போது மேலே சொன்ன காட்சிகளை நம் அகக் கண்ணில் காண்கிறோம். ஆனைக் கதை போன்ற கதைகளுக்கு, 'பொருளொடு புணராப் பொய்ம்மொழி' என்றும், சிரிப்பு மூட்டும் கதைகளுக்கு, 'பொருளொடு புணர்ந்த நகைமொழி' என்றும், விடு கதைகளுக்கு, 'பிசி' என்றும், நாடோடிப் பாட்டுக் களுக்கு, 'பண்ணத்தி' என்றும் பெயர்கள் பழங் காலத்தில் வழங்கினவென்று தெரிகிறது. 'தலைமரளை

வசைப்புறுத்தும் செவிலியர் உரைத்து நகுவித்துப் பொழுது போக்குதற்கு உரிய' வை இவை என்று உரையாசிரியர் எழுதுகிறார்.

பண்ணத்தி என்பது பாட்டும் உரையும் போல இருக்குமென்றும், எழுதும் பயிற்சியில்லாத புறவுறுப்புக் களை உடையதென்றும் இலக்கணம் அமைத்திருக் கிறார்கள். வஞ்சிப்பாட்டு, மோதிரப் பாட்டு, கடகண்டு என்று மூன்று பாட்டுக்களைப் பேராசிரியர் என்ற உரை காரர் உதாரணங்களாகக் காட்டுகிறார். இவற்றை யெல்லாம் இக்காலத்தார் 'பாமர இலக்கியம்' (Folk-lore) என்று சொல்லுகிறார்கள்.

இயற்கைப் பாட்டாகிய நாடோடிப் பாட்டை இலக்கிய வகையில் ஒரு வகையாகச் சேர்த்து எண்ணினர் பண்டைக் காலத்து ஆசிரியர்கள் என்ற உண்மையைத் தொல்காப்பியத்திலிருந்து நாம் அறி கிறோம். இப்போது உள்ள தமிழ் நூல்களில் மிகப் பழமையானது தொல்காப்பியம்; மிகப் புதுமையானது பாரதியார் பாட்டு. தொல்காப்பியம் இலக்கணம் அமைத்த அந்தப் பாட்டைக் கவி பரம்பரையினரும் பாராட்டினார்கள்; பாரதியார் வரையில் அந்தப் பாராட்டு வந்து கொண்டேயிருக்கிறது.

அவர்களுடைய பாராட்டைப் பெற்ற நாடோடி இலக்கிய உலகத்தில் நாமும் கொஞ்சம் நுழைந்து பார்க்கலாம்.

# 3
# ஏற்றக்காரன் காதல்

நாடோடிப் பாட்டுக்களில் பல வகை உண்டு. ஆங்கிலத்தில் 'பாமரர் பாட்டுக்கள்' (FOLK - SONGS) என்று குறிக்கும் பாடல்களையே நாடோடிப் பாட்டுக்கள் என்று நாம் வழங்குகிறோம். நாடு முழுவதும் ஜீவனோடு உலவும் பாடல்கள் அவை. அவற்றை இயற்றியவர் இன்னாரென்று தெரியாது.

தொழிலாளிகள், குடியானவர்கள், வேலை செய்யும் பெண்டிர் முதலியவர்கள் தங்கள் தங்கள் வேலையினால் உண்டாகும் சிரமத்தைப் போக்கிக்கொள்ளப் பாடும் பாட்டுகள் ஒரு வகை. ஏழை மக்கள் பொங்கல் முதலிய விசேஷ காலங்களில் ஒன்று கூடி விழா அயரும்போது ஆடியும் பாடியும் இசைக்கும் பாடல்கள் ஒரு வகை.

குழந்தைகளைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டி நிலாக்காட்டிச் சோறூட்டித் தலையை ஆட்டித் தோளை வீசச் செய்து விளையாட்டுக் காட்டும் தாய்மார்கள் குழந்தையோடு குழந்தையாகப் பாடும் குழந்தைப் பாட்டுக்கள் ஒருவகை. சிறுமியரும் சிறுவர்களும் தாம் ஆடும் பல வகை விளையாடல்களுக்கு இடையே பாடும் பாடல்கள் ஒருவகை. எல்லா வகைச் சாதியினரும் தங்கள் குடும்பத்திலே நிகழும் கல்யாணம் முதலிய நிகழ்ச்சிகளிலே சம்பிரதாயமாகப் பாடிவரும் பாடல்கள் ஓர் இனம். இவ்வாறு பலவகைப்பட்டு நிற்கும் இப்பாடல்கள் எல்லாமே புலவர் உலகத்துக்கு புறம்பாய், இலக்கண வேலிக்கு அருகே வராமல் நாட்டில் ஓடி உலவிக் கொண்டிருக்கின்றன.

தொழில் செய்வார் பாடல்களில் தலைமை இடத்தை வகிப்பது ஏற்றப்பாட்டு.

'ஏற்றப்பாட்டுக்கு எதிர்ப்பாட்டு இல்லை' என்பது ஒரு பழமொழி. அந்த பாட்டைப் போலக் கற்றறிந்த புலவன் பாடுவது அருமையாம்.

ஏற்ற மரம், கிணறு நிறைந்த பிரதேசங்களில் வேளாண்மைக்கு உதவியாக இருக்கும் கருவி. சால் பிடிக்கும் ஆள் ஒருவன் இருப்பான்; மரத்தின் மேல் ஏறி மிதிப்பவர் ஒருவரோ, இருவர் அல்லது மூவரோ இருப்பார்கள். குனிந்து நிமிர்ந்து சால் பிடிப்பவனே பாட்டுப் பாடுவான். அவனுடைய பாட்டிலே காதல் இருக்கும்; ராமாயணம் வரும்; பாரதக் கதை படரும். அந்த ஏற்றப் பாட்டிலக்கியத்திலே வரும் காதற் காட்சி ஒன்றைப் பாருங்கள்.

*　　*　　*　　*

வேலையன் கீழே இருந்து சால் பிடித்து நீர் இறைக்கிறான். சுப்பையன் ஏற்ற மரத்தின்மேல் மேலும் கீழும் ஏறி மிதிக்கிறான். சுப்பையன் நெடுந்தூரத்தில் எதையோ காண்கின்றான். அந்தக் காட்சி அவனுக்கு ஒரு வகையான இன்பத்தை உண்டாக்குகிறது. தன்னுடைய உணர்ச்சியைத் தன் தோழனுக்கு வெளியிட வேண்டுமென்ற விருப்பம் அவனுக்கு எழுகிறது. வேலையனுக்கு அதைப் பார்க்க முடியாது. அவன் கீழே அல்லவா இருக்கிறான்? சுப்பையன் சொல்லத் தொடங்குகிறான்:

''வேல மரப் பாதையிலே — வேலையா'' என்று சொல்லி வரும்போது வேலையன் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. அவன் தன் வேலையே கண்ணாக இருப்பவன். பரந்த வெளி முழுதும் தன் பார்வையைத் திரியவிடும் சுப்பையனைப் போன்றவன் அல்ல.

''என்ன, கதை ஆரம்பித்துவிட்டாயா? எனக்கு வேலையிலே கண்ணிருக்கு, சுப்பையா'' என்று அவன் பதில் சொல்கிறான்.

சுப்பையன் விடவில்லை. வேலையனுடைய கவனத்தை இழுக்க அவனுக்குத் தெரியும். தான் காணும் காட்சி அப்படிச் சுலபமாகப் புறக்கணிக்கக் கூடியது அன்று என்பதை அவன் உணர்கிறான்.

''வேலி ஓரம் போகுது பார்'' என்று மேலே அந்தக் காட்சியின் நிலைக்களத்தைச் சித்திரிக்கிறான்.

வேலையனுடைய கவனம் இப்போது திரும்புகிறது. வேலமரப் பாதையும், அந்தப் பாதையின் இருமருங்கும் உள்ள வேலிகளும் அவனுக்குத் தெரிந்தவைகளே. சுப்பையன் கண்ணுக்குப் படும் உருவம் மாடா? மனிதனா? மாடானாலும் சரி, மனிதனானாலும் சரி, பாதையின் நடுவிலே தானே வரவேண்டும்? வேலி ஓரமாக வர நியாயம் இல்லையே! இப்போது வேலையனுக்கு விளங்குகிறது. பாதையின் ஓரத்திலே மெல்ல மெல்ல நடந்து வருவது நிச்சயமாக ஒரு பெண் உருவந்தான். இந்த எண்ணத்தை உறுதிப் படுத்திக்கொள்ள விரும்புகிறான்.

''வேட்டித்துணி போட்டிருக்கோ சுப்பையா?'' என்று கேட்கிறான். மேல் இருப்பவன் 'ஆம்' என்று சொல்வதை அவன் விரும்பவில்லை. வேலையன் எதை எதிர் பார்த்தானோ அதே பதில்தான் வருகிறது.

''சித்தாடை கட்டிருக்கு — வேலையா.'' சரி; இப்போது, வருகிறவள் ஒரு பெண், அதிலும் சிற்றாடை கட்டிய இளம் பெண் என்பதை வேலையன் உணர்ந்து கொண்டான். அவன் உள்ளத்திலே நிருமித்துக் கொண்ட வேலமரப் பாதையிலே, வேலி ஓரத்திலே ஒரு பெண்ணுருவத்தை எழுதிக்கொள்ள முயல்கிறான். 'அந்தப் பெண் யார்? எப்படி இருக்கிறாள்? — இந்தச் சந்தேகங்கள் தொடர்ச்சியாக எழுகின்றன.

''சின்னக்குட்டி போலிருக்கு—சுப்பையா'' என்று சொல்கிறான். சிற்றாடை கட்டியவள் சின்னக் குட்டி யாகத்

தானே இருக்கவேண்டும்? இது பெரிய ஊகம் அல்லவே? ஆனாலும் பேச்சுக் கொடுத்துச் சமாசாரம் வருவிக்க வேண்டுமே!

சுப்பையன் இப்போது வருணிக்க ஆரம்பித்து விடுகிறான்.

"கண்ணாடி தோற்குமடா — வேலையா" என்கிறான். அவளுடைய இள மேனியில் வெயில் படும்போது பளபளக்கிறது போலும்!

மேலே உரையாடல் வேகமாகப் படர்கிறது.

"கண்ணைப் பறிக்குதோடா—சுப்பையா" என்று வேலையன் கேட்கிறான். அவள் அருகில் வந்து கொண்டிருக்கிறாள். பளபளப்பாகத் தெரிந்த அழகுப் பிழம்பிலே இப்போது தனித்தனியே அவயவங்கள் புலப்படுகின்றன. அந்தக் கண்ணாடி தோற்கும் உருவத்துக்குக் கிரீடம் சூட்டினது போல விளங்கும் கொண்டை மைபோலக் கறுத்துப் பளிச்சிடுகிறது; அந்தக் கருமையின் நடுவிலே வெள்ளைப் பூ விளக்கமாகத் தெரிகிறது. சுப்பையன் வருணனையைத் தொடர்கிறான்:

"கொண்டையிலே பூவிருக்கு—வேலையா." வேலையன் இப்போது தன் மனத்திலே குறிப்பிட்ட ஒரு பெண் உருவத்தைப் பிரதிஷ்டை செய்து கொண்டான். அவள், தன் காதலுக்குப் பாத்திரமானவளாகத்தான் இருக்க வேண்டுமென்பது அவன் யோசனை. தான் நினைக்கும் அவள்தானா வருபவள் என்ற சந்தேகம் நீங்கின பாடில்லை.

"கொளச்சு முடி போட்டிருப்பா— சுப்பையா" என்று அகக்கண்ணால் காணும் காட்சியை அவன் வருணிக்கிறான்.

அவள் வெகு வேகமாக வருகிறாள்.

**"காத்தெனவே பறந்து வரா—வேலையா."** இவ்வளவு அவசரம் எதற்கு? ஒருகால் தனக்குக் கஞ்சி கொண்டு வரலாமென்று நினைக்கிறான் வேலையன். அவனுடைய அத்தை மகள் ரத்தினந்தான் அவள் என்று நிச்சயம் செய்து கொண்டான்.

**"கஞ்சி கொண்டு வாராளோடா — சுப்பையா"** என்று கேட்கிறான். அவள் கையில் கஞ்சி இல்லை. கதிர் அறுக்கும் அரிவாள் இருக்கிறது.

**"கதிரரிவாள் இருக்குதடா"** என்று சுப்பையன் சொல்கிறான். வேலையனுக்கு ஒன்றும் புரியவில்லை.

**"கதிரறுக்கும் காலமல்ல"**வே என்கிறான். சுப்பையன் ஒரு சமாதானம் சொல்கிறான்:

**"ஆட்டுத் தழை அறுப்பாள்டா!"** என்கிறான்.

உண்மையில், வருகிறவள் தன்னுடைய காதலனைப் பார்க்கத்தான் வருகிறாள். அவன் கண்ணிலே பட ஏதோ ஒரு காரணத்தை மேற்கொண்டு வருகிறாள். வேலையனுக்குப் படபடக்கிறது.

**"அண்டையிலே வந்துட்டாளோ?"** என்று வேகத்தோடு கேட்கிறான்.

**"அன்னம் போலே முன்னே வாரா"** என்று சுப்பையன் சொன்னதும் அவனுக்கு வேலை ஓடவில்லை. 'வேலையிலே கண்ணிருக்கு' என்று வீரம் பேசினவன் மயங்கி நிற்கிறான். அவன் மனத்தில் இருந்த காதல் வெளிப்பட்டுப் பொங்குகிறது. வருகிறவள் தன் காதலிதான் என்பதில் இனிச் சந்தேகமே இல்லை. அவன் பல்லை இளித்துக் கொண்டே, **'அவள் என்—அத்தை மகள் ரத்தினம்டா'** என்று இரகசியத்தை வெளியிடுகிறான். அந்த இரகசியத்தை நன்றாகத் தானும் அறிந்து கொண்டதை, **"அவள் உரிமையுள்ள புருசனும் நீ"** என்ற வார்த்தைகளால் தெரிவித்துச் சுப்பையனும் மகிழ்கிறான்.

"அடுத்த மாசம் பரிசம் வைப்பேன்" என்று வேலையன் கல்யாண முகூர்த்தத்துக்கு நாள் குறிப்பிட்டுவிடுகிறான். சுப்பையனுக்கு அதுவே கல்யாண அழைப்பாகவும் ஆகிவிடுகிறது போலும்! பாட்டு முழுவதையும் இப்போது பாருங்கள்.

வேலமரப் பாதையிலே— வேலையா
வேலையிலே கண்ணிருக்கு—சுப்பையா

வேலிஓரம் போகுதுபார்—வேலையா
வேட்டித்துணி போட்டிருக்கோ—சுப்பையா

சித்தாடை கட்டிருக்கு—வேலையா
சின்னக்குட்டி போலிருக்கு—சுப்பையா

கண்ணாடி தோற்குமடா—வேலையா
கண்ணைப் பறிக்குதோடா— சுப்பையா

கொண்டையிலே பூவிருக்கு—வேலையா
கொளச்சுமுடி போட்டிருப்பா—சுப்பையா

காத்தெனவே பறந்துவாரா—வேலையா
கஞ்சிகொண்டு வாராளோடா—சுப்பையா

கதிரரிவாள் இருக்குதடா—வேலையா
கதிரறுக்கும் காலமல்ல—சுப்பையா

ஆட்டுத்தழை அறுப்பாளடா—வேலையா
அண்டையிலே வந்துட்டாளோ—சுப்பையா

அன்னம் போலே முன்னேவாரா— வேலையா
அவள் என் - அத்தைமவ ரத்தினம்டா—சுப்பையா

அவள் உரிமையுள்ள புருசனும் நீ—வேலையா
அடுத்த மாசம் பரிசம் வைப்பேன்—சுப்பையா !*

---

*இந்தப் பாட்டை உதவியவர் : திரு. கி. ரா. கோபாலன், கும்பகோணம்.

# 4

# ராமபாணம்

ராமாயண பாரதக் கதைகள் இத்தனை விதமாகத்தான் இலக்கியத்தில் புகுந்துகொண்டிருக்கின்றன என்பதற்கு அளவே இல்லை. காவியமானாலும் சரி, பிரபந்தமானாலும் சரி, தோத்திரமானாலும் சரி, சாத்திரமானாலும் சரி - எல்லாவற்றிலும் ராமனும் கண்ணனும், வீமனும் அருச்சுனனும் உலா வருகிறார்கள். சங்கீதத்தில், சிற்பத்தில், பரதநாட்டியத்தில் கண்ணனுடைய லீலைகளையும், ராமனுடைய வீரச் செயல்களையும் விலக்கி விட்டால் அந்தக் கலைகள் ஜீவனற்று ஒளியிழந்து சோரும் என்று சொல்வதில் தவறு ஒன்றும் இல்லை. பாரத பூமியினது மண்ணின் சாரத்தோடு இந்த இதிகாசக் கதைகள் கலந்து செடியாகவும் கொடியாகவும் மரமாகவும் பூம்பொழிலாகவும் பரிணமித்து வளர்ந்தோங்கி நிற்கின்றன.

ராமனுடைய பெயரைச் சொன்னாலே அழகு தானாக வந்துவிடுமோ என்னவோ! வடமொழியிலே காவிய ருசி நிரம்பி நிற்கிறது. வால்மீகி ராமாயணம் என்றால், தமிழிலேகூடக் கம்பர் பாடிய ராமகதைக்குத்தானே புலவர்களெல்லாம் சேர்ந்து மணிமுடி சூட்டுகிறார்கள்? ஹிந்தி மொழியிலே துளஸிதாஸர் பாடிய ராமசரிதத்திற்கு உள்ள பெருமதிப்பை அளவிட முடியுமா?

படித்த புலவர்களும், கவி பாடும் கவிஞர்களும் ராம கதையிலே மகிழ்ந்து போகிறார்கள் என்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. அரிச்சுவடியைக் கையால் தொட்டும் பாராத நிரட்சர குட்சிகள், சோற்றுக்குத்

திண்டாடிப் புலைத்தொழில் புரிந்து வயிறு வளர்க்கும் மக்கள், காட்டுமிராண்டிகளென்று நாகரிக மக்கள் நாமகரணம் செய்யும் பூர்வகாலக் குடிகளின் பரம்பரையினர் இவர்களிடையேயும் ராமனது பிரபாவம் பரவியிருக்கிறதுதான் பெரிய ஆச்சரியம். பாரத தேசத்தில் ஒவ்வொரு பாஷையிலும் ராமாயணம் இருக்கிறது. ராமாயணத்திற்கு இலக்கிய உலகில் ஒரு சிறந்த இடம் எங்கும் உளது. அப்படியே பல பாஷைகளிலும் உள்ள நாடோடி இலக்கியத்திலே ராமனுடைய புகழ் பரவிக் கிடக்கிறது.

தமிழில் ஏற்றப்பாட்டிலும் தாலாட்டிலும் குழந்தை விளையாட்டிலும் வேறு வகையான கிராமப் பாடல்களிலும் ராமாயணத்தின் நறுக்குகளைப் பார்க்கலாம். ராமாயணப் பூம்பொழிலில் பறித்துக்கொண்ட இதழ்கள் அவை. ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாமல், முன் பின் தொடர்ச்சியும் முறையும் இல்லாமல் ராமனுடைய பெயரையும் வீர விளையாட்டையும் பின்னிப் பிணைத்துப் பாடும் நாடோடிப் பாடல்கள் பல.

* * * *

ராமபாணத்தின் பெருமையை இலக்கியத்தில் பல பல இடங்களில் பல பல உருவத்தில் நாம் வாசிக்கிறோம். ஒரே சமயத்தில் பல இலக்குகளை ஊடுருவிச் செல்லும் ராமபாணத்தின் ஆற்றலைக் கம்பர் எவ்வளவு இடங்களில் எவ்வளவு நயமாக வருணிக்கிறார்!

> 'உலையுருவக் கனல் உமிழ்கண் தாடகைதன் உரமுருவி
> மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றுருவாளி'

என்று விசுவாமித்திரர் கூற்றாக வைத்துப் பால காண்டத்திலேயே ராமபாணப் பிரபாவத்தை ஆரம்பித்துவிடுகிறார். அந்த அம்பின் திறமையை

உணர்ந்த தமிழர்கள் பல ஏடுகளை ஒருங்கே துளைத்துச் செல்லும் ஒரு பூச்சிக்கு ராமபாணம் என்ற பெயரையே வைத்துவிட்டார்கள். நூற்றுக்கணக்கான ஏடுகளை ஒரே மாதிரி துளைத்து ஊடுருவிச் செல்லும் அந்தப் பூச்சிக்கு இந்தப் பெயர் பொருத்தமாக இருக்கிறதென்று அவர்கள் நினைத்தார்கள்.

**'வல்லவனுக்கு புல்லும் ஆயுதம்'** என்ற பழமொழி எப்படி வந்தது? எண்ணிப்பாருங்கள். காகாசுர வதத்தில் ராமபிரான் ஒரு துரும்பைக் கிள்ளிப் பாண மாகப் பிரயோகித்தார் அல்லவா? அந்தப் புல்லே பாணமாகிக் காகாசுரனைப் படாத பாடு படுத்தின கதையிலிருந்துதான் அந்தப் பழமொழி பழுத்து வந்திருக்கிறது.

ராமபாணம் பெரிய காரியங்களையெல்லாம் சாதித்தது. சிறிய காரியத்திற்காகப் பெரிய கருவியை உபயோகித்தால், **'சிட்டுக்குருவிக்கு ராமபாணமா?'** என்று பழமொழி சொல்லிப் பரிகசிப்பது நம் நாட்டார் வழக்கம். **'குருவிக்கேற்ற ராமசரம்'** என்று மற்றொரு பழமொழியும் உண்டு. இப்படிப் பெயரிலும் பழமொழிகளிலும் ஒளிரும் ராமபாணம் நாடோடி இலக்கியத்திலே விளங்கும் விதத்தை இரண்டு உதாரணங்களிலே பார்க்கலாம்.

குழந்தைகளுக்கு வார்த்தைகளைக் கற்றுக் கொடுக்கும் தாய்மார்கள் அதற்கென்று சில பாட்டுக் களைச் சொல்லித் தருவார்கள். அந்தப் பாட்டிலே பொருள் தொடர்போ, அபூர்வமான கருத்தோ இருக்க வேண்டும் என்பது அவசியமன்று. வார்த்தைகள் குழந்தைகளின் நாவிலே புரளவேண்டும் என்பதுதான் அவர்கள் கருத்து. இந்தக் காலத்திலே அந்த வார்த்தைகளை அச்சிட்டுப் பக்கத்திலே படம் போட்டுப் பாட புத்தகம் ஆக்கிக் குழந்தைகள் கையில் கொடுக்கிறார்கள்.

குழந்தைகளுக்கு முதல் முதலில் உபாத்தியாயராக இருப்பவள் தாய்தான். அவள் குழந்தைக்குப் போதிக்கும் கல்வி, என்றும் மறவாத வண்ணம் மனத்திலே பதிகிறது. ளகார ணகாரங்களைக் குழந்தைகள் நாக்கு நுனியை மடித்துச் சுருட்டிச் சொல்லவேண்டியிருப்பதால் சிறிது சிரமம் உண்டாகும். சிரமம் தோன்றாமல் அந்த இரண்டு எழுத்தும் வரும்படியான வார்த்தைகளை ஒரு பாட்டிலே வைத்துக் கோத்துச் சொல்லிக் கொடுப்பது பழங்காலத்துத் தாய்மார்களின் வழக்கம்,

கும்ப கோணமே கோணம்
குறவன் நட்டதே சோளம்
ராமர் விட்டதே பாணம்—அது
எங்கே போச்சுதோ காணம்

என்று பாட்டாக வருகிறது, தாய்மாரின் போதனை. கோணம், சோளம், பாணம், காணம் என்ற வார்த்தைகள் ஒவ்வோரடியின் இறுதியிலும் பொருந்திப் பாட்டின் தாளத்தோடு ஒன்றாகி ஒலித்துக் குழந்தைகளுக்கு உற்சாகத்தை உண்டாக்குகின்றன. முதல் இரண்டடியிலே உள்ள கும்பகோணத்திற்கும், குறவன் நட்ட சோளத்திற்கும் அர்த்தத்தில் ஒரு சம்பந்தமும் இல்லை. ஆனால் பின் இரண்டடியிலும் அர்த்தம் தொடர்ந்து வருகிறது. சொற்பழக்கத்தோடு தாய், குழந்தைக்கு ராமபாணத்தின் பெருமையையும் உணர்த்துகிறாள். ராமபாணம் அதன் உள்ளத்திலே இனிமையாகப் பதிகிறது.

* * * *

ஏற்றப்பாட்டு ஒன்று ராமபாண மகிமையைச் சொல்கிறது. அந்தப் பாணம் இடியைப்போல இடித்து வருமாம்; காற்றைப்போலக் கடுகி வருமாம்; மழையைப் போலத் தொகை தொகையாக வருமாம். இப்படி வெளிப்படும் பாணத்தை ராமன் பூட்டும்போது

பொன்னைப் போல அழகாகக் கண்ணைப் பறித்துக் கொண்டு வில்லிலே அமர்ந்திருக்குமாம். இந்த இயல்பு களைப் பின்வரும் அடிகள் புலப்படுத்துகின்றன.

இடியைப் போலப் பாணம்
விடுவார் ரகுராமர்
காற்றைப் போலப் பாணம்
கணைகளைத் தொடுப்பார்
மழையைப் போலப் பாணம்
வர அளிப்பார் ஸ்வாமி
பொன்னைப்போலப் பாணம்
பூட்டினாரே தேவர்.

ஒவ்வோரடியும் ராமபாணத்தின் ஒவ்வோர் இயல்பைத் தெரிவிப்பதை நாம் கவனிக்கவேண்டும்.

இப்படியே ராம கதையின் மற்றப் பகுதிகளை விளக்கும் அடிகள் ஏற்றப் பாட்டில் அமைந்திருக்கின்றன. அவற்றைத் தொகுத்துப் பின்னே கொடுத்திருக்கிறேன்.

ராமரே துணைவா ராகவரே தண்டம்
ரக்ஷிப்ப துன பாரம் இரண்டுடனே வாரீர்.

* * * *

உவமைஸ்தலம் பார்க்கப் பயணமென்றார் ராமர்
காசிநதி பார்க்கக் கடனம்பண்ணார் ராமர்
வையகங்கள் பார்க்க வரதர்போல நின்றார்
சீமைஸ்தலம் பார்க்கச் சீதைபோறே னென்றாள்
அங்குதய ஹனுமார் ஆண்டவன் பெருமாள்
அழதடன் பயணம் பங்குஷமா லாலி (?)
வரதர்போல நின்றார் இநபதியா லொண்ணு

* * * *

ஏழைபோல ராமர் இருந்தார் கானகத்தில்.

*     *     *     *

எழுதினாளே சீதை இலங்கையின் அழகை
ராவணன் அழகை ராக்ஷஸர் குணத்தை
எழுதிஒப்ப மிட்டாள் இளங்கொடியாள் சீதை
படித்துஒப்ப மிட்டாள் பசுங்கிளியாள் மாது
ராவணன் அழகை ராக்ஷஸர் பிறப்பை
எழுத்துள்ளவர் ராமர் தனக்குள்ளவள் சீதை.

*     *     *     *

இடியைப்போலப் பாணம் (அவர்) விடுவார் ரகுராமர்
காற்றைப்போலப் பாணம் கணைகளைத் தொடுப்பார்
மழையைப்போலப் பாணம் வரஅளிப்பார் ஸ்வாமி
பொன்னைப்போலப் பாணம் பூட்டினாரே தேவர்
ஒருவர்கண் ஒளிர்வு உலகம்பதி னாலும்
சீதைகண் ஒளிர்வு சீமைபதி னாலும்.

# 5

# சமரசப் பாட்டு

'கல்லார்த பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்' என்று மெய்ஞ்ஞானச் செல்வராகிய தாயுமான ஸ்வாமிகள் ஒரு பாட்டிலே சொல்லுகிருர். அதிகமாகப் படிக்கப் படிக்க மனிதனுக்கு வாதத்திலும் தர்க்கத்திலும் புத்தி போகிறது; தான் மௌனமாக இருப்பதை விட்டு விட்டு, எதிராளியை எப்படியாவது வாயை அடக்கி அவனது மௌனத்தில் தான் சந்தோஷப்பட வேண்டும் என்று முயல்கிருன். பிரதிவாதியைப் பயமுறுத்தி அடக்கிவிட்டோம் என்பதைக் கௌரவமாக எண்ணித் தருக்குகிருன். கல்வித்துறைகள் எல்லாவற்றிலும் இந்தச் சண்டை இருக்கிறது. ஆனல் இந்த நாட்டில் சாத்திரச் சண்டைக்கு அப்புறந்தான் மற்றச் சண்டைகள் எல்லாம்.

பிள்ளையார் பூசை செய்வது முதல், வேதோபநிஷத்தின் உண்மையைத் தெளிவது வரையில் ஆயிரம் சம்பிரதாயங்கள், ஆயிரம் மதங்கள், பல்லாயிரம் பேதங்கள்! இவற்றையெல்லாம் பார்க்கும்போது நிரீசுவரவாதியாக எந்த மதத்தையும் சாராமல், கண்கண்ட உலகத்தில் நல்லவன் என்ற பெயரெடுத்து இறந்து போவதே போதும் என்ற நினைவுகூடச் சிலசமயம் வந்துவிடுகிறது. இவ்வளவு வேற்றுமைகள் எதற்கு?'

இந்தச் சிக்கல்களுக்கு இடையே நாம் அகப்பட்டுக் கொண்டால் தெய்வ ஒளியை எப்படிக் காணப் போகிறோம்!

இப்படி எண்ணிச் சலிப்படைந்துவிட்டால் உய்யும் வழிதான் எது? பாரத சமுதாயத்தின் பழம் பெருமை

யெல்லாம் பொய்யா? சமயத்தின் பெயரால், வேத வேதாந்தத்தின் பெயரால், நம்முடைய நாட்டில் எல்லோருடைய வாழ்க்கையிலும் பலவகையான சாதனங்கள், தெய்வத்தை அணுக வேண்டுமென்று உண்மையான ஆர்வத்தோடு செய்யும் முயற்சிகள் கலந்திருக்கின்றனவே, அவைகளெல்லாம் விழலுக்கு இறைத்த நீராகப் போனவைகளா? கணிக்க முடியாத பல கோடி நூறுயிரம் வருஷங்களென்று புராணம் சொல்கிறது. அதை நம்பாவிட்டாலும் பல்லாயிரம் வருஷங்களாகப் போற்றி வளர்த்து வந்த தெய்வ நம்பிக்கையின் அஸ்திவாரத்தையே வருங்கால சந்ததியார் தகர்த்து விடத்தான் வேண்டுமா?

ஊஹூம்! தலையைத்தான் வலிக்கிறது. ஒரே குழப்பமாக இருக்கிறது. யோசிக்க யோசிக்க வேற்றுமைகளின் சொரூபமும் எண்ணிக்கையும் பெரியனவாக ராக்ஷசர்கள் மாதிரி முன்னே நின்று பயமுறுத்துகின்றன. கொடிப்பிணக்கு நிறைந்த காட்டுக்குள்ளே புகுந்து வழி காணுமல் புத்தி தத்தளிக்கிறது. ஈசுவரா! இதுதான் இந்து சமுதாயமா? பாரத நாட்டின் மெய்ஞ்ஞானமா!

* * * *

நம்பிக்கையை இழக்க வேண்டாம். அப்படி இழக்கவேண்டிய நிலை இன்னும் வரவில்லை; வரவே வராது. அட பைத்தியக்கார மனமே, எவ்வளவோ காலமாக ஊன்றிப் படர்ந்த பெரிய மரத்தின் சல்லி வேர்களைக் கண்டு அல்லவா நீ பயந்து போய்விட்டாய்! லக்ஷக்கணக்காக இருக்கும் அந்தச் சல்லிவேர்களினுலா மரம் ஜீவித்திருக்கிறது?

மூடமே! அதோ பார்; ஆணிவேர் இரும்பு மாதிரி பூமிதேவியின் இருதயத்திலே ஆழப் பதிந்து, மேலே படர்ந்திருக்கும் மரம் முழுவதற்கும் ஆதாரமாக இருக்கிறதைக் கவனி. நீ ஏன் இந்தச் சல்லிவேரைக் கண்டு பிரமிக்கிருய்? அவைகளை அசட்டை செய். நேரேபோ.

ஆணி வேரைப் பார்; இப்போது தெரிகிறதா சூக்ஷ்மம்? வேற்றுமையிலே ஒற்றுமை விளங்குகிறதா? அவ்வளவு சல்லி வேர்களையும் தறித்துவிடலாம்; மரத்திற்குக் கேடு ஒன்றும் வராது. ஆனால் ஆணிவேரைத் தறித்துவிட்டு' இவ்வளவு சல்லிவேர்களையும் ஜாக்கிரதையாக வைத்துப்பார். மரத்தை அடுப்புக்குப் போட வேண்டியதுதான்.

வேற்றுமைகளை பெரிதுபடுத்தாமல் பலவகையான பக்குவிகளுக்கு உண்மை தெரியுமட்டும் சாதனம் செய்ய, அவ்வப்போது இயல்பாக ஏற்படும் முறைகள் அவை என்று உணர்ந்துகொள்; அந்த முறைகளெல்லாம் மூல தத்துவத்தைச் சார்ந்து நிற்கவேண்டும். அந்த மூலத்தை மறந்து வேற்றுமையை மட்டும் பெரிதாக்கிக் கலகம் விளைத்த கறையான்கள் காலத்துக்குக் காலம் தோன்றும், அழியும். ஆனாலும் ஆணிவேர் கம்பீரமாகத்தான் இருக்கிறது.

இந்தச் சமரச நோக்கத்தோடு மூர்த்திகளையும் சமயங்களையும் பார்க்கும் சமரச ஞானச் செல்வர்கள் எல்லாச் சமயத்திலும் இருக்கிறார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர் முதலியவர்கள் அந்த நெறியை உலகுக்குக் காட்டியவர்கள். தமிழ் நாட்டில் தத்துவராயரும் தாயுமானவரும் சமரச போதம் செய்தார்கள்; அருட்பிரகாச வள்ளலென்னும் இராமலிங்க சுவாமிகள் சமரசத்தையே தம் மூச்சாகக் கொண்டு வாழ்ந்தார். சமரசத்தையே முழக்கினார். இந்தக் காந்தி யுகத்தில் சமரசந்தான் வெல்லும். உலக ஒற்றுமையை நிறுவும் சக்தி அதற்குத்தான் உண்டு.

* * * *

மனிதனுக்கு இயல்பாகவே சமரச ஞானம் இருக்கிறது. கால தேச, வர்த்தமானங்களின் வேகம் அவனைப் பிசாசு போலப் பிடித்துக்கொண்டு ஆடாத ஆட்ட

மெல்லாம் ஆட்டி வைக்கிறது. பரமார்த்தத்தை உணர்ந்த ஞானியர் சமரசத்தைப் போதிப்பது பெரிதல்ல. கல்வியில்லாத பாமரர்கள் தங்கள் நித்தியப்படி வாழ்க்கையிலே பேதம் இல்லாதபடி பல கடவுளரையும் வணங்கி ஆளுக்கு ஒரு கும்பிடு போடும் வழக்கத்தை இன்றும் நம் நாட்டிலே காண்கிறோம். அவர்களுடைய பேச்சிலும் பாட்டிலும் நடத்தையிலும் இந்தச் சமரசத்தின் வித்து அடங்கியிருக்கிறது.

* * *

ஏற்றப் பாட்டைத்தான் சற்றுப் பார். ஏற்றக்காரன், பிள்ளையாரையும் பெருமாளையும் சிவனாரையும் வேண்டிக்கொண்டு இறைக்க ஆரம்பிக்கிறான். சிவனும் பெருமாளும் அவனுக்கு இணைந்த இரட்டைத் தெய்வங்களாகப் படுகிறார்கள். சிவனும் பெருமாளும் சேர்ந்து ரதம் ஏறுகிறார்கள். 'அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயிலே மண்ணு' என்ற சமரசப் பழமொழி அந்த அப்பாவிகளின் இலக்கியத்தில்தான் இருக்கிறது.

ஏற்றக்காரன் கூறும் பிரார்த்தனையைக் காது கொடுத்துக் கேள்:

> பிள்ளையாரே வாரீர்! பெருமாளே வாரீர்!
> பெருமாளே வாரீர்! சிவனாரே வாரீர்!
> சிவனும் பெருமாளும் சேர்ந்துரதம் ஏற
> குருவும் பெருமாளும் கூடிரதம் ஏற
> ஹரியும் சிவனும் பெரியரதம் ஏற
> நானும் பெருமாளும் நடுங்கிப்பணி செய்ய
> ராமரே துணைவா; ராகவரே தண்டம்
> ரக்ஷிப்பதுன் பாரம் இரண்டுடனே வாரீர்.

சைவமும் வைஷ்ணவமும் தனித்தனியே ஏற்றத்தில் போராடவில்லை. சிவனும் பெருமாளும் சேர்ந்து ஏற்றப் பாட்டில் பிரசன்னமாகிறார்கள்.

இன்னும் பார். ஏற்றக்காரனுடைய அபேத புத்தியைக் கண்டு 'சபாஷ்' போடப் போகிறாய். அவன் இப்போது ஜைனர் கோயிலுக்கு நம்மை இழுத்துப் போகிறான். பிரதட்சிணம் செய்யச் சொல்கிறான்: அருகர் கோயிலை வலம் வந்தால் கோடி பலன் உண்டாம்; அதிகச் சம்பத்து உண்டாம். நல்ல பலன் உண்டாம். ஒரே விஷயத்தை ஒருதடவை அல்ல, பத்துத் தடவை சொல்லிச் சொல்லி அதைப் பாட்டாக்குகிறான். பாட்டென்று நீ நினைக்காவிட்டால் மந்திரமென்று நினைத்துக் கொள். மந்திரத்தைத்தானே பலமுறை உருவேற்ற வேண்டும்? பாட்டிலே பல்லவியும் ஜபத்திலே மூலமந்திரமும் திருப்பித் திருப்பிச் சொல்வதனால் அதிக இன்பமும் அதிக நன்மையும் அளிக்கின்றன. எங்கே? ஏற்றக்காரனைப் பின் தொடர்வோம்:

**இனிஅருகர் கோயில் வலம்வருவோம் வாங்க**
**பொன்னருகர் கோவில் போய்வருவோம் வாங்க**
**கோயில்வலம் வந்தால் கோடிபலன் உண்டு**
**அருகர்வலம் வந்தால் அதிகசம்பத் துண்டு**
**நாதர்வலம் வந்தால் நல்லபலன் உண்டு**
**ஸ்வாமிவலம் வந்தால் சற்றுங்குறை வில்லை.**

இந்தச் சமரசம் அவனை முறைதெரியாமல் அடித்து விடுகிறது. முருகனைப் புகழ்கிறான். அடுத்த அடியிலேயே நாராயணனுக்கு நமஸ்காரம் பண்ணுகிறான். வள்ளியையும் முருகனையும் காட்டில் கொண்டு வந்து நிறுத்துகிறான். அப்படியே அவர்களை விட்டு விட்டு ராமரை அழைத்து வந்து அவர் வனவாசம் செய்ததை நினைத்து இரங்குகிறான்.

**முருகருக்கோ வள்ளி மோகனப்பெண் ஆனாள்**
**கந்தருக்கோ வள்ளி கானமயில் ஆனாள்**
**வேலருக்கோ வள்ளி வேடிக்கைப்பெண் ஆனாள்**

குமரருக்கோ வள்ளி குடிவிளக்காய் நின்றாள்
வேடருக்கோ வள்ளி வேங்கைமர மானாள்
குமரருக்கோ வள்ளி கொன்னைமர மானாள்
நமோ நாராயணா நாற்பதியா லொண்ணு.

* * * *

ஆறுமுக வேலர் குறக்குலம்போய்ச் சேர்ந்தார்
குறவன்மகள் வள்ளி கூடாதென்று சொன்னாள்
வேடன்மகள் வள்ளி வேண்டாமென்று சொன்னாள்
குமரிவள்ளிக் காகக் கொன்னைமர மானார்
வேடர்வள்ளிக் காக வேங்கைமர மானார்
வேங்கைமரம் வெட்ட வேடரோடி வாரார்
பச்சைமர மென்று பாவவினை சொன்னாள்.
கொன்னைமரம் வெட்டக் கூடாதென்று சொன்னாள்
ஏழைபோல ராமர் இருந்தார் கானகத்தில்
இருந்தார் கானகத்தில் எழுபதியா லொண்ணு.

*ஏற்றக்காரனுக்குப் பராசக்தியைக்கூடத் தெரிந்திருக்கிறதே! தேவி பாகவதமோ, யாமள தந்திரமோ அவன் அறிந்ததில்லை. அவனுக்குப் பராசக்தியின் ஒரு கோலம் நன்றாகத் தெரியும். மாரியாத்தாளே உலகம் முழுவதும் ஆளும் ஏக நாயகி என்று அவன் சொல்கிறான். ஈசுவரி உமை அவள்தான் என்கிறான். அவன் வருணிப்பதைக் கேள்:*

உலகத்தாயி மாரி - அவள் சதுரக்கூடைக் காரி
தாழனூராள் மாரி - அவள் தங்கக்கூடைக் காரி
எங்கும் பராசக்தி - அவள் எல்லாம் ஆள ஒத்தி
ஆதிபரா சக்தி — அவள் அங்காளம்மாள் தேவி

நெற்றிப்பச்சைக் காரி - அவள் நெடுங்குண்ணத்து ஆயி
பொன்னுக்கூடைக் காரி - அவள் புறப்பட்டாளே மாரி
தங்கப்பொட்டுக் காரி - அவள் தனித்துவந்தாள் மாரி
ஈசுவரி உமையே - எனை ஈடேறக்கண் பாரும்.

*நிறுத்து. நிறுத்து. இதென்ன! இந்தப் பித்துக் கொள்ளி பாரதிகூட இப்படித்தானே பாடி இருக்கிறார்; ஏற்றக்காரனுக்கு அவர் தம்பியா, அண்ணனா?*

"உலகத்து நாயகியே -
எங்கள் முத்து மாரியம்மா
உன்பாதம் சரண்புகுந்தோம் -
எங்கள் முத்து மாரியம்மா!"

*எல்லோரும் சமரசப் பாட்டுப் பாடுவதில் ஒருவராக அல்லவோ தோன்றுகிறார்கள்.*

# 6

# கதம்பம்

ஏற்றப் பாட்டு, பிள்ளையார் முதலியவர் தோத்திரங்களோடு ஆரம்பமாகும். சில பாடல்கள் வேறு ஆரம்பம் உடையதாகவும் இருக்கும். சிறு சிறு பாடல்களாக இருப்பது சிறு பான்மையே. பெரும்பாலும் நீண்ட பாடல்களாகவே இருக்கும். சேர்ந்தாற்போல் பல மணி நேரம் இறைக்கும் தொழில் உடையவர்கள் பெரிய பாடல்களைப் பாடுவார்கள். பெரிய பாடல் என்றால் முதலிலிருந்து கடைசி வரையில் உள்ள அடிகள் நூற்றுக் கணக்கில் இருக்கும். ஆனால் அவை ஒரே விஷயத்தை முறையாகவும் தொடர்ச்சியாகவும் சொல்லும்படி அமைந்திருப்பதில்லை. மனம் போன போக்கில் புராணக் கதைகளையும் தெய்வப் பிரபாவத்தையும் வழிபாட்டு முறையையும் கோத்து அமைத்தனவாக இருக்கும்.

ஒவ்வொரு தடவையும் சாலைக் கவிழ்க்கும்போது ஏதாவது ஒரு வாய்பாட்டைச் சொல்லிச் சாலின் எண்ணிக்கையையும் கூடச் சொல்வான் ஏற்றக்காரன். 'மயிலேறியான் ஒண்ணு, மயிலேறியான் ரெண்டு' என்பது போலச் சொல்வான். இந்த வாய்பாடு முருகக் கடவுளுக்கு உரிய முக்கிய ஸ்தலத்தைச் சார்ந்த இடங்களில் வழங்கும். வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதமாக வழங்குவதும் உண்டு. சம்பாஷணை உருவத்தில் அமைந்த ஒரு பாட்டில் வேலையா, சுப்பையா என்ற பெயர்கள் வருவதை முன்பு கண்டோம். அந்த இரண்டும் முருகக் கடவுளின் திருநாமங்கள். ஆகையால் அந்தப் பாட்டும் முருகனை வழிபடுவோர் மிகுதியாக உள்ள இடத்தில் முதலில் உண்டாகிப் பரவியிருக்க வேண்டும்.

இந்த வாய்பாடு எப்படி இருந்தாலும் பத்துச் சாலுக்கு ஒரு தடவை கூறும் கணக்கு மாத்திரம் அநேகமாக எங்கும் ஒரேமாதிரி இருக்கும்: 'ஒரு பதியா லொண்ணு, இருபதியா லொண்ணு, முப்பதியா லொண்ணு' என்று நூறு வரையில் வரும். ஒருபதால் ஒன்று, இருபதால் ஒன்று — என்பவற்றின் கொச்சை உருவம் அவை என்று தோன்றுகிறது. இப்படி நூறுசால் இறைத்தால் ஒரு பரியமென்று சொல்வார்கள். ஆயிரத்துக்குப் பத்துப் பரியம். ஒவ்வொரு பரியத் திற்கும் தனித்தனியே வேறு வேறு பாட்டுக்களைக் கற்றுக்கொண்டு சொல்பவர்களும் உண்டு. இப்போது உள்ள பாட்டுக்களைப் பார்த்தால் பல அடிகள் குறைந்து போய் வார்த்தைகள் சிதைந்து இருக்கும்.

* * * *

நாடோடிப் பாட்டுக்களில் முக்கியமாக ஒன்றைக் காணலாம். ஒரே விஷயத்தைப் பல வகையாகத் திருப்பித் திருப்பிச் சொல்வது மற்றப் பாடல்களில் குற்றமாகலாம். ஆனல் நாடோடிப் பாட்டில் அப்படி அமைந்திருப்பது முக்கிய லட்சணங்களுள் ஒன்றுகும்.

துரியோதனன் தன்னுடைய சேனைகளுடன் புறப்பட்டு வருகிருன். சேனை மிகுதியினுல் அண்டம் கிடு கிடென் கிறது. பூமி நடு நடுங்கப் போர் மன்னர் போகும்போது தூள் எழும்புகிறது. அதை நாடோடிப் பாட்டு வருணிப் பதைப் பாருங்கள்:

கருந்தூள் எழும்பியது
கண்ணை மறைக்கிறது
செந்தூள் எழும்பியது
திசையை மறைக்கிறது
மண்தூள் எழும்பியது
வானம் மறைக்கிறது!

*துரியோதனன் பஞ்சபாண்டவர்களைக் காட்டுக்கு ஓட்டினவன். இதை ஒரு தரம் சொன்னால் போதாதோ? எத்தனை தரம் சொல்கிறான் நாடோடிப் பௌராணிகன்?*

பாண்டவர்கள் ஐவரையும்
பரதேசம் ஓட்டினனே
மன்னவர்கள் ஐவரையும்
வனம்ஓட்டி விட்டானே
காவலர்கள் ஐவரையும்
காட்டிற் செலுத்தினனே
உத்தமர்க ளைவரையும்
ஊரைவிட் டோட்டிவிட்டான்
ஐவரையும் ஓட்டிவிட்டான்
ஆளுகின்றான் படுபாவி!

*ஐந்து பேர்களையும் ஓட்டினதற்காக ஐந்து தடவை திருப்பித் திருப்பிச் சொல்ல எண்ணினானோ என்னவோ!*

புருஷனில்லா மங்கையர்கள்
பூவையர்கள் இத்தனைபேர்
ஆளனில்லா மங்கையர்கள்
அரிவையர்கள் இத்தனைபேர்
கணவனில்லா மங்கையர்கள்
காரிகைமார் இத்தனைபேர்
சிறையிலிருந்து வாடுகின்ற
செய்தி தெரியவேண்டும்

*பல தடவை அடுக்கிச் சொன்னால்தான் சொல்பவனுக்கும் திருப்தியாகிறது; கேட்கிறவனுக்கும் உறைக்கிறது.*

இந்த லட்சணத்தை ஏற்றப்பாட்டிலும் பார்க்கலாம். ஏற்றத்தில் சாலைத் தொங்க விடுவதற்கு மூங்கிற்கோல் வேண்டும். அந்தக் கோல் நல்ல உறுதியாக இருக்க வேண்டும். நன்றாக விளைந்ததாக இருந்தால் சாலின் பாரத்தைத் தாங்கும். கிணற்றின் ஆழத்திற்கு தக்க படி கோலின் நீளத்தை அமைத்துக்கொள்வார்கள். அப்படி உள்ள மூங்கிற்கோலின் பிறப்பிடத்தைப் பாட்டிலே சொல்கிறான் ஏற்றக்காரன்.

எட்டடிக்குக் கோலு எடக்கிநாட்டு மூங்கில்
பத்தடிக்குக் கோலு பவழக்காட்டு மூங்கில்
அஞ்சடிக்குக் கோலு அழகிநாட்டு மூங்கில்

கிணறு வெட்டியதும் துலாம் நாட்டியதும் மடல் அமர்த்தியதும் பாட்டில் வருகின்றன.

எட்டடி அளந்து வெட்டினான் துரவே
பத்தடி அளந்து பாச்சினான் துலாத்தை
அஞ்சடி அளந்து அமர்த்தினான் மடலே
எட்டடிக்குக் கோலு எடக்கி நாட்டு மூங்கில்
பத்தடிக்குக் கோலு பவழக்காட்டு மூங்கில்
அஞ்சடிக்குக் கோலு அழகிநாட்டு மூங்கில்
எட்டடியுங் கோலும் விட்டாடுமோ பானை
பத்தடியும் கோலும் பன்னுடுமோ ஏத்தம்
ஏத்தங்களைப் பார்த்தால் எமன்செட லாட்டம்
உபயநதி வாழ ஒருபதியா லொண்ணு.

இந்த வருணனையில் நமக்கு எல்லாம் தெளிவாகப் புரியும் என்று சொல்வதற்கில்லை. அவன் சொல்லுகிற கணக்கு, சரியான நிதானத்தின் மேல் சொல்வதென்று கொள்வதும் அவசியமன்று. பாட்டுப் போகிற போக்கிலே சிறிது பொருத்தமுள்ள விஷயங்களும் வார்த்தைகளும் அவனுக்கு அகப்படுகின்றன. அவற்றை

வைத்துக்கொண்டு பொழுது போக்க வழி தேடுகிறுன். அந்த வார்த்தைகளிலும் வருணனைகளிலும் உள்ள ருசியைவிட அவன் பாடும் தோரணையிலே அதிகமான சுவை இருக்கிறது.

அவனுடைய பாட்டுக்கு ஏதாவது விஷயம் அகப் படாமல் போகவில்லை. முருகர் கோயில் வலம் வரு வதை ஒரு பத்துச் சாலுக்கு வைத்துக்கொள்கிறுன். முருகருக்கு வள்ளி மோஹனப் பெண் ஆன கதையை ஒரு பத்துச் சாலுக்குப் பாடி இறைக்கிறுன். அவ னுடைய ஊருக்கு அருகிலுள்ள விசேஷ ஸ்தலங்களைப் பற்றிய சமாசாரங்கள் ஒரு பத்துச் சாலுக்கு விஷ யத்தை நிரப்புகின்றன.

காஞ்சீபுரத்தைச் சார்ந்த இடங்களில் உள்ளவர்கள் வரதராஜரை மறக்க முடியுமா? அவருடைய மகாத் மியத்தை விவரமாகத் தெரிந்துகொள்ளா விட்டாலும் திருவிழாவிலே அப்பெருமான் ஆனைமேலும் குதிரை மேலும் தேர்மேலும் வந்ததை ஏற்றம் இறைப்பவன் தரிசித்து இன்புற்றதில்லையா? அந்தத் தரிசனத்தை நினைப்பூட்டிக்கொண்டு அவன் கவிதை செய்கிறுன்.

அந்திக்கு வரதர் ஆனைமேல் வருவார்
என்றைக்கும் வரதர் தேர்மேல் வருவார்
காலமே வரதர் அன்ன வாகனமோ
அந்திக்கு வரதர் அன்ன வாகனமோ
நாளைக்கு வரதர் நாக வாகனமோ
ஹரிஹரி கோவிந்தா அச்சுதா அனந்தா
பச்சைநீல வர்ணு பாரளந்த மெய்யா
பாண்டவர் சகாயா
...அச்சுதனைப் பாட அறுபதியா லொண்ணு.

இதைப் பத்துச் சால் பிடித்துப் பாடிச் சரிக்கட்டி விட்டு அடுத்த பத்தைத் தொடங்குகிறுன். இப்படியே

ஒன்றை விட்டு ஒன்று பற்றி ஏற்றப்பாட்டு உருவெடுக்கிறது.

சடையாண்டியின் கோலத்தை அவன் அழகாக வருணிக்கிறான். அவர் நீறு பூசிக் கபாலம் கையிலேந்தி மான்தோலும் புலித்தோலும் பிற தோலும் புனைந்து வருவதை,

தொங்கும் சடையாண்டி எங்கும் வருவாரோ
நீறுபூசும் ஆண்டி நித்தம் வருவாரோ
சங்குகையி லேந்திச் சாரி வருவாரோ
பாலங்கையி லேந்திப் பாடிவருவாரோ
அன்றுரித்த மான்தோல் ஆதனம் புலித்தோல்
நேற்றுரித்த மான்தோல் நித்தமும் நரித்தோல்
கன்றுரித்த மான்தோல கரடிமான் புலித்தோல்

என்று சித்திரிக்கும்போது சிவபெருமானை எத்தனை விதமான தோலாண்டியாகப் பார்க்கிறோம்!

மார்க்கண்டேய புராணத்தை அவன் தன்னுடைய பத்துச் சாலாலே அளந்துவிடுகிறான்:

ம்ருகண்டரைப் போலத் தவம்பண்ணவர் இல்லை
ம்ருகண்டரிஷிக்கு முன்னேரிட்ட சாபம்
பிள்ளையில்லை யென்று பெருந்தவங்கள் செய்தார்
மைந்தனில்லை யென்று மாளாத்தவம் செய்தார்
ம்ருகண்டு ரிஷிக்கு மார்க்கண்டர் பிறந்தார்
மார்க்கண்ட ரிஷிக்கு வயசு பதினாறு
வரமளித்தார் ஸ்வாமி என்றும்பதி னாறாய்
ஈரெட்டு வயசாய் ஈசுவரரும் தந்தார்
மார்க்கண்டனு மப்போ ஆற்றுமணல் சேர்த்து
ஹரனைப்பூஜை செய்து ஈசுவரனைப் பார்த்தார்

மார்க்கண்டனைக் கொல்ல வாருன்எம ராஜன்
காலதூதர் வந்து கட்டளைப் படியே
..........கடுங்கோப மாஞர்
ஈசுவரரும் பார்த்து எமனை உதைத்தார்.

புராணங்கள் புத்தக ரூபத்திலே வருவதற்கு முன்னேயே, ஊர் ஊராக் வழங்கும் நாடோடி இலக்கியத்தில் தெய்வங்களின் மான்மியங்கள் புகுந்து கொண்டன. கேட்பதற்குப் பொறுமையும், தெரிந்து கொள்வதற்குப் பழக்கமும், அநுபவிப்பதற்கு உள்ளமும் இருக்குமாஞல் உதயத்துக்கு முன்பிருந்து அஸ்தமனம் வரையில் கேட்கலாம். பல புராணங்களின் கதம்பமாகவும் பல செய்திகளின் கோவையாகவும் பல உணர்ச்சிகளின் மாலையாகவும் ஏற்றப்பாட்டு அமைந்திருப்பதை அப்போது உணரலாம்.

# 7

# 'எப்போ மழை பெய்யும்!'

மழை இல்லாவிட்டால் உலகத்தில் என்ன இருக்கிறது? நீதி நெறி, பூஜை புரஸ்காரம், பக்திவிசுவாசம், ஆடை ஆபரணம் - எல்லாம் மழை பெய்து பயிர் விளைந்து வயிறு நிரம்பின பிறகு மனித ஜாதியின் உள்ளத்தையும் உடலையும் அழகுபடுத்துவதற்கு வரும். பசியாற உணவு கிடைக்கும்போதுதான் மானம், குலம், கல்வி முதலிய பெருமைகளை மனிதன் கவனிக்கிறான். பசி வந்தாலோ எல்லாம் பறந்துபோகின்றன. பசியில்லாத நாடுதான் சொர்க்கலோகம்.

பசி தீர உணவு வேண்டும்; அந்த உணவு விளைய மழை வேண்டும். 'மழை இன்றி மாநிலத்தார்க்கு இல்லை' என்று ஒரேயடியாகச் சப்புக் கொட்டுகிறார் ஒரு புலவர். திருவள்ளுவர் என்னும் தெய்வப்புலவர் இருக்கிறாரே, அவர் மழையைப் பற்றி ஓர் அத்தியாயமே பாடியிருக்கிறார்.

மழை இல்லாவிட்டால் உலகமே பஞ்சத்தில் அடிபட்டு வற்றலாகிவிடும். கடைகளிலே காசு கொடுத்துப் பண்டம் வாங்கும் உத்தியோகஸ்தர்களுக்கும் ஏழடுக்கு மாளிகையில் உறங்குகின்ற செல்வர்களுக்கும் பட்டணத் தொழிற் சாலைகளிலே புழுங்கிச் சாகும் தொழிலாளிகளுக்கும் 'மழையில்லையென்று' சொன்னால் அந்தத் துன்பம் நேரே உறைக்காது. உத்தியோகஸ்தர்களுக்குச் சாமான்கள் கிராக்கியாகிவிட்டால்தான் பஞ்சம் தெரியும்; பணக்காரர்களுக்கு லாபம் குறைந்தால் தெரியும். பஞ்சம் அதிகமாக ஆக எல்லாவற்றுக்கும் மூலகாரணம் மழையில்லாமை என்பது எல்லோருக்கும் தெரியவரும். இந்தப் பஞ்சத்தை முதலில் உணர்ந்து

கொள்பவர்கள் யார் தெரியுமா? நிலமகளை வழிபட்டு உழுது பயிரிட்டு உழைக்கும் குடியானவர்களே முதல் முதலாகப் பஞ்சத்தை உணர்கிறார்கள். மழை பொய்த்துவிட்டதென்றால் அவர்களுடைய வயிற்றில் தான் முதலில் பசியென்கிறது; மழை மறந்த வானத்தைக் கண்டு நடு நடுங்கிக் கண்ணீர் விடுபவர்கள் நிலமகளின் திருத்தொண்டர்களே.

மாதம் மும்மாரி பெய்யுமென்பது பழைய காலத்து நம்பிக்கை. நடோடிகளின் நீதியிலே மாதம் மும்மாரி பெய்வதுதான் அறம் குன்றாத நாட்டுக்கு அடையாளம், அது குறைந்தால் தர்ம தேவதை நாலு காலாலும் நிற்க வில்லை என்றுதான் எண்ணுவார்கள். மழை பெய்யா விட்டால், மழையை வேண்டிச் சாமிக்குப் பூசை போடுவார்கள்; வருண பகவானை வேண்டுவார்கள்; பட்டினி கிடப்பார்கள்; கொடும்பாவி கட்டிச் சுமப் பார்கள்.

மழை பெய்யாத துன்பத்தை அவர்கள் வருணிக் கும் முறையே தனிவிதமாக இருக்கும்:

மழையுங் கிடையாது மன்னனது சீமையிலே
தூறல் கிடையாது சோழனது சீமையிலே
பயிரும் விளையாது பறவைகள் நாடாது
குடிக்கஜலம் கிடையாது குருவிகள் நாடாது
தீய்ந்தன பயிர்களெல்லாம் தேசங்கள் அத்தனையும்
காய்ந்தன மரங்களெல்லாம் கனியும் கிடையாது
ஏரி குளங்களிலே இறைக்கஜலம் கிட்டாது
பூமி தனிற்புல்லு பூண்டுங் கிடையாது
சருகுபோல் உலர்ந்தனரே தனிச்சோழன் பட்டணத்தில்
அன்னங் கிடையாது அரிய மனிதருக்கு

சோறு கிடையாது சோழனது சீமையிலே
எல்லோரும் பரதேசி ஏழைகளாய்ப் போனார்கள்
மாடு கிடையாது மனிதருங் கிடையாது
தங்கநிழல் கிடையாது தரித்திரமே பெரிதாச்சு.
*(அல்லியரசாணி மாலை)*

ஒரு நாடு முழுவதும் பஞ்சம் வந்து விட்டபோது அங்குள்ள நிலையை இந்தக் கண்ணிகளில் காண்கிறோம். ஏற்றக்காரன் பாட்டில் மழையில்லாப் பஞ்சத்தில் அவன் சொல்லும் பகுதி ஒன்று வருகிறது. 'எப்போது மழை பெய்யும்!' என்று அவன் ஏங்குகிறான். மழைபெய்தால் பயிர் விளையும்; பயிர் விளைந்தால் ஓடிப் போன குடிகளெல்லாம் வந்து சேருவார்கள். மழைபெய்தால்தான் நிலம் சொன்னது சொன்னபடி விளையும். நீர் வளம் இருந்தால்தான் நிலவளமும் உண்டாகும். நெல்விளையும்; கரும்பு விளையும்; வெற்றிலை விளையும். வளம் நிறைந்து நிற்பதற்கு அறிகுறி வெற்றிலை. இப்படி விளைந்தால்தான் ஜனங்களுக்கு இன்பம் உண்டாகும்; அன்பு சுரக்கும்; தெய்வங்களுக்குப் பூசை போடுவார்கள் — இவ்வளவு விஷயங்களையும் அவன் ஒருவாறு சொல்லிவிடுகிறான்.

எப்போமழை பெய்யும் குப்பம்பயிர் ஏறும்
குப்பம்பயிர் ஏறும் குடிகள்வந்து சேரும்
கற்பூரம் விளையும் காலமழை பெய்யும்
சொன்னது விளையும் சோதிமழை பெய்யும்
வெற்றிலை விளையும் வேணமழை பெய்யும்
வேணமழை பெய்யும் விடியபூஜை ஆகும்
சொன்னது விளையும் சொர்ணபூசை ஆகும்.
தொழுதேன் பகவானே தொண்ணூறுடன் ஒண்ணு

'வேண மழை பெய்தால் விடியல் பூஜை ஆகும்' என்று ஏற்றக்காரன் தான் பழகுந் தமிழிலே சொல்கிறான். அதையே திருவள்ளுவர்,

'சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு'

(மழை பெய்யாமல் வறண்டு போனால் இந்தப் பூமியிலே தெய்வங்களுக்குக்கூட உற்சவம் நடக்காது! நித்திய பூஜையே இராது.)
என்று தம்முடைய பாஷையிலே சொல்லுகிறார்: ஆண்டியே சோற்றுக்கு அழும்போது லிங்கத்துக்குப் பஞ்சாமிர்தம் எங்கிருந்து கிடைக்கும்?

*　*　*

மழை வேண்டுமென்று வருண ஜபம் செய்கிறவர்கள் செய்கிறார்கள். பூஜை போடுகிறவர்கள் போடுகிறார்கள். கோயில்களில் விக்கிரகம் முழுகும்படி நீர் தேக்கிக் குளிரப் பண்ணுகிறார்கள். எல்லோரும் தங்கள் தங்களுக்குத் தெரிந்த மந்திர தந்திரங்களைச் செய்கிறார்கள். அறிவுடை உலகமும் பாமர உலகமும் மழை வேண்டி வரங் கிடக்கும்போது குழந்தை யுலகங்கூட வருணனைக் கொஞ்சி அழைக்கின்றது. வாழ்க்கையெல்லாம் விளையாட்டாக அமைந்த குழந்தைகள் மழையைக் கூவி அழைப்பதையும் ஒரு விளையாட்டாகச் செய்கின்றன. அந்த விளையாட்டிற்கு ஓர் ஆட்டம், ஒரு பாட்டு.

கொட்டைப் பாக்கு நறுக்கித் தாறேன்
கோயில் மண்ணைத் தெள்ளித் தாறேன்
ஜோர் மழை வா, ஜோர் மழை வா!

என்று கொண்டாடிக்கின்றன. கொட்டைப் பாக்குக்கும் கோயில் மண்ணுக்கும் ஜோர் மழைக்கும் என்ன சம்பந்தமோ!

*　*　*　*

மழை வேண்டி வரங்கிடந்த மன்னுயிருக்கு இறங்கி மழைபெய்கிறது. பூமி முழுதும் குளிர்கிறது. உயிர்த் தொகுதிகளெல்லாம் ஜீவகளையோடு பூரிக்கின்றன. முன்பு இருந்த பஞ்சக் கோலமெங்கே? இப்போதுள்ள வளப்ப வாழ்வெங்கே?

சோழனது சீமையிலே
சொலிக்கிறதே மின்னல்கள்
கடலிரைச்சல் போலே
கமரிற்றே மேகங்கள்
குமுறிற்று மேகமெல்லாம்
குடங்கொண்டு வார்த்தாற்போல்
இரைகிறதே மேகங்கள்
ஏகவெள்ளம் பெருகிடவே
சோனைமழை போலே
சொரிகிறதே மேகமெல்லாம்.

இதுதான், 'ஜோர் மழை' பெய்யும் காட்சி. பெய்த பிறகு பூமி குளிர்ந்து நீர்வளம் நிரம்புகிறது.

நல்லமழை பெய்ததனால்
நாடு செழித்தனவே
பூமி குளிர்ந்தனவே
பொய்கை நிரம்பினவே
ஏரிகள் நிரம்பி
எதிர்க்கிறதே மேகவெள்ளம்
மடுவுகள் நிரம்பி
வழிகிறதே வெள்ளமெங்கும்
ஆறுகள் நிரம்புவதால்
அடைபடும் வெகுஜனங்கள்

கழனிகள் நிரம்பிக்
காலவாய்கள் தாம்நிரம்பி
ஊற்றுக்கள் தாம் சுரந்து
ஓடிற்றே ஜலம் விசையாய்.

*நீர்வளம் உண்டானல் நிலவளம் உண்டாகத் தாமதம் உண்டோ? மரம் செடி கொடிகள் தழைக்கின்றன. பூவாத மரங்களெல்லாம் பூத்துச் சொரிகின்றன. காயாத மரங்களெல்லாம் காய்த்துக் கனிகின்றன.*

தடாகங்கள் தாம்நிரம்பித்
தாமரைகள் பூத்தனவே
வயல்கள் நிரம்பி
வாய்க்காலுந் தாளுடி
உலர்ந்த மரங்களெல்லாம்
உயிருண்டாய்த் தளிர்த்தனவே.

*தாவர வர்க்கங்களோடு பறவையினங்கள் மலிந்தால் போதுமா? மனிதர்கள் வாழவேண்டாமா? அவர்கள் என்ன செய்கிறார்கள்?*

அடியற்ற மரங்களெல்லாம்
அன்பாய்த் தளிர்த்தனவே;
இலையுந் தளிர்களெல்லாம்
ஏகமாய்த் தளிர்த்தனவே;
காடு செடிகளெல்லாம்
கனக்கவே தான் தழைக்கும்;
செடிகள் மரங்களெல்லாம்
செழித்துத் தழைத்தனவே;
பூவா மரங்களெல்லாம்
பூத்துச் சொரிந்தனவே;

காயா மரங்களெல்லாம்
காய்த்துச் சொரிந்தனவே;
கிள்ளப் பழுத்தனவே;
கிளிகள் வந்து சேர்ந்தனவே;
அள்ளப் பழுத்தனவே;
அளிகள்வந்து சேர்ந்தனவே;
செந்நெல் விளைந்தனவே;
தேசஞ் செழித்தனவே;
பயிர்கள் விளைந்தனவே;
பலனைக் கொடுத்தனவே;
சோலைகள் சாலைகள்
சூழ்ந்த தடாகங்களில்
குயில்கள் அடுத்தனவே;
குருவிகளும் வந்தனவே;
மயில்கள் அடுத்தனவே;
வான்கோழி வந்தனவே;
தாராவும் உள்ளானும்
தாவி அடுத்தனவே;
அன்னங்கள் பேடைகள்
ஆந்தை அடுத்தனவே;
கொக்குவக்கா கூச்சலிடக்
கோகிலங்கள் பாடுவன;
பண்டுகள் தின்று
பறவைகள் பாடுவன;
கனிகளைத் தின்று
களித்தன பறவையெல்லாம்.

*　　•　　*

ஏர்கட்டி உழுவாரும்
இளநாற்று நடுவாரும்
பயிரிடுங் குடிகளெல்லாம்
பலப்பட்டுப் போனார்கள்;
ஓடுங் குடிகளெல்லாம்
ஊரைவந்து சேர்ந்தார்கள்!
பரதேசி யரதேசி
பஞ்சை பஞ்திியெல்லாம்
சோழராஜன் பட்டணத்திற்
சுகப்பட்டு வாழ்ந்தார்கள்;
பிச்சைக்கார ரெல்லாரும்
பெருமை அடைந்தார்கள்;
சோழமண்ட லங்களெல்லாம்
சுகமாய்த் தழைத்தனவே.

*அப்போது கவிவாணர்கள் அந்த மண்டலத்தைப் பாராட்டுவார்களாம்.*

மாதமும் மாரி வருஷிக்கும் மண்டலத்தில்
சோழமண் டலமென்று சொல்லுவார் கவிவாணர்.

* * * *

*நம்முடைய ஏற்றக் கவிவாணர் மழை பெய்யும் அழகை எப்படிச் சொல்கிறார் பாருங்கள்:*

எங்கள்புர மெல்லாம் திங்கள்மழை பெய்யும்;
வெங்கிபுர மெல்லாம் விடியநிலாக் காயும்;
தோழிபுர மெல்லாம் சோதிநிலாக் காயும்;
கன்னிபுர மெல்லாம் காலமழை பெய்யும்;

மின்னலும் இடியும் வேகமாய்ச் சொரியும்;
கானலும் மழையும் கறக்குமந்த மானம்;
ஊசிபோல மின்னல் உறிபைட்போலக் காலு
மாசிபோல மின்னல் மழையிறங்கிப் பெய்யும்.

அவருடைய பாட்டிலே கவிதாரஸம் அடிக்கு அடி குமிழியிடவில்லை. சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளை போலத் திருப்பித் திருப்பிப் பாடுகிறார். ஆனாலும் இருண்டுவரும் மேக மூட்டத்தினிடையே பளிச்சிடும் மின்னல்போலே, கவிதையை ரஸிக்கும் உள்ளக் கண்ணாடியில் வெறியோடுவதற்கு,

ஊசிபோல மின்னல் உறியைப்போலக் காலு'
என்பது போலச் சில அடிகள் இருந்தால் போதுமே!

# 8

# மலர் பறிக்கும் பெண்

திருஞான சம்பந்தர் பெரிய சிவபக்தர். சைவ சமய ஆசாரியர்களில் ஒருவர். முருகக் கடவுளுடைய அவதாரம் என்று சொல்லும் பெருமையை உடையவர். அவருடைய தேவாரங்களில் இயற்கையின் வருணனை மிக நன்றாக அமைந்திருக்கும். மிகவும் அழகாக விஷயங்களை எடுத்துச் சொல்லுவார்.

சாயாவனம் அல்லது சாய்க்காடு என்பது ஒரு சிவஸ்தலம். அங்கே போய் ஸ்வாமி தரிசனம் செய்து கொண்ட ஞானசம்பந்தர் வழக்கம்போலத் தேவாரப் பதிகம் பாட ஆரம்பித்தார். நெஞ்சைப் பார்த்து உபதேசம் செய்கிறார்.

''நெஞ்சமே, நாம் வாழ்ந்திருக்கும் நாட்களையும் செத்துப் போகும் நாளையும் யார் அறிந்திருக்கிறார்கள்? என்றைக்காவது ஒரு நாள் செத்துப்போவது நிச்சயம். அந்த நாள் இந்த நாள் என்று தெரியாத வரையில் ஒவ்வொரு நாளும் நமக்கு அந்தியகாலமென்றே நினைத்துக்கொண்டு தினந்தோறும் நல்ல காரியத்தைச் செய். அப்பொழுதுதான் நாம் ஏமாறாமல் இருப்போம். காலத்தை நாம் ஏமாற்றிவிடலாம்'' என்ற கருத்தோடு அவர் சொல்கிறார். மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் வழிபடுவாயாக என்று போதனை செய்கிறார்.

நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யார்அறிவார்
சாநாளும் வாழ்நாளும்? சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளும் தலைசுமப்ப, புகழ்நாமம் செவிக்கேட்ப
நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே.

சிவபெருமானுக்கு அர்ச்சனை செய்யப் பூவைக் கொடுக்க வேண்டுமாம். அவன் திருநாமத்தைக் கேட்க வேண்டுமாம். அவன் புகழைப் பாடவேண்டுமாம்.

பூவைப்பற்றிச் சொல்லும்போது, 'பூ நாளும் தலை சுமப்ப' என்று சொல்லுகிறார். சுமை சுமையாகக் கொண்டு போய்க் கொடுக்கவேண்டும்! அஷ்டோத்தரத்துக்கு அல்ல, சகஸ்ரநாமத்துக்கு மாத்திரம் அல்ல; லக்ஷார்ச்சனை, ஏன்?' கோடி அர்ச்சனையானாலும் அதற்கேற்ற பூவைத் தலை சுமக்க வேண்டுமாம். இந்தக் காலத்துப் பெண்கள் கனகாம்பரத்தையும் நீலாம்பரத்தையும் கட்டுக் கட்டாக வாங்கிச் சுமக்கத்தான் சுமக்கிறார்கள். ஆனால் ஞானசம்பந்தர் அப்படிச் சுமப்பதைச் சொல்லவில்லை.

மலரால் அர்ச்சனை செய்வதில் பக்தர்களுக்கு ஒரு தனி மோகம். மலர்களை மடியோடு வாயைக் கட்டிக் கொண்டு பறிப்பது சிலர் சம்பிரதாயம். தெய்வ அர்ச்சனைக்காகவே ஊர்தோறும் நந்தவனம் அந்தக் காலத்தில் இருந்தது. அங்கே பூஞ்செடிகளை வைத்து வளர்ப்பதற்கும் பறித்துக் கொடுப்பதற்கும் ஆண்டிகள் உண்டு. அந்த 'நந்தவனத்து ஆண்டி' யே புஷ்ப கைங்கரியத்தில் தலை சிறந்தவனாக இருப்பான்.

நந்தவனம் வைக்கும் சம்பிரமத்தை ஏற்றக்காரன் சொல்கிறான்.

**நாணல்மேட்டைக் கொத்தி நந்தவனம் வைத்தார்**
**புற்றுமேட்டைக் கொத்திப் பூஞ்செடியை வைத்தார்**
**கொல்லைமேட்டைக் கொத்திக் குடமல்லிகை வைத்தார்**
**மோரவெளி கொத்தி முல்லைச்செடி வைத்தார்.**

நந்தவனத்தில் பல பல பூஞ்செடிகள் வைத்துப் பயிர் செய்கிறார்கள். செடிகள் தழைத்து அரும்பி மல

கின்றன. இப்போது மலர்களைக் கைகொண்டமட்டும் பறிக்கலாம்: எப்படிப் பறிக்கிறது?

எட்டிப்பறி பூவை விட்டுவிடு அரும்பை
தாவிப்பறி பூவை தள்ளிவிடு அரும்பை
ஓடிப்பறி பூவை ஒதுக்கிவிடு அரும்பை
தள்ளிவிட்ட அரும்பு தானாய் மலராதோ?
ஒதுக்கிவிட்ட அரும்பு உடனே மலராதோ?
பூவைப்பறிப்பேனே, புள்ளையார்க்குச் சாத்த!
காயைப் பறிப்பேனே, கந்தருக்குச் சாத்த!
மொக்கைப் பறிப்பேனே விக்னருக்குச் சாத்த!

குடலையிலும் கூடையிலும் பறிப்பார் பறிக்க ஏழைப் பெண் ஒருத்தி தன் முன்றானையை விரித்துப் பூவைப் பறிக்கிறாள். ஆனால் பாவம், அந்த முன்மடிகூடப் பொத்தலாக இருக்கிறது!

முல்லைபறி பெண்ணே, முன்மடியைக் கோலி;
தாவிப்பறி பெண்ணே, தளர்மடியைக் கோலி;
முல்லையுஞ் சிறிசு; முன்மடியும் பொத்தல்
மல்லிகை பெரிசு; மார்மடியும் பொத்தல்!

துணியில் பூவைப் பறித்தல் ஆசாரத்துக்கு ஆகாது. ஆனால் அந்தப் பெண்ணோ அன்புகொண்டு பறிக்கிறாள். முன் மடியும் மார் மடியும் பொத்தலானாலும் அவள் உள்ளம் உண்மையன்பு செறிந்து விளங்குகிறது. ஆகவே, அவளுடைய அன்புதான் மலரைவிட மணக்கிறது. பூவைப் பறித்து அர்ச்சனை செய்து மறுமையிலே கடவுளை அடையும் பாக்கியம் சிலருக்குத்தான் கிடைக்கும். ஆனால் இந்தப் பெண் கிழிந்த மடியிலே பூவைப் பறிக்கும் போதே வேலர், நந்தவனம் பார்க்கும் சாக்கிலே வந்துவிட்டார்.

நந்தவனம் பார்க்கக் கந்தர்இதோ வாறார்!
பூஞ்செடியைப் பார்க்கப் புண்ணியரும் வாறார்!
வெள்ளானை மேலேறி வேலர்கூட வாறார்!
பொற்கரகந் தண்ணீர் பூவுங்கொண்டு வாறார்!
கற்பக விருட்சம் கையில்தாங்கிக் கொண்டார்
ஊனினார் பிரம்பை, உள்ளங்கால் சிலம்பை;
பாதச்சிலம் பாடப் பயணமானார் ஸ்வாமி.

*அர்ச்சனை செய்வதற்கு முன்பே வந்து தரிசனம் கொடுத்தார் சுவாமி.*

*ஏழையின் பூசை இப்படி. இனிப் பணக்காரர் பூசையையும் நாடோடி தன் பாட்டில் வருணிப்பதைப் பார்க்கலாம். கோவலன் சிவபூசை செய்கிறான். அந்தச் சம்பிரமத்தைப் பின்வரும் அடிகள் வெளியிடுகின்றன.*

பூசைகள் தான்முடிக்கப்
புண்ணியரும் வாறாரே
எதாஸ்தானந் தேடி
இருந்தாரே கோவலனார்
ஆற்று மணலெடுத்து
ஆவுடையார் உண்டுபண்ணி,
சேற்று மணலெடுத்துச்
சிவலிங்கம் உண்டுபண்ணி,
தோட்ட மதுதிறந்து
தொன்னைதைத்துப் பூவெடுத்து
வாசற் படிதிறந்து
வண்ணலட்சம் பூவெடுத்து,
கொண்டுவந்த புட்பமதைக்
குபுகுபென்று தான்சொரிந்து
வாரிவந்த நல்லபுட்பம்

மலைபோலே தான்சொரிந்து
அட்டாளுஞ் சொக்கரையும்
அங்கயற்கண் ணம்மனையும்
அன்பாக வே மனசில்
ஆணழகர் தான்நினைத்து,
கண்ணிரண்டும் மூடிக்கொண்டு
கையிரண்டும் ஏந்திக்கொண்டு
சிவசிவா என்றுசொல்லிச்
செயகண்டி தானடித்தார்.

*வண்ண லட்சம் பூவெடுத்து மலை போலே சொரிந்த கோவலனுக்குக் கடவுள் உடனே அருள் செய்யவில்லை. சின்னஞ் சிறு மல்லிகை மலரை முன் மடியைக் கோலிப் பறித்த பெண்மணிக்கு அருள் செய்ய வருகிறார். அந்தப் பெண் பூப்பறிக்கும் அழகைப் பார்க்கத்தான் வேலர் வந்தாரோ என்னவோ!*

# ௯

# புத்திர பாக்கியம்

'ஒரே ஓர் ஊராம்; அந்த ஊருக்கு ஒரு ராஜாவாம், அந்த ராஜாவுக்கு அழகான ராணியாம்; இரண்டு பேருக்கும் பிள்ளையே இல்லையாம். அதனால் பகவானை நோக்கித் தபசு பண்ணினார்கள். ஆயிரங்காலம் தபசு பண்ணின பிறகு பகவானுடைய அருளினாலே ஒரு குழந்தை பிறந்தது' என்று இப்படிக் கதைகளை ஆரம்பிக்கிறது நம்முடைய நாட்டுச் சம்பிரதாயம். நல்ல பிள்ளை பெறுவதற்குக் கடவுள் திருவருள் மிகவும் அவசியம் என்ற கொள்கை ஒருபுறம் இருக்க, வாழ்க்கையிலே இன்பத்தைப் பூர்த்தி செய்வதற்குக் குழந்தைகள் வேண்டுமென்ற எண்ணம் நம்முடைய தர்ம தேசத்திலே தொன்று தொட்டே இருந்துவருகிறது. எந்த மொழியிலே யானாலும் சரி, இலக்கியங்களெல்லாவற்றிலும் இந்தக் கொள்கையைப் பல பல இடங்களிலே, பல பல விதமாகப் பார்க்கலாம். 'நல்ல மனைவி வாய்த்தால் அவள் வீட்டுக்கு மங்கலம்; நல்ல பிள்ளை உண்டானால் அந்தக் குழந்தை அவர்கள் வாழ்வுக்கே அணிகலம்' என்று திருவள்ளுவர் சொல்கிறார். தசரதர் முதலியவர்கள் பிள்ளை வேண்டுமென்று தவம் செய்ததும் யாகம் செய்ததும் இதிகாசங்களாகவும் புராணங்களாகவும் இந்த நாட்டில் உலவுகின்றன.

பிள்ளையில்லாதவர்கள் செய்யும் தான தருமங்கள் இன்றளவும் இந்தத் தேசத்தில் அளவிறந்துள்ளன. செல்வத்தின் தகுதிக்கு ஏற்ப அந்த அறச் செயல்கள் பெருகுகின்றன.

சேராம்பூ ராசாக்கள் பிள்ளையில்லை என்று செய்த தருமத்தை நாடோடிப் பாவலன் சொல்லுகிறான்:

கண்டகண்ட கோவிலெல்லாம்
　　கையெடுத்துக் கும்பிடுவார்;
காணாத கோவிலுக்குக்
　　காணிக்கை அனுப்பிவைத்தார்;
இலையிலே சாதமுண்டால்
　　என்னதவம் என்றுசொல்லித்
தரையை அவர்மெழுகிச்
　　சாதங்கள் உண்டார்கள்;
பாலடைக்குப் பால்கொடுப்பார்,
　　பசித்தார் முகம்பார்ப்பார்;
தவித்துவந்த பேர்களுக்குத்
　　தண்ணீர் கொடுப்பார்கள்;
சாலைகள் போட்டுவைத்தார்,
　　சத்திரங்கள் கட்டிவைத்தார்;
நல்லதண்ணீர்க் கிணறுகளும்
　　நடைவாவி கட்டிவைத்தார்;
அந்தணர் பிராம்மணர்க்கு
　　அக்ரகாரம் கட்டிவைத்தார்;
தேசபர தேசிகட்குத்
　　திருமடங் கட்டிவைத்தார்;
குளங்களை வெட்டிவைத்தார்,
　　கோபுரமுங் கட்டிவைத்தார்;
என்னதவம் பண்ணினாலும்
　　எதனாலும் பிள்ளையில்லை;
பெருமையாய்ப் பத்தாண்டு
　　பெய்த பெருமழைக்குத்
தெப்பமாய் மிதந்துநின்று
　　சேர்ந்துதவம் பண்ணினார்கள்;

மைந்தனை வேண்டியல்லோ
　　மாளிகை மறந்தார்கள்?
புத்திரனை வேண்டியல்லோ
　　பூமியை மறந்தார்கள்?
அவர் மேல் - ஆலம் விழுதோடி
　　அறுகு முளைத்திடவும்
அரகரா வென்றுசொல்லி
　　அகோர தவம் பண்ணினார்கள்.

* * * *

*பாண்டியர்கள், பிள்ளைகள் இல்லாத பெருமலடராய்ப் போனார்களாம்.*

மைந்தனும் இல்லாமல் மாபாவி ஆனார்கள்
பிள்ளையும் இல்லாமல் பெரும்பாவி ஆனார்கள்
குழந்தை குரல்கேளாக் கொடும்பாவி ஆனார்கள்.

*அதற்காக அவர்கள் செய்த தான தருமங்களை வரிசைப்படுத்தி அடுக்குகிறார் நாடோடிக் கவிஞர்:*

மைந்தன்பெற வேண்டுமென்று
　　வருந்தியே பாண்டியர்கள்
சாலைகள் போட்டு வைப்பார்,
　　சத்திரங்கள் கட்டிவைப்பார்;
நடைவாவி திருக்குளமும்
　　நல்லதண்ணீர்க் கிணறெடுப்பார்;
தவித்து வரு வார்க்குத்
　　தண்ணீர்ப்பந்தல் இட்டுவைப்பார்;
பசித்து வருவார்க்குப்
　　பாலமுதம் செய்துவைப்பார்;

ஆலயங்கள் தோறும்
அணிமதிற் கட்டிவைப்பார்;
கோயில்கள் தோறும்
கோபுரங்கள் கட்டிவைப்பார்;
காணுத கோயில்கட்குக்
காணிக்கை அனுப்பிவைப்பார்;
செங்கல்லைக் கண்டவுடன்
தெய்வமென்று கைதொழுவார்;
கருங்கல்லைக் கண்டவுடன்
கர்த்தனென்று கைதொழுவார்.

ஏற்றக்காரன் பாட்டுக்கு வருவோம்.

ஒரு பெண் தன்னுடைய உள்ளத்திலே மறுகிப் பொங்கிய துக்கத்தைத் தாங்க முடியாமல் விம்மி விம்மி அழுகிருள்; மான் அழுதாற்போல் அழுகிருள். அந்த அழுகையிலே மென்மை இருந்தாலும் கேட்டவர்கள் உள்ளத்தை அறுத்து உருக்குகிறது.

"ஏன் அம்மா அழுகிருய்? உன்னை யாராவது அடித்தார்களா?"

அவள் பின்னும் விம்மி விம்மி அழுகிருள்.

"உன்னை உன் மாமன் அடித்தானே?"

அவள் அழுதுகொண்டே பதில் சொல்கிருள். அவளை ஒரு மனிதரும் தீண்டவில்லையாம். புருஷன் அடிக்கவில்லை; கொழுந்தனும் அடிக்கவில்லை. பின் எதற்காக அழுகிருள்?

"ஐயோ! நான் படுபாவி. எங்கள் வீட்டில் ஒரு குறையும் இல்லை. அதோ அந்த வீட்டில் வட்டில் நிறையச் சோறு வைத்திருக்கிருள் அந்த மகராசி.

அதை அந்தக் குழந்தை தன் குறுங்கையை நீட்டி வாரி அளைந்து உண்ணுகிறது. எனக்கு அந்தப் பாக்கியம் இல்லையே!''

அவள் தனக்கு ஒரு குழந்தை இருந்தால் என்ன என்ன செய்வாளென்பதைக் கற்பனை செய்து சொல்லிச் சொல்லி அழுகிறாள். 'தண்ணீருக்குப் போனால் தடத்தை மறித்து என் காலைக் கட்டிக்கொண்டு அழுவான். ஊருக்குப் போனால் என் குழந்தை என்று பெருமிதத்தோடு கைநிறைய ஏந்திக்கொண்டு போகலாம். வீதியிலே யாரேனும் கூடையிலே ஏதாவது கொண்டுவந்தால் அழைத்து வந்து வாங்கும்படி துன்புறுத்துவான்'—இப்படியெல்லாம் அவள் மனத்திலே எண்ணி எண்ணி அழுகிறாள். என்ன இருந்தாலும் பிள்ளையில்லாத குறை பெருங்குறை என்பதை அவள் துக்கக்குரலின் சுருதி தெரிவிக்கிறது.

ஏன் அழறே பெண்ணே?
 ஏன் அழறே பெண்ணே?
ஏன் அழறே பெண்ணே நீ
 மான் அழுதாப் போலே
மான் அழுதாப் போலே—உன்னை
 மாமன் அடிச்சானோ?
மாமன் அடிச்சானோ
 மல்லிகைட்பூச் செண்டால்?
மாமன் அடிக்கல்லே—ஒரு
 மனிதர் தீண்டவில்லை
புருஷன் அடிச்சானோ—ஒரு
 பொரப்பங் கழியாலே?
புருஷன் அடிக்கல்லே—ஒரு
 பூதர் தீண்டவில்லை

கொழுந்தன் அடிச்சாளுே—உன்னைக்
 கோத்தடியி னுலே?
கொழுந்தன் அடிக்கல்லே
 ஒருகோவும் தீண்டவில்லை
(நான்) வட்டிலிலே போட்டசாதம்—சாமி
 வாரித் தின்ன மைந்தனில்லை!
கிண்ணியிலே போட்ட சாதம்
 கீறித்தின்னப் பிள்ளை இல்லை!
தண்ணிக்குப் போகையிலே
 தடம்மறிக்கப் பிள்ளையில்லை!
ஊருக்குப் போகையிலே
 உடன்வரப் பிள்ளையில்லை!
அங்காடிக் கூடையை
 அழைத்துவர மைந்தனில்லை!
வெங்காயக் கூடையை
 விலைமதிக்க மைந்தனில்லை!
மழைபெய்த வாசலிலே—நான்
 மைந்தனடி காணேனே!
மைந்தனடி காணேனே—நான்
 மறுகி அழுகிறேனே!*

---

*இந்தப் பாட்டை எனக்கு உதவியவர் ஸ்ரீ பூவாளூர் சுந்தரராமன்.

# 10
# பொங்கல் பாட்டு

அம்மாயி அம்மாயி
ஏண்டி ஏண்டி அம்மாயி
தையும் பிறந்தது
தரையும் குளிர்ந்தது
தைமாதப் பெண்கள் எல்லாம்
தட்டாப் புறப்பட்டார்
கொட்டாப் புறப்பட்டார்
அம்மாயி அம்மாயி!

"**தை** பிறந்தால் வழி பிறக்கும்" என்பது தமிழ் நாட்டுப் பழமொழி. உழுது பரம்படித்து விதை தெளித்துக் களை பிடுங்கி எரு விட்டுப் பாதுகாத்த பயிர்கள் விளைந்து முற்றி நிற்கின்றன. அவற்றை அறுவடை செய்து வீடு நிறையக் கொணர்ந்துவைத்து மகிழ்கிறான் குடியானவன்.

வாழ்வுக்கும் சாவுக்கும் தை மாதம் இனிமையை ஊட்டுகிறது. ஆம், கல்யாண நாள், தை முதல் தேதியில் தொடங்குகிறது. பழுத்து உலர்ந்து போன கிழங் கட்டைகள் எங்கே தம் உயிருக்குத் தக்ஷிணாயனத்திலேயே யமன் ஓலை அனுப்பி விடுவானோ என்று உத்தராயணத்தை எதிர்பார்த்து நிற்கிறார்கள். பீஷ்மர் பாரத யுத்தத்தில் பட்டுக் கிடந்தபொழுது தைமாதப் பிறப்பை எதிர் நோக்கிப் போகிற உயிரைத் தாங்கி அம்புப்படுக் கையிலே தவம் புரிந்து கிடந்தாரென்று வாசிக்கிறோமே!

தைப் பொங்கல் நிறைவுக்கு அறிகுறி; பசியும் நோயும் பறந்து சென்றன என்ற இன்பத்துக்கு அடை

டாள நாள். வீடெல்லாம் விளக்கிச் சுண்ணும்பும் செம்மண்ணும் இட்டு அழகு பண்ணுவது நம் நாட்டவர் வழக்கம். தேவர்களுடைய பகல் தை மாதத்திலே தொடங்குகிறது.

வேளாண்மையைச் செல்வமாகக் கொண்ட இந்த நாட்டிலே நெல்லும் கரும்பும் நிலத்துக்குப் பெருமை தருகின்றன. புலவர்களெல்லாம் நிலவளத்தைச் சொல்லும் பொழுது நெல்லையும் கரும்பையும் நிறைத்து வைக்கின்றனர். ''நிலத்துக்கு அணி என்ப நெல்லும் கரும்பும்'' என்று ஒருவர் பாடுகிறார்.

நிலவளம் படைத்த தமிழ் நாட்டில் நெல்லும் கரும்பும் நிறைந்த நாள் தைப் பொங்கல். புது நெல்லைக் குத்திய அரிசியையும், விளைந்த கரும்பை ஆலையிலிட்டுச் செய்த வெல்லத்தையும் கொண்டு பொங்கலிட்டுக் களிக்கிறான் தமிழன். அவனுடைய நிலம் வளம் பெற்ற தென்பதை அந்தப் பொங்கல் சொல்லுகிறது. தன் நிலத்திலே விளைந்த நெல்லும் கரும்பும் தன் மனையிலே வளரும் பசுவின் பாலும் அவனது மனையிலும் மனத்திலும் இன்பப் பொங்கலை உண்டாக்குகின்றன.

அவன் பொங்கலைப் படைத்துச் சூரியனை வணங்குகிறான். சூரியன் இல்லாவிட்டால் ஒளி ஏது? உயிர் ஏது? சந்திரனையும் சேர்த்து வழிபடுகிறான். பயிர் விளைவதற்குச் சந்திரனுடைய அமுத கிரணங்கள் உதவுகின்றன. தமிழ் நாட்டு மகளிர் அவனை எரு விட்டு வழிபடுதல் பழைய காலத்து மரபு.

சூரியனையும் சந்திரனையும் வணங்கும் இந்த வழக்கத்தைச் சிலப்பதிகாரமென்னும் அரிய தமிழ்க் காவியத்திலே காணலாம். ஒளியால் உலகை எழுப்பும் சூரியனும், தண்மையால் உலகுக்குச் சாந்தியைத் தரும் சந்திரனும் கண்கண்ட தெய்வங்கள்.

பொங்கற் புது நாளில் தமிழ் மக்கள் களி துளும்பும் முகத்துடன் கடவுளை வழிபட்டுப் பொங்கல் விருந்து நுகர்கிறார்கள். "பால் பொங்கிற்றா?" என்று ஒருவரை ஒருவர் கேட்டு மகிழ்ச்சி அடைகிறார்கள். பாலாறு தேனாறாக வளஞ்சுரந்த பாரத நாட்டிலே இன்று பால் பொங்க வழி இல்லை. இருக்கிற சொட்டுப் பாலும் காலக் கொடுமையால் தீய்ந்துபோய்விடுகிறது.

பொங்கலுக்கு மறுநாள் மாட்டுப் பொங்கல். அன்று காலையில் பெண்கள் நீராடிவிட்டு முதல் நாள் சமைத்த பொங்கலை மஞ்சள் இலையிலே காக்கைக்கு விருந்திட்டுத் தாமும் உண்கிறார்கள். இதைக் 'கனு' என்று சொல்லுவார்கள். முதல் நாள் சமைத்த பொங்கல் நன்றாக ஊறிக் கனிந்து மறுநாள் பஞ்சாமிர்தம்போல இனிக்கிறது. இந்தக் 'கனிவுப் பொங்கலை'க் காக்கைக்கு இட்டுத் தாமும் உண்டு மகிழும் பெண்களின் முகத்திலே என்ன ஒளி! என்ன ஆனந்தம்!

வயல்களிலே வேலை செய்த பெண்களுக்கு இந்த இரண்டு நாளும் வேலை இல்லை; ஓய்வு.

அவர்கள் கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து கும்மி அடிக்கிறார்கள். பழைய காலத்தில் அந்தக் கொண்டாட்டத்தைக் 'குரவை' என்று சொல்வார்கள்.

நடுவிலே ஒரு பிரப்பங் கூடையை வைத்துவிட்டு ஒவ்வொரு வீட்டுக்கு முன்னும் அவர்கள் சேர்ந்து பாடி, கைதட்டிக் கும்மி அடித்துக் குதூகலிக்கிறார்கள். ஒவ்வொரு வீட்டிலும் அவர்களது கூடையில் அரிசி போடுகிறார்கள்; வெல்லம் இடுகிறார்கள்.

அவர்கள் பாடும் பாட்டு புலவன் இயற்றியதல்ல. அது ஒரு நாடோடிப் பாட்டு. அதில் எதுகை, மோனை, தளை விசேஷங்கள் இல்லை. கட்டில்லாத கவிதை அது. ஆனாலும் அது நாட்டு மக்களின் உள்ளத்திலே உள்ள மகிழ்ச்சியை உணர்த்துகிறது. அந்தப் பெண்கள் பாடி

ஆடிக் கூடிக் குதிப்பதற்கு அந்தப் பாட்டு உதவியாக இருக்கிறது. 'பாட்டுக்கு ராகம் என்ன? தாளம் என்ன? இலக்கணம் என்ன?' என்ற கேள்விகளுக்கு அங்கே இடமில்லை.

தை பிறந்துவிட்டதென்ற மகிழ்ச்சிதான் அந்தப் பாட்டுக்குச் சுருதி. 'தையும் பிறந்தது; தரையும் குளிர்ந்தது' என்று உள்ளங் குளிர அவர்கள் பாடு கிறார்கள். உலகமே குளிர்ந்துவிட்டதாம். உணவு நிறைந்திருந்தால் உலகம் குளிர்வதற்கு என்ன சந்தேகம்? அதனால் தான் இந்தத் 'தை மாதப் பெண்க ளெல்லாம் தட்டும் கொட்டுமாக'ப் புறப்பட்டு விட்டார்கள். அவர்களுடைய தட்டும் கொட்டும் தைமாதப் பொங்கலிலே தொடங்கும் இன்ப வாழ்க் கையின் வசந்த கீதத்துக்குத் தாளம் இசைக்கின்றன. அவர்களுடைய களி நடத்திலே நாட்டுவளம் விளங்கு-கிறது.

இன்று விளங்குகிறதா?

அது வேறு விஷயம்.

'தரை குளிர்ந்து' உண்மையான 'தையும் பிறந்தால்' அந்தச் சிறப்பைக் காணலாம்.

# 11

## வீரமுள்ள வீராயி

தினந்தோறும் கூலி வேலை செய்து பிழைத்து வயிறு வளர்க்கும் குடும்பத்திலே பிறந்தவள் வீராயி. மானம் கெடாமல் வாழ வேண்டுமென்ற கொள்கையிலே ஊறிப் போனவள். ஆணும் பெண்ணும் 'சரிநிகர் சமானமாக' வாழும் சமூகத்தில் அவள் பழகினாள். ஆணுக்கு வீரம் இருந்தால் பெண்ணுக்கும் வீரமுண்டு. ஆண் வேலை செய்து பிழைத்தால் பெண்ணும் வேலை செய்து பிழைக்கிறாள். ஆணுக்குக் கோபம் வருவது உரிமையென்றால் பெண்ணுக்கும் கோபம் கொள்ள உரிமை உண்டு.

வீராயியின் உடம்பிலே பெண்மை அழகும் வேலைக்குச் சோம்பலில்லாத முறுக்கும் அமைந்திருந்தன. அவள் வார்த்தைகளிலே சாதுரியமும் தைரியமும் பொருந்தியிருந்தன. அவள் உள்ளத்திலே அன்பும் அஞ்சாமையும் சுரந்தன. கல்யாணமாகிச் சில மாதங்களே ஆகியிருக்கின்றன. மண வாழ்க்கையின் இன்பத்தை அவள் நுகர்ந்தாலும் அது மற்றக் கடமைகளை மறக்கும்படி செய்யவில்லை. பொறுப்பு அதிகமாகி விட்டதை நன்றாக உணர்ந்தாள்.

அவளுக்கு வாய்த்த கணவன் சோம்பேறி; சோறு போட்டால் தின்றுவிட்டுக் கிடப்பவன். ஆணழகன் என்றாலும் ஆண்மையழகனாக இருக்கவில்லை. முயற்சி இல்லாமல் பொழுது போக்கிவிட்டு, உண்பதும் உறங்குவதுமே கண்ட பயனாக வாழும் அவனுக்கும் வீராயிக்கும் பொருத்தம் இருக்கிறதென்று சொன்ன ஜோசியக்காரனுக்கு வாழைப்பூ மாலைதான் போடவேண்டும்.

கட்டிக்கொண்டாகிவிட்டது. இனிமேல் வேண்டாம் என்றால் முடியுமா? ''கல்லென்றாலும் கணவன், புல்லென்றாலும் புருஷன்'' என்பார்களே! அவள் தன் கணவனுக்கு ஆண்மை ஊட்டுவதென்று சங்கற்பம் செய்து கொண்டாள். 'மானஞ்சேர்க்கும் மனைவியின் வார்த்தைகள்' என்று பாரதியார் பாடுகிறார். அந்த உண்மையை உணர்ந்த வீராயி அவனுடன் கொஞ்சு கிளிமொழி பேசிக் காதல் செய்யும் போதினிலே கொஞ்சம் மிஞ்சிவரும் வார்த்தைகளையும் சொல்லி இடித்துரைப்பாள். மருந்தைத் தேனில் குழைத்துப் புகட்டும் தாய்போல அவனுக்கு இங்கித வார்த்தைகளிலே ஆண்களின் முயற்சிக்கு எத்தனை கௌரவம் இருக்கிறதென்பதைச் சுட்டிக்காட்டுவாள்.

அவள் வார்த்தை ஒன்றும் அவன் காதில் ஏறவில்லை. வீராயி, சாம தான பேத தண்ட சாமர்த்தியங்களிலே வல்லவள். தன் கணவனை எப்படியாவது வழிக்குக் கொண்டு வந்து விடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டவளாயிற்றே! அவள் தன் கணவனோடு ஊடத் தொடங்கினாள்.

அவள் ஊடல் வேலைசெய்ய ஆரம்பித்தது. மரக் கட்டையைப்போல நின்ற கணவனின் உடம்பிலே புகுந்து ரோசத்தை உண்டாக்கியது. புது மோகத்தின் மோகன சோபை இப்போது மங்கிவரும் தருணம். ஆகையால் வீராயியின் வார்த்தைகள் அவன் மனத்தில் இப்போது சுறுக்கென்று தைத்தன. சொல்லாமல் புறப்பட்டு விட்டான்.

வீராயி இதை எதிர்பார்த்து நின்றாள். தன் கணவனுக்கு ஆண்மை இப்போதுதான் உதயமாகியிருக்கிறதென்று மகிழ்பூத்தாள். ஆனாலும் உள்ளத்துக்குள்ளே பிரிவினால் உண்டாகிய வருத்தம் ஒளிந்து கொண்டு துன்புறுத்தியது. ஒரு நாள், இரண்டு நாள் ஆயின;

அந்த வருத்தம் சிறிது சிறிதாகத் தலைகாட்டத் தொடங்கியது.

'பாவம்! பச்சைக் குழந்தை மாதிரி போட்டதைத் தின்று கிடந்த அவரை நாம் ஏன் கோபித்துக் கொண்டோம்? நம்முடைய உடம்பில் பலம் இருக்கும் போது அவருக்கு உழைத்துப் போடாமல் வேறு என்ன செய்யப் போகிறோம்? எத்தனை சுகம் இருந்தாலும் கணவன் இல்லாத வாழ்வு ஒரு வாழ்வா?' என்று அவள் பெண்மையுள்ளம் ஒரு சமயம் ஏங்கும்.

அடுத்தபடி அவளது மானம் வீறி எழும்; 'சீ! இந்தப் புத்தி கெட்ட மனிசனோடு நூறு வருஷம் வாழ்வதைவிடச் சட்டென்று செத்துப் போய்விடலாம். ஆண் பிள்ளை யென்றால் வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு வேலை செய்து அரைக்காசாவது சம்பாதிக்க வேண்டாமோ! பெண்பிள்ளை சம்பாதித்துப் போட அதைத் தின்று கொண்டு கிடக்கும் பேடியை ஆண் என்று யார் சொல்வார்கள்? இப்படியெல்லாம் அலைந்து திரிந்தால் தான் ரோசம் வரும்; கைகால் அசைக்கத் தெரியும்; வயிறு காய்ந்தால் வேலை செய்யப் புத்திவரும்' என்று நினைத்துத் தன் ஊடலுக்கு அணைகோலிக் கொள்வாள்.

அவளுடன் பழகி அவள் உள்ளத்தை அறிந்திருந்த தோழி ஒருத்தி உண்டு. வீராயி தன் வீரத்தினால் கணவனை ஓட்டி விட்டாள் என்பதை அவள் தெரிந்து கொண்டாள்; அதோடு, வீராயியின் பெண்ணுள்ளம் வேதனைப்பட்டு மறுகுகிறதையும் நன்றாகத் தெரிந்து கொண்டாள். "அடி பாவிமகளே! செய்ததைச் செய்துவிட்டு இப்போது ஏன் அழுகிறாய்?" என்று சொல்லிப் பரிகசித்தாள் தோழி.

"இன்னும் நாலு நாள் போகட்டும். தானே வந்து சேரும். அதற்குப் போக்கிடம் ஏது?"

இப்படி வீராயி சொன்னாலும் உள்ளத்தின் அடித் தட்டிலே, "சாமி, கடவுளே, நாலு நாளில் அவர் சௌக்கியமாக வந்து சேர வேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள்.

வேண்டுகோள் பலித்தது. அந்த வெட்கங்கெட்ட ஆண் வடிவம் மீண்டும் வீடு வந்து சேர்ந்தது. அவன் தூரத்தில் வரும்போதே தெரிந்து கொண்ட தோழி ஓடி வந்தாள். அவனை வரவேற்று உபசாரம் செய்யும்படி வீராயிக்குச் சொல்லுகிறாள்.

ஏ குட்டி வீராயி
உன் புருசன் வாராண்டி!
வீட்டை மெழுகடி!
வெள்ளிப்பாயைப் போடடி!
கிள்ளிமுள்ளிச் சந்தனத்தைக்
கிட்டஎடுத்து வையடி!
மதுரைக் கோட்டை வெற்றிலை
மடிச்சு மடிச்சு வையடி!
ஒழுக ஒழுகச் சந்தனத்தை
மார் நிறையப் பூசடி!

தோழிக்கு உணர்ச்சி பொங்கி வருகிறது. வீராயியோ அவனைச் சிறிதும் எதிர்பாராதவள்போல் உணர்ச்சி யலைகளை அடக்கிக்கொண்டு நிற்கிறாள். அவன் வீட்டுக்குள் அடி வைத்துவிட்டான்.

இப்போது என்ன செய்வது? வெள்ளிப் பாயைப் போடுவதா? வெற்றிலையை மடித்து வைப்பதா? சந்த னத்தைப் பூசுவதா? அப்படிச் செய்தால் அந்த ஆண் பிள்ளை மறுபடியும் பெண் பிள்ளையாகிவிட்டால் என்ன செய்வது? அவனுக்கு உபசாரம் செய்வதற்கு வீட்டிலே கொட்டியா கிடக்கிறது? சந்தனத்தையும் வெற்றிலை

யையும் சொந்தச் சம்பாத்தியத்திலிருந்து வாங்கிப் போட்டிருக்கிருளு, என்ன?

வீராயியின் வீரம் சளைக்கவில்லை. அவன் காதில் படும்படி தோழியைப் பார்த்துப் பதில் சொல்லுகிருள்:

பச்சை நெல்லும் கிச்சை நெல்லும்
குத்துவான்ளு இருக்கிறே?
பதினெட்டுப் பணியாரம்
சுடுவான்ளு இருக்கிறே?
கொட்டாங்கச்சி மாப்பிள்ளையை
அழைப்பான்ளு இருக்கிறே?
ஒழுக ஒழுகச் சந்தனத்தைப்
பூசுவான்ளு இருக்கிறே?

கொஞ்சம் பெருமூச்சு விட்டுக்கொள்கிருள். மேலே,

பாக்கு மரத்திலே பாக்கில்லை
பண்டாரந் தோப்பிலே பூவில்லை
நேத்தறுத்த சாவலுக்கு
நெத்தமு மில்லை - இந்தப்
புத்திகெட்ட மகனுக்கு
வெட்கமும் இல்லை

என்று சொல்லித் தன் ஆத்திரத்துக்கு முற்றுப் புள்ளி வைக்கிருள். பேச்சின் வேகமும் அது வந்து முடிகிறதும் ஒரு நாடகம்போல அமைகின்றன. 'இந்தப் புத்திகெட்ட மகனுக்கு வெக்கமும் இல்லை' என்று நிறுத்தும்போது அவன் கன்னத்திலே ஓர் இடி இடித்திருப்பாளென்று தோற்றுகிறது. அந்த அபிநயம், வார்த்தை போகிற வேகத்திலேயே அகக் கண்ணில் தெரிகிறது.

இவ்வளவும் அவனுக்கு உணர்ச்சியூட்டி உசுப்பிவிட்டு ஆளுக்கத்தான். மூன்றாவது மனுஷிக்கு எதிரே இப்படிச் சொன்னால்தானே கொஞ்சநஞ்சம் தலையெடுத்திருக்கிற ரோசம் வளர்ந்து முயற்சியாகப் பரிணமிக்கும்? இந்தத் தந்திரத்தை உணர்ந்த வீராயி கடுமையாகப் பேசினாலும், அவனை அவள் உள்ளத்திலே வைத்துப் பூசிக்கிறாள் என்பதை மறக்கக்கூடாது.

அவள் வார்த்தைகள் மேலுக்குச் சுட்டாலும் உள்ளே அன்பை அடக்கிக்கொண்டிருக்கின்றன. அந்த மனிதன் அவள் இடும் விருந்திலும் இன்ப அணைப்பிலும் சுகம் காணவே பிறந்தவன்; அவன் பாக்கியசாலிதான்.

---

இதில் வரும் பாட்டை எனக்குச் சொன்னவள், மோகனூர் வீராயி.

# 12

## தவளையின் புலம்பல்

இருபுறமும் வயற்காடு. பரந்த நிலத்திலே நிலமகளுக்கு வகிடு எடுத்ததுபோலப் போகிறது ஒரு சாலை. உழுது பரம்படித்து நீர் நிரம்பியிருக்கும் காலத்திலே பார்த்தால் எங்கும் ஒரே நீர்மயம். அதனிடையே பாலம் போட்டாற்போலச் செல்லும் கப்பிப் பாதையிலே லொடக் லொடக்கென்று போகும் கட்டை வண்டியின் சஞ்சாரந்தான் அதிகமாக இருக்கும். வயல் வரப்புகளிலே நண்டும் தவளையும் குடியிருந்து பரம்பரையாக வாசம் செய்யும். மழைக் காலங்களில் தவளைகள் இடும் கணகண சப்தமும், சாலையிலே போகும் வண்டிகளின் கடகட சப்தமும் சேர்ந்து அங்கே உள்ள சாந்தியைக் கலைக்கும்.

இந்த மாதிரியான இடத்தில் ஒரு வயலிலே ஒரு வங்கில் ஆண் தவளையொன்றும் பெண் தவளையொன்றும் வாழ்ந்து வந்தன. காதல் செய்யும் உரிமை மனித சாதிக்குமட்டும் சொந்தமா? தவளைக்கும் காதல் இருப்பதற்கு நியாயம் உண்டு. ஆனால் மனிதன் காதலை வெளியிடக் கவிதையைக் கண்டுபிடித்திருக்கிறான். தவளைக்கு அது தெரியாது.

அதனுடைய கண கண, கப கப சப்தத்திற்கு அர்த்தம் தெரிந்துகொண்டு ஆராய்ச்சி செய்தால் ஒரு கால் அதன் காதற்பாட்டை உணர்ந்து கொள்ளலாமோ, என்னவோ!

ஆண் தவளை தைரியமாக வயல் வரப்பை அளவிட்டு உணவுப் பொருளைச் சேகரித்துத் தன் வங்குக்குக் கொண்டு வரும். அதைப் பெண் தவளை வாங்கி வைத்துக்

கொள்ளும்; உண்டு இன்புறும். ஆண் தவளைக்குத் துணிச்சல் அதிகம்; வயல் வரப்பைத் தாண்டிக்கொண்டு மாலைக் காலத்தில் தத்தித் தத்தி மனிதர் நடமாடும் சாலையிலே ஒய்யாரமாக உலாப் பழகுவதும் உண்டு. இந்தச் சமாசாரம் பெண் தவளைக்குத் தெரியாது. ஒரு நாள் தெரிந்தபோது அதற்குப் பகீரென்றது: "மனிதருடைய ராஜ்யத்திலே நாம் தலையிடலாமோ? அவர்கள் பவனி வரும் வீதியிலே நாம் போனால் நம் உயிருக்கே ஆபத்து வந்துவிடும். இந்தச் சாலை அவர்களுக்கு வண்டியும் பண்டமும் வரும் வழி; நமக்கு வேதனையும் மரணமும் வரும் மார்க்கம்" என்று நயமாகத் தன் கணவனிடம் சொல்லிற்று. ஆண் கேட்டுச் சிரித்தது. "எனக்கு எல்லாம் தெரியும்" என்று ஒரேயடியாய் அடித்துப்-பெண் தவளையின் வாயை அடக்கிவிட்டது.

'ஐயோ, தெய்வமே!' என்று அது அடங்கி ஆண்டவனிடம் தன் பிரார்த்தனையை வெளியிடத் தொடங்கியது.

* * * *

ஒரு நாள், அமாவாசை இருட்டு; ஆண் தவளையின் உற்சாகம் அளவுகடந்து போய்விட்டது. உச்சஸ்தாயியில் பாடிக்கொண்டே வரப்பின் மேல் உட்கார்ந்து கொண்டது. திடீரென்று சாலையில் தாவிக் குதிக்கும்; மறுபடி வரப்பிற்கு வந்துவிடும்; மறுபடியும் சாலையில் தத்தித் தத்தி ஓரமாகச் சிறிது தூரம் போகும்; மீண்டும் வரப்புக்கு வந்துவிடும். ஒவ்வொரு தடவைக்கு ஒரு தடவை தைரியம் அதிகமாகவே, சாலையில் மறுபக்கத்து ஓரம் வரையில் போய்ப் போய்த் திரும்பிவர ஆரம்பித்தது. அதற்கு அன்று மரண தேவதை அந்த வழியே ஊர்வலம் வருவது தெரியவில்லையே, பாவம்!

கட்டை வண்டியின் உருவத்தில் காலன் வந்தான். வண்டிக்காரனுக்குப் பசி. இருட்டிவிட்டதே என்று

படுவேகமாக மாட்டை விரட்டிக்கொண்டு வந்தான். வண்டியின் வேகத்தினால் உண்டான அதிர்ச்சி தவளையின் காதில் இடி இடித்தது போல இருந்தது. அப்போது சாலையின் எதிர்ப்பக்கத்திற்குச் சென்றிருந்த தவளை, 'இந்த விளையாட்டுப் போதும்; வீட்டுக்குப் போய்விட வேண்டும்' என்று நினைத்துச் சாலையைத் தாண்டிற்று.

'சதக்!'. தவளையின் உயிர் வண்டியை விட வேகமாக ஓடிவிட்டது. வாழ்க்கையின்மேல் எவ்வளவோ ஆசை கொண்ட ஒருயிர் இப்படி அநியாயமாய்ப் பிரிந்துவிட்ட செய்தியை வண்டிமாடுகள் அறியுமா? வண்டிக்காரனுக்குத்தான் தெரியுமா? வண்டிக்காரனுக்கு அவன் பசி பெரிது. அவனுக்கு மேலே காலன் பசித்திருந்தான்.

பெண் தவளை தன் நாயகனை எதிர்பார்த்துக் காத்திருந்தது. வழக்கப்படி வரும் நேரத்திற்கு வரவில்லை. அதன் வயிற்றில் புளியைக் கரைக்க ஆரம்பித்தது. சொல்ல முடியாத வேதனையோடு தத்தளித்தது. வரப்பிலெல்லாம் தேடிப் பார்த்தது. தன் மெல்லிய குரலால் அழைத்துப் பார்த்தது. அலறிக் கூவியது. ஒன்றும் பயன்படவில்லை. இரவு முழுவதும் தேடியும் தன் பர்த்தாவைக் காணாமல் அலமந்து திரிந்தது. அது காலையில் சாலையோரத்துக்கு வந்து பார்க்கும் போது அங்கே ஒரு சிறிய ஊர்வலம் நடந்துகொண்டிருந்தது. ஆம்! ஆண் தவளையின் உடலை ஆயிரக்கணக்கான எறும்புகள் தூக்கிக்கொண்டு சென்றன. கறுப்பெறும்பும் செவ்வெறும்பும் அணி அணியாகத் திருமேனியைச் சூழ்ந்து ஆரவாரித்தன. எறும்பு ராஜ்யத்தில் அன்று ஒரு திருநாள்.

பார்த்தது பெண் தவளை. கட்டெறும்பு மொய்க்க மொய்க்க ஆண் தவளை கறுப்புக் குதிரையின் மேல் சவாரி செய்கிறது போல இருக்கிறது; கால் இரண்டும்

வேறு தொங்குகின்றன. செவ்வெறும்பின் சூழலிலே பார்த்தால் சிவப்புக் குதிரைமேல் சவாரி பண்ணுவது போல இருக்கிறது!

பெண் தவளைக்குத் துக்கம் பொங்குகிறது; உணர்ச்சி உள்ளத்தைப் பீறுகிறது. தன் அருமைப் பர்த்தாவை இழந்து நிர்க்கதியான நிலையிலே அந்தத் திருமேனியின் கோலத்தைப் பார்த்துப் பார்த்துப் பொருமுகிறது; பொருமிப் பாடுகிறது. பாடிய பாட்டை யார் கேட்டார்கள்? ஒரு நாடோடிப் புலவன் கேட்டான். தவளையின் புலம்பல் மொழி அவனுக்கு அர்த்தமாகிவிட்டது. அதை மனத்தில் வாங்கிக்கொண்டு மனித உலகத்துக்கு மொழி பெயர்த்துப் பாட்டாகச் சொல்லியிருக்கிறான்.

சோகரசம் ததும்புகின்ற அந்தப் பாடல் வருமாறு:

அங்கிங் கீங்கும் பத்தாவே — சாமி
கிங்கிங் கீங்கும் பத்தாவே!
அங்கிங் கீங்கும் தேடிப் பார்த்தேன் — சாமி
எங்கெங்கெங்கும் காணேனே!
கட்டெறும்பு மொய்க்க மொய்க்கச் — சாமி
காலிரண்டும் தொங்கத் தொங்க,
கறுப்புக் குதிரை மேலே ஏறிப்
போறீரோ பத்தாவே?
சிற்றெறும்பு மொய்க்க மொய்க்கச் — சாமி
சிவனார் குடை பிடிக்க,
சிவப்புக் குதிரை மேலே ஏறிப்
போறீரோ பத்தாவே!

வாழை மரத்தடியில் — சாமி
மா[illegible]டார் வீடிருக்க
யாவருக்கும் சொல்லாமலே
போநீரோ பத்தாவே!
அங்கிங்கீங்கும் தேடிப் பார்த்தேன் — சாமி
எங்கெங்கும் காணோமே!

# 13

# மூன்று முனை

ஊசி முனையிலே தவம் இருப்பது கஷ்டமாம்; ஆனால் பழங்காலத்துத் தமிழ் நாட்டுக் கதைகளிலே எவ்வளவோ பேர் ஊசி முனையிலே தவமிருந்து பயன் அடைந்ததாகப் பார்க்கிறோம். நெருப்பாற்றின்மேல் மயிர்ப் பாலம் போட்டுச் சென்ற வீராதி வீரர்களைப் பற்றிப் படிக்கிறோம். ராட்சசர்களுடைய மர்மங்களை உணர்ந்து அவர்களுடைய உயிருலவும் இடந்தெரிந்து அவற்றைக் குலைத்துச் சங்கரித்த கதைகளையும் கேட்டிருக்கிறோம். இவையெல்லாம் இந்த நாட்டுக் கற்பனையிலே படர்ந்தவை. அப்படிக் கற்பனை செய்வதிலும் அதைக் கேட்டு ரசிப்பதிலும் நம்மவர்களுக்கு இன்பம் உண்டாகிறது. யாருக்குத்தான் இல்லை? உலகம் முழுவதும் இத்தகைய அபூதக் கற்பனைகளிலே மயங்குகிறது; குழந்தைப் பருவத்திலேதான் இந்தக் கற்பனைகள் அதிகச் சுவையை உண்டாக்குகின்றன. மேல் நாட்டினர் கூறும் மோகினிக் கதைகள் (Fairy Tales) எத்தனை! அவற்றைச் சிறு பிள்ளைகள் எவ்வளவு ஆவலாகக் கேட்கிறார்கள்!

செய்ய முடியாத காரியத்தைச் செய்யும் வீரர்களின் கதைகளோடு அந்த வகையிலே சில பாட்டுக்களும் உலவுகின்றன. இரண்டுக்கும் ஆதாரம் மனப்பாங்குதானே? செயற்கரிய காரியத்தை ஒருவன் செய்கிறான்; அதற்கு ஆயிரந் தடைகள் வருகின்றன. அந்த வீரன் அவற்றையும் புறங்கண்டு வெற்றியடைகிறான். இந்த மூலக் கருத்தைத்தான் ராமாயணம் முதல் சித்திரக்குள்ளன் கதை வரையில் பார்க்கிறோம்.

தடைகள் வரவர மனிதனின் முயற்சி பெருகுகிறது; வீரம் வெளிப்படுகிறது. தடைக்கு அஞ்சி நழுவுபவன் ஆணாக மாட்டான். ஆதலால் வீரர் கதைகளில் தடைகளும் வெற்றிகளும் வருகின்றன; அதனால் கதை நீளுகிறது. கேட்பவனுடைய உள்ளமும் மயங்கி நிற்கிறது.

பாட்டிலே இப்படி வரும் ஒன்றைப் பார்க்கலாம். இது கதையல்ல; கதையும் கொஞ்சம் இருக்கிறது. ஒருவன் முயற்சி செய்கிறான்; வேண்டிய கருவிகள் இல்லாமலே தன்னுடைய உற்சாகத்தையே துணைகொண்டு முயல்கிறான். பலன் சிறந்ததாக இருக்க வில்லை. ஆனாலும் விடாப்பிடியாகச் செய்து வருகிறான். ஒவ்வொரு படியிலும் அவன் குறைபாட்டைக் காண்கிறான். ஆனாலும் சலிப்பதில்லை. பல படிகளையும் தாண்டி முடிந்த நிலையிலும் ஒரு குறை. இந்தக் கருத்தை முள்ளு முனையிலிருந்து ஆரம்பித்துச் சொல்கிறான்.

முள்ளு முனையிலே மூணுகுளம் வெட்டினேன்
ரெண்டுகுளம் பாழு - ஒண்ணு தண்ணியே இல்லை.
தண்ணியில்லாக் குளத்துக்கு மண்ணுவெட்ட மூணுபேரு
ரெண்டுபேரு மொண்டி - ஒத்தன் கையே இல்லை.
கையில்லாத குசவன் செய்தது மூணுபானை
ரெண்டுபானை பச்சை - ஒண்ணு வேகவே இல்லை.
வேகாத பானைக்குப் போட்டரிசி மூணரிசி
ரெண்டரிசி நறுக்கு - ஒண்ணு வேகவே இல்லை.
வேகாத சோற்றுக்கு விருந்துண்ண மூணுபேரு
ரெண்டுபேரு பட்னி - ஒத்தன் உண்ணவே இல்லை.
உண்ணாத கொத்தன் கட்டினது மூணுகோயில்
ரெண்டு கோயில் பாழு - ஒண்ணு சாமியே இல்லை.

சாமியில்லாத கோயிலுக்கு ஆடவந்தார் மூணுபேரு
 ரெண்டுபேரு மொட்டை - ஒத்தி மயிரே இல்லே.

பாட்டு இதனோடு நிற்கிறது. ஆனல் முயற்சி இன்னும் முடியவில்லை. குறை நிரம்பும்போதுதான் முயற்சியும் முற்றுப் பெறும். இந்தப் பாட்டிற்கு முள்ளுமுனை தான் ஆரம்பம். பாடுபவனுடைய சக்திக்குத் தகுந்தபடி பாட்டு நீண்டுகொண்டே போகலாம்.

இது தமிழ் நாட்டில் பல இடங்களில் பல பல்விதமாக வழங்குகிறது. குளத்தையும் கோவிலையும் சுற்றிப் படருகிறது. இந்தப் பாட்டிலே சொல்லப்படும் முயற்சி மற்றொன்று வருமாறு:—

முள்ளு முனையிலே மூணுகுளம் வெட்டிவச்சேன்
 ரெண்டுகுளம் பாழு - ஒண்ணு தண்ணியே இல்லே.
தண்ணியில்லாக் குளத்துக்கு வந்த குசவர் மூணுபேரு
 ரெண்டுபேரு மொண்டி - ஒத்தன் கையே இல்லே.
கையில்லாத குசவன் வனைந்தசட்டி மூணுசட்டி
 ரெண்டு சட்டி பச்சை - ஒண்ணு வேகவே இல்லே.
வேகாத சட்டியிலே போட்ட அரிசி மூணரிசி
 ரெண்டரிசி பச்சை - ஒண்ணு வேகவே இல்லே.
வேகாத சோற்றுக்கு மோர் கொடுத்தது மூணெருமை
 ரெண்டெருமை மலடு - ஒண்ணு ஈனவே இல்லே.
ஈனாத எருமைக்கு விட்டகாடு மூணுகாடு
 ரெண்டு காடு சொட்டை - ஒண்ணில், புல்லே இல்லே.
புல்லில்லாக் காட்டுக்குக் கந்தாயம் மூணுபணம் [இல்லே.
 ரெண்டுபணம் கள்ளவெள்ளி - ஒண்ணு செல்லவே
செல்லாத பணத்துக்கு நோட்டக்காரர் மூணுபேரு
 ரெண்டுபேரு குருடு - ஒத்தனுக்குக் கண்ணே இல்லே.

கண்ணில்லாக் கணக்குப் பிள்ளைக்கு விட்ட ஊரு மூணு
 ரெண்டு ஊரு பாழு - ஒண்ணில் குடியே இல்லை. [ ஊரு
குடியில்லா ஊரிலே குமரிப் பெண்கள் மூணுபேரு
 ரெண்டுபேர் மொட்டை - ஒத்திக்கு மயிரே இல்லை.
மயிரில்லாப் பெண்ணுக்கு வந்தமாப்பிள்ளை மூணுபேர்
 ரெண்டு பேர் பொக்கை - ஒத்தனுக்குப் பல்லே இல்லை.

ஒவ்வொன்றிலும் மூன்று மூன்று பொருள்கள்! மூன்றும் உபயோகம் இல்லை. ஆனால், அதை அப்படிச் சொல்லவில்லை. இரண்டை ஒரு விதமாகவும் ஒன்றை ஒருவிதமாகவும் சொல்கிறது பாட்டு. குளம் பாழு என்பதும் குளத்தில் தண்ணியே இல்லையென்பதும் ஒன்று தான். ஆனாலும் 'முள்ளு முனையிலே மூணு குளம் வெட்டி வச்சேன்' என்று தன்னுடைய சிரமத்தை அவன் சொல்ல ஆரம்பிக்கும்போது 'அப்படியா! எப்படி முடிந்தது? என்று ஆச்சரியமும் ஆவலும் தூண்டக் கேட்கிறோம். இத்தகைய பாட்டுக்களைப் படித்துப் பார்ப்பதைவிடப் பாடிக் கேட்பதில்தான் சுவை இருக்கிறது.

'முள்ளு முனையிலே மூணு குளம் வெட்டி வச்சேன்' என்ற அடியை நிறுத்திப் பாடும்போது பாடுபவனுடைய வார்த்தைகள் எவ்வளவுக்கு எவ்வளவு நிதானமாக வருகின்றனவோ, அவ்வளவுக்கு அவ்வளவு கேட்பவனுக்குச் சுவை உண்டாகிறது.

ரெண்டு குளம் பாழு

என்று சொல்லும்போது, "அடடா!" என்று நாம் இரங்குகிறோம். "ஆனாலும் இன்னும் ஒரு குளம் இருக்கிறதே! அது எப்படி இருக்கிறது? அதாவது நன்றாக இருக்கட்டும்!" என்று நாம் விரும்புகிறோம்.

'ஒண்ணில் தண்ணியே இல்லை' என்று முடிக்கும்போது நம்முடைய இரக்கம் உச்ச நிலையை அடைகிறது. பிறகு வரும் கண்ணிகளிலே இரக்க உணர்ச்சி மரத்துப்போய் நகைச் சுவையாக மாறி விடுகிறது.

மயிரில்லாப் பெண்ணுக்கு வந்த மாப்பிள்ளை மூணு பேர்
ரெண்டு பேர் பொக்கை - ஒத்தனுக்குப் பல்லே இல்லை!

என்னும்போது நாம் சிரித்து, நமக்குப் பல் இருக்கிறதென்பதைக் காட்டிக்கொள்கிறோம்!

# 14

## அரிசிக்காரன்

இலக்கியங்களுக்கும் நாடோடிப் பாடல்களுக்கும் ஒரு பெரிய வேற்றுமை உண்டு. முக்கியமாகப் பாரத நாட்டு இலக்கியங்கள் பெரும்பாலும் லட்சிய வாழ்க்கையையே குறிக்கோளாக உடையன. இலக்கண நூல்களில், நூல்களால் உண்டாகும் பிரயோசனம் என்ன என்று தெரிவிக்கும் பகுதியில் 'அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயன்' என்ற கருத்தைக் காணலாம். தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்ற இந்த நான்கு பொருள்களையுமே நூல்கள் சொல்ல வேண்டும். அதர்மத்தின் அழிவையும், தர்மத்தின் வெற்றியையும் காவியங்கள் விளக்கவேண்டும். இல்லாவிட்டால் அந்த இலக்கியம் எழுவதனால் பயன் இல்லை என்பது நம் நாட்டுப் பழங்கொள்கை.

லட்சிய வாழ்க்கை, உண்மையான வாழ்க்கையினின்று நெடுந்தூரத்தில் இருக்கின்றது. கிருத யுகத்தைப்பற்றிப் புத்தகங்களிலேதான் பார்க்கிறோம்; கலியுகத்தைத்தான் உலகத்தில் காண்கிறோம். கிருத யுகத்தைப் பற்றிக் கவிதையும் காவியமும் இலக்கணமும் புலவர்கள் எழுதிக் குவித்திருக்கிறார்கள். ஆனாலும் உலகத்திலுள்ள ஒவ்வொரு மனிதனும் கலியுகத்தின் மூச்சை நுகர்கிறான்; கலியுகத்தின் உறுப்பாக இருக்கிறான்.

குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாய்க் குற்றமே இல்லாதவனாகக் காவிய நாயகனைப் படைக்க வேண்டும் என்பது அலங்கார நூலின் வரையறை. கேட்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. இருந்ததென்றே சொல்ல வேண்டும். ஏனென்றால் அந்த லட்சிய நாயகர்களைப்

பற்றிக் கேட்டுக் கேட்டுப் புளித்துப்போய், நம்முடைய கண்ணிலே பிரத்தியட்சமாகக் காண்பதை இவர்களுக்குச் சொல்லத் தெரியவில்லையே என்று குறை கூறவும் தொடங்குகிறோம். எத்தனை நாளைக்குத்தான் இந்த லட்சிய உருவாரங்களை வைத்துக்கொண்டு மாரடிப்பது? ஒரே மாதிரியான கதா நாயகர்களைத்தான் எல்லாக் காவியங்களிலும் சொல்லுகிறார்கள். அவனிடம் குற்றம் இருக்கக் கூடாதா? அவன் தேவலோக வாசியாக, மண்ணிலே கால் பாவாமல், மனசிலே குற்றம் இல்லாமல் ஆகாசத்திலே பறக்கிறான். அவனுக்கும் நமக்கும் லவலேசங்கூட ஒற்றுமை இல்லை. இந்தக் கதையை வைத்துக் கொண்டு நாம் எப்படி ரசிப்பது?

இப்படிச் சொல்பவர்கள் உண்மையில் இலக்கியத்தில் ஓர் அம்சம் மரத்துப்போய், கவனிப்பாரற்று விட்டதைச் சுட்டிக் காட்டுபவர்கள் ஆவார்கள். அலங்கார நூலை சாஸ்திரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். முதலில் தன்மை நவிற்சியைத்தான் அலங்கார இலக்கணப் புலவர் சொல்கிறார். உள்ளதை உள்ளபடியே வருணிக்கும் அழகைத்தான் முதல் அலங்காரமாக வைத்திருக்கிறார்கள். இயற்கையான அழகுக்குத்தானே முதல் இடம் கொடுக்க வேண்டும்? ஆனாலும் அந்த இயற்கையான அழகைச் செயற்கை யழகினாலே நாம் மறைத்து வைத்து விட்டோம். அது எங்கேயோ ஒரு மூலையில் உயிரைவிட மாட்டாமல் மின்மினிபோலப் பளிச்சிடுகிறது.

இப்படி வளர்ந்து வந்த காவிய முயற்சிகளுக்கு இடையே உலக இயற்கையையும், மனிதனுடைய குறை பாடுகளையும், சமூகத்தின் சூழல்களையும் உள்ளது உள்ள வாறே சொல்லி இன்புறும் வழக்கம் மனிதர்களிடத்தில் இருந்து கொண்டுதான் வந்திருக்கிறது. பெரிய சபை யிலே ஒரு மனிதரை வானளாவப் புகழ்கிறோம்; அவரு டைய குண நலங்களை உயர்வு நவிற்சியாகப் பிரமாதப் படுத்தி விரிக்கிறோம். வீட்டுக்கு வந்தால் நம்முடைய

நண்பரிடையே தனியே. "மகா பெரியவன்! சொந்தக் காரனுக்கு ஒரு நாள் சோறு போடமாட்டான்! யுத்த நிதிக்கு லக்ஷ ரூபாய் தந்துவிட்டானே!" என்று அவருடைய குறைபாடுகளை அலசிப் பார்க்கத் தொடங்குகிறோம். அப்படித்தான் இருக்கிறது காவியமும். மனிதனுடைய பெருமைகளையும், அவனுடைய நல்லெண்ணங்களையும் புலவர்கள் கதையாகவும் நீதி நூலாகவும் வகுத்துப் புனைகிறார்கள். அதே சமயத்தில் அவனுடைய குற்றங்களை நாடோடிப் பாட்டுக்கள் வெளிப்படுத்திச் சிரிக்கின்றன. கற்பின் சிறப்பைக் காவியம் பாடுகிறது. உலகத்திலிருக்கும் விபசார நிகழ்ச்சிகளை நாடோடிப் பாடல் சித்திரிக்கிறது. அறிவாலும் திருவாலும் இளமையாலும் ஒத்த காதலன் காதலியரைக் கதாநாயகர்களாக்கிப் புலவன் காவியம் வனைகிறான். அடுத்த வீட்டில் அறுபது வயசுக் கிழவன் மூன்றாந்தாரமாகப் பத்து வயசுப் பெண்ணைக் கட்டிக்கொண்ட கதையை நாடோடிப் பாட்டுச் சொல்லிக் கெக்கலி கொட்டுகிறது.

தினந்தோறும் நிகழும் நிகழ்ச்சிகளை இலக்கியத்தில் காணாது தவித்த பேர்களுக்கு நாடோடிப் பாடல்களில் சுவை அதிகமாகத்தான் இருக்கும். லட்சிய வாழ்வைச் சித்திரிக்கும் காவியத்திலே இனி ஆயிரம் ஆண்டுகளுக்கு வாராத 'ஆபாசங்'களை நாடோடிப் பாட்டிலே 'பச்சை பச்சை'யாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்தப் பாட்டிலே அதன் தனிப்பட்ட பாணியிலே அவை அழகாகத்தான் இருக்கின்றன. உள்ளதை உள்ளவாறு சொல்லும் முன்னேற்ற எழுத்தாளர்கள் இக்காலத்தில் மறு மலர்ச்சியை உண்டாக்குவதாகச் சொல்கிறார்கள். அந்த முயற்சி, முயற்சி என்ன, கைவந்த செய்கை, நாடோடி இலக்கியத்திலே இருக்கத்தான் இருக்கிறது.

கிழவனுக்கு வாழ்க்கைப்பட்ட குமரிகளின் கதைகள் ஆயிரக் கணக்கில் கர்ணபரம்பரையாக நாம் கேட்டிருக்

கிறோம். புலவர் உலகம் அவற்றிற்கு நித்தியத்துவத்தை அருள் செய்யவில்லை. கிழவனுக்குத் தங்கள் பச்சிளங் குழந்தையைக் கல்யாணம் பண்ணிக்கொடுக்கும் தாய் தந்தையர்களுக்கு முக்கியமான தேவை பணம் அல்லது சோறு. தங்கள் குழந்தைகளின் காதலின்பத்தை அவர் கள் கனவிலும் எண்ணுவதில்லை. தங்கள் வீட்டுப் புறக் கடையில் விளையும் கத்திரிப் பிஞ்சைப் பறித்து வீதியிலே அரிசிக்காக விற்றுவிடும் 'கத்திரிக்காய்ப் பேரந்' தான் இவர்கள் செய்யும் கல்யாணம். அரிசிக்கு விற்பது கத்திரிக்காயானாலும் கன்னிகையானாலும் அவர்களுக்கு வித்தியாசம் இல்லை. கத்திரிக்காய்க்கு ஒரு தடவைதான் அரிசி கிடைக்கும். கன்னிகைக்கோ ஒவ்வொரு நாளும் அரிசி, சோறு கிடைக்கும். கிழவனுக்குத் தங்கள் குழந் தையைக் கட்டிக் கொடுத்துவிட்டு அக் கிழவன் குடும்பத் திலே போய்ச் சேர்ந்து கொள்ளும் தாய்தகப்பன்மார்கள் எவ்வளவு பேர்களை இந்த உலகம் கண்டிருக்கிறது!

தங்களைக் காட்டிலும் சோறு துணிக்குப் பஞ்சம் இல்லாமல் வாழும் ஒருவனுக்கு அவனுடைய வீட்டில் இருக்கும் அரிசி மிகுதிக்காக இளம் பிஞ்சுகளை விற்கத் துணிகிறார்கள் வறிய பெற்றோர்கள். சின்னஞ் சிறு குழந்தைக்கு, தன்னை மணக்கும் கிழவனுக்கும் தனக்கும் எந்தவிதமான உறவு ஏற்படப் போகிறது என்பது கொஞ்சங்கூடத் தெரியாது. தன் பெற்றோர்களுக்கு அவன் உபகாரமாக இருப்பான், அதற்குத் தான் இடை யில் நின்ற ஒரு கருவி என்னும் உண்மையையும் அவள் அறிந்து கொள்வதில்லை. அவளைக் கட்டிக் கொடுக்க எண்ணும் தாயே அவளுக்கு உபதேசிக்கிறாள். கிழவனைக் கட்டிக்கொள்ள வேண்டும் என்பதற்கு அவள் வேறு ஒரு காரணமும் கூறுவதில்லை. அவன் தங்கள் பட்டினியைத் தீர்க்க வந்த அரிசிக்காரன் என்று சொல்லித் தன் மகளுக்கு உபதேசம் செய்யத் தொடங்குகிறாள். மகள் பெயர் ராமாயி.

அடி அடி ராமாயி!
அரிசிக்காரன் வாராண்டி.

தனக்கு மாப்பிள்ளையாக வரப்போகும் மனிதனைத் தாய் எப்படி காண்கிருள்? ஒரு பெரிய அரிசி மூட்டையைப் போல நினைக்கிருள். அரிசிப் பஞ்சமும், பங்கீடும் உள்ள காலத்தில் சேர்ந்தாற்போல் பத்து மூட்டை நெல்லூர் அரிசி ஒருத்தனுக்குக் கிடைத்தால் எவ்வளவு மகிழ்ச்சி அடைவான்! அத்தகைய மகிழ்ச்சி யோடுதான் ராமாயியின் தாய் பேசுகிருள். அரிசிக்காரன் அரிசி மூட்டையாகிய பரிசத்தோடு வருகிருன். கிடைக்கக்கூடிய பொருளா அது? அடேயப்பா! ஒரு நாளைக்கு அரைப் படி அரிசி சம்பாதிக்க எவ்வளவு அல்லற்படவேண்டியிருக்கிறது. ஆயுசு முழுவதும் குடும்பத்தார் அனைவரும் பசியின்றி வயிறு நிறையச் சாப்பிட அரிசி கிடைத்துவிட்டால், அப்புறம் வாழ்க்கையில் என்ன வேண்டும்? அந்த நிலையைப்பெறுவதற்கு எதைத்தான் தியாகம் செய்யக்கூடாது?

அரிசிக்காரன் வந்துவிட்டான். அவன் ராமாயியை உத்தேசித்து வருகிருன். ராமாயிக்கு அரிசிக்காரன் பெருமையும் தெரியாது; அகமுடையான் பெருமையும் தெரியாது. அவ்வளவு இளையவள்.

''அடி ராமாயி அரிசிக்காரன் வருகிருன். வயிறு நிரம்பச் சோறு கிடைக்கும், எல்லாம் உன்னுல் வரும் வாழ்வு. நீ அவனேடு வாழவேண்டும்'' என்று சொல்ல நினைக்கிருள் தாய். அவனேடு வாழ்வதென்ருல் குழந்தைக்கு விளங்க வேண்டுமே! ஆகையால் அதை விளக்குகிருள்.

சின்னக் குழந்தையல்லவா? அவளுக்கு விளையாட்டென்ருல் மிகவும் பிரியம். வாசலிலே மணலில் சின்னச் சின்ன வீடு கட்டி விளையாடுவதிலும் சிலுக்குச் சிலுக்

கென்ற ஓசையைக் கேட்பதிலும் அவளுக்கு உற்சாகம் அதிகம். அப்போதும் அந்த மாதிரியாக மற்றொரு விளையாட்டைத்தான் தாய் செய்யச் சொல்கிறாள்!

சின்ன வீடு கட்டிக்கோ!
சிலுக்குத் தாப்பாள் போட்டுக்கோ!

வாழ்க்கையைப் பெரிய காரியமாகச் சொல்லி விட்டால் குழந்தைக்கு எங்கே புரியப் போகிறது? மிகவும் தந்திரக்காரியாகிய தாய் அதைச் சுருக்கமாய் விளையாட்டாகச் சொல்லிவிட்டாள்.

சரி, வீடு கட்டிக்கொள்ளலாம்; தாழ்ப்பாளைப் போட்டுக்கொள்ளலாம், இதற்கும் வருகிற அரிசிக்காரக் கிழவனுக்கும் என்ன சம்பந்தம்? அவன் எதற்கு வருகிறான்?

இந்தக் கேள்விகளுக்கு விடை வருகிறது.

"ராமாயி, நீ சின்ன வீடு கட்டிக்கொண்டு, சின்னத் தாழ்ப்பாள் போட்டுக்கொள். முன் விளையாட்டில் நீ புழுதியைத்தான் பூசிக்கொள்வாய். இந்த விளையாட்டில் கெட்டி மஞ்சளைப் பூசிக்கொள்ள வேண்டும்".

இதற்கு என்ன தடை? குழந்தைக்குக் கெட்டி மஞ்சள் பூசிக்கொள்வதிலும் ஒரு மகிழ்ச்சிதான்.

சின்ன வீடு கட்டிக்கோ!
சிலுக்குத் தாப்பாள் போட்டுக்கோ!
கெட்டி மஞ்சளைப் பூசிக்கோ!

என்ற உபதேசம் அந்தக் குழந்தையின் மனத்தைக் கவரும் முறையில்தான் அமைந்திருக்கிறது. ஆனால் அதனோடு முடியவில்லை உபதேசம். உபதேசத்தின் சூட்சுமமான மந்திரம் இனித்தான் வர இருக்கிறது.

இவ்வளவு தூரம் சொன்ன சமாசாரங்களெல்லாம் விளையாட்டுக் குழந்தைக்கு விளையாட்டாகவே படலாம். தாய் விளையாட்டையா சொல்ல வருகிறாள்? அல்லவே அல்ல. வினையைச் சொல்ல நினைக்கிறாள். அதற்குத் தான் பீடிகை போடுகிறாள். குழந்தைக்குக் கொஞ்சங் கொஞ்சமாக உருவேற்றுகிறாள். கடைசியில் வருகிறது காரியப் பேச்சு.

"அம்மா, ராமாயி! இந்தமாதிரி சின்ன வீட்டைக் கட்டிக்கொண்டு கெட்டி மஞ்சளையும் பூசிக்கொண்டு..."

"யாரோடம்மா விளையாட வேணும்? எந்தக் குழந்தை விளையாட வரப்போகிறது?"

"இந்த விளையாட்டிலே அதுதான் வித்தியாசம், குழந்தாய்! உன்னோடு விளையாடச் சின்னக் குழந்தை வரவில்லை. உன்னோடு பேசுவதற்குப் பெரிய கிழவன் வருவான்."

இப்படியெல்லாம் தாய் ஓர் உரையாடலை மனத்துக்குள்ளே கற்பனை செய்துகொள்கிறாள்.

கெட்டி மஞ்சளைப் பூசிக்கோ!
கிழவனோடே பேசிக்கோ!

என்று சொல்லி உபதேசத்துக்கு முடிவு கட்டுகிறாள். சின்ன வீடு, சிலுக்குத் தாழ்ப்பாள், கெட்டி மஞ்சள் இவ்வளவு விளையாட்டுச் சாமான்களும் அந்தக் குழந் தைக்குப் பிரியமானவைகளே. அவற்றை அளித்து அந்தச் சுயகாரியப் புலியாகிய தாய் என்ன செய்கிறாள்? தனக்கு வேண்டிய கிழவனோடுகூட, அந்த அரிசிக்காரக் கிழவனோடுகூட, பச்சைக் குழந்தையைப் பேசச் சொல்கிறாள்! விளையாட்டுக்கூட அவளால் முடியாது.

அடி அடி ராமாயி!
அரிசிக் காரன் வாராண்டி!

சின்ன வீடு கட்டிக்கோ!
சிலுக்குத் தாப்பாள் போட்டுக்கோ!
கெட்டி மஞ்சளைப் பூசிக்கோ!
கிழவ ஞேடே பேசிக்கோ!

இந்தக் கண்ணராவி நாடகத்தை அழகாகச் சித்திரிக்கிறது பாட்டு. 'கெட்டி மஞ்சளைப் பூசிக்கோ, கிழவஞேடே பேசிக்கோ' என்ற பகுதி எதுகைமோனையோடு முத்தாய்ப்பு வைக்கிறது பாட்டிற்கு. இனி அடுத்த காட்சியைப் பார்ப்போம்.

# 15

## 'மாட்டேன்'

கிழவனுக்கு இளம்பெண் வாழ்க்கைப்பட்டு விட்டாள்; பணம் கொடுத்துப் பொம்மையை விலைக்கு வாங்குவதுபோல் அவன் வாங்கிக்கொண்டான். பாவம்! அந்தக் குழந்தைக்கு வாழ்க்கை இன்னதென்றே தெரியாது. மான் குட்டிபோலத் துள்ளி விளையாடும் வாழ்க்கைதான் அவளுக்குத் தெரியும். அவன் கட்டிய மெல்லிய தாலிக் கயிறு அவள் வாழ்க்கையின் சுதந்தரத்தையும் உல்லாசத்தையும் கட்டுப்படுத்தி விட்டதென்பதை அப்போது அவள் உணரவில்லை. ஆனால் பருவம் வந்தால் உணராமல் இருக்க முடியுமா?

இப்போது அவள் குழந்தையல்ல; புருஷன் வீட்டுக்கு வந்து குடித்தனம் செய்யத் தொடங்கியிருக்கிறாள். புருஷனுடைய லட்சணத்தையும் வாழ்க்கையின் அழகையும் பார்த்தால் அவளுக்கு அழுகை வருகிறது. கிழவன் அவளைச் சாதுவென்று நினைத்தான். அவளைச் சாதுவாகச் செய்வதற்கு அவனுக்குத் தைரியம் இல்லை. அவளோ வாழ்க்கை இன்னதென்று உணர்ந்து கொண்டாள். கிழவனுக்கு அடங்கி நடப்பதென்றால் அவளுக்குக் கசப்பாக இருக்கிறது. 'இந்தக் கிழவனோடு வாழ்வதைவிடக் கல்லைக் கட்டிக்கொண்டு கிணற்றிலே விழுந்துவிடலாம்' என்று அவள் எண்ணுகிறாள். இளமையையும் பெண்மையையும் அந்தக் கிழட்டுக் கோட்டானுக்குப் பலியிடவா அவள் பிறந்தாள்?

எதிர்த்துப் பேச ஆரம்பித்தாள். கிழவன் முதலில் மிரட்டினான்; அவள் பின்னும் அதிகமாக முரணினாள். அவளை அடக்க முடியாதென்று எண்ணி நயந்து போக

ஆரம்பித்தான். "பயத்திஞலும் முடியாது; நயத்திஞலும் முடியாது; எனக்கு இந்த வீட்டில் இருக்கவே பிரியம் இல்லை" என்று சொல்லிவிட்டு அவள் தாய்வீட்டில் போய்ச் சேர்ந்தாள்.

எதிர்பாராதபடி ஒரு நாள் தன் மகள் இப்படி வந்து நிற்கவே தாய்க்கு ஒன்றும் விளங்கவில்லை. "என்ன, திடீரென்று வந்தாய்? என்ன விசேஷம்?" என்று கேட்டாள்.

"நான் இனிமேல் இங்கேதான் இருக்கப் போகிறேன்."

"உன் புருஷன் எங்கே?"

"அங்கே இருக்கிருன்."

"நீ மாத்திரம் இங்கே என் வந்தாய்?"

"நீ இருப்பதஞல் வந்தேன்."

"நான் உன்னை அழைக்கவில்லையே!"

"அழைக்காவிட்டாலும் தாய் வீட்டை நாடி வருவதற்கு எனக்குச் சுதந்தரம் இல்லையா?"

"பேச்சை வளர்த்துகிருயே! ஏன் வந்தாய்? சொல்லித் தொலையேன்."

மகளுக்கு விஷயத்தை வெட்ட வெளிச்சமாகச் சொல்ல மனம் இல்லை. அரிசிக்காரன் என்று நம்பிக் கிழவனிடம் தாய் அனுப்பிஞள். சோறு கண்ட இடம் சொர்க்கம் என்பது அந்தத் தாய்க்குச் சரிதான். மகளுக்கு வாழ்க்கை வேண்டும்; இன்பம் வேண்டும். அவள் வேண்டும் சோறு அதுதானே? அந்தச் சோறு கிழவன் வீட்டில் இல்லை அங்கே உள்ள சோறு பசையற்றது. அவளுடைய பசிக்கு உதவாதது. வெறும் சோளச்சோறு. இப்படி அந்தப் பருவம் அடைந்த மகள் விஷயத்தைக் குறிப்பாகச் சொல்ல ஆரம்பித்தாள்.

"நான் சோளச் சோறு தின்னமாட்டேன்!"

தாய்க்கு மகள் கூறும் வார்த்தையின் உள்ளூறை பொருள் தெரியவில்லை; தெரிந்துகொள்ளும் சிரமத்தை அவள் வைத்துக்கொள்ளவில்லை. உண்மையிலே அந்த அரிசிக்காரக் கிழவன் வீட்டில் சோளச் சோறுதான் சமைக்கிறார்களென்று எண்ணிக்கொண்டாள். தன் மகள் சொல்லும் காரணம் பெரியதன்று என்பதே அவள் அபிப்பிராயம்.

"அப்படியானால் உன் புருஷனிடம் சொல்லி அரிசி வாங்கிச் சோறு ஆக்கித் தின்பதுதானே?" என்று கேட்டாள் தாய்.

மகள் அதைக் கேட்டு அழுவதா, சிரிப்பதா? வெறும் சோற்றுக்கு வந்த சண்டையென்று உண்மையாகவே தாய் நினைத்தாளென்பதை அவள் உணர்ந்தாள். அந்தக் கிழவன் தனக்குப் பிரியம் இல்லாத ஏவல்களை இடுகிறானென்று சொல்லலாமா என்று யோசித்தாள்.

கிழவன் சொன்னபடி கேட்பதானால் தனக்கு எவ்வளவோ கஷ்டங்களும் மனத் துயரமும் ஏற்படுமென்று சொல்லிவைக்கலாம் என்று எண்ணினாள்.

"சொன்னபடி கேட்க மாட்டேன்".

"இதென்னடீ, அதிசயமாய் இருக்கிறது. புருஷன் சொன்னபடி கேட்காமல் இருக்கலாமோ? புருஷன் சொல்லைக் கேட்காதவளுக்குப் பூமியிலே சோறு கிடைக்குமோ? அவன் சொன்னபடி கேட்காமல் வேறு யார் சொல்வதைக் கேட்கப் போகிறாய்? உன் புத்தி ஏன் இப்படிக் கெட்டுப் போயிற்று? நான் எவ்வளவோ கஷ்டப்பட்டு அவனை உனக்குக் கல்யாணம் பண்ணி வைத்தேன். நமக்கெல்லாம் கிடைக்கக் கூடியவனா அவன்? உனக்கு ஏன் இந்தக் கெட்ட புத்தி வந்தது? பேசாமல் வீட்டுக்குப் போ. அவன் காலில் விழு. நான் சொன்ன

தெல்லாம் தப்பென்று சொல்லிக் கன்னத்திலே போட்டுக் கொள்.... என்ன? நான் சொல்கிறது காதில் விழு கிறதா?''

''ஹூம்!'' அவள் வேறு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

''சொன்னபடி கேட்கமாட்டாளாம்! வாழாவெட்டி யாக இருக்கலாமென்று எண்ணமோ? பெட்டைச் சிறுக்கிக்கு இவ்வளவு ஆணவமா? இந்த வீட்டிலே கொட்டிக் கிடக்கிறதா? அரிசிச்சோறு இங்கே மட்டும் மூன்று வேளையும் கிடைக்குமாக்கும்!''

தாயின் முகத்தை மகள் பார்த்தாள். அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது. தாயோ ஆவேசம் வந்தவளைப் போலப் பேசிக்கொண்டிருந்தாள்.

''அடீ பேயே! தாய் என்று வரும் குழந்தையின் உள்ளுணர்ச்சியை அறிந்துகொள்ள உனக்கு அறிவு இல்லையா? நீ பெண் அல்லவா? பருவ உணர்ச்சிகளை நீ ஒரு காலத்தில் பெற்றிருக்கவில்லையா? அது உனக்கு மறந்துபோய் விட்டதா?'' — இப்படிச் சொல்லிக் கேட்பவர் யார்?

மகளுக்கு ஆத்திரம் மூண்டுவிட்டது; ''நீ கல்யாணம் பண்ணிக்கொடுத்த லெச்சணமோ, ஒண்ணே!'' என்று சொல்லிவிட்டு,

> ''நரைச்ச கிழவன் கிட்டே
> நானிருந்து வாழ மாட்டேன்''

என்று தன் சக்தியெல்லாம் திரட்டிக் கதறுகிறாள். அவன் அவளுக்கு நரைச்ச கிழவன். அரிசிக்காரனோ, அகமுடையானோ, புருஷனோ - யாரானாலும் அக்கறை இல்லை. அவளுக்கு வேண்டியவன் அல்ல; அவனுடைய பருவத்திற்கும் அவளுடைய பருவத்திற்கும் ஏணி வைத்தாலும் எட்டாது.

இப்படி வெளிப்படையாகச் சொல்கிற வரைக்கும் தாய்க்கு விஷயம் புரியவில்லே. இதற்கு மேல் என்ன செய்வாள்? கிழவனைக் குமரனுக்கும் வித்தை அவளுக்குத் தெரியாதே!

சோளச் சோறு தின்ன மாட்டேன்
சொன்னபடி கேட்க மாட்டேன்
நரைச்ச கிழவன் கிட்டே
நானிருந்து வாழ மாட்டேன்

என்ற வார்த்தைகளில் உண்மையான உணர்ச்சி வெளிப் படுகிறது. 'கிழவன்கிட்டே வாழவே முடியாது; சில காலம் பல்லேக் கடித்துக்கொண்டு வாழலாம்; இருந்து வாழ முடியாது. நல்ல பருவம் உள்ள நான் இருந்து வாழ்வதென்பது கனவிலும் நடக்காத காரியம்' என் றெல்லாம் வியாக்கியானம் செய்யும்படி அந்தக் குமரி சொல்லித் தன் சுதந்தரத்தை நிலே நாட்டுகிறுள்.

இந்தப் பிரத்தியட்ச வாழ்க்கையை உலகத்திலே காண்கிருேம்; நாடோடி இலக்கியம் அதைக் காட்டுகிறது. புலவர்களின் இலக்கியத்தில் தேடிப் பார்த்தால் கிடைக்குமோ என்னவோ!

# 16

## சிரிப்பு மூட்டும் பாடல்கள்

நவரசமென்று கணக்கெடுத்துச் சொல்கிறார்களே, அந்த ரசங்கள் ஒன்பதையும் காவியங்களிலே கண்டு புலவர்கள் மனமகிழ்ச்சி அடைகிறார்கள். உலகத்திலே நிகழும் நிகழ்ச்சிகளை நேரிலே பார்த்து அநுபவிக்கும்போது உணர்ச்சிதான் உண்டாகிறது; அதையே புலவன் தன்னுடைய கவியுலக நிகழ்ச்சியாக மாற்றும் போது ரசம் பிறக்கிறது. தன்னுடைய குழந்தையை இழந்து விட்ட தாய் புலம்புகையில் நமக்கு உண்மையான சோக உணர்ச்சி ஏற்படுகிறது. "கடவுளே! நம்முடைய பகைவனுக்கும் இத்தகைய துக்கம் வரக் கூடாது" என்று பிரார்த்திக்கிறோம். தாய் அழும்போது நம் கண்ணிலும் நீர் துளிக்கிறது.

அரிச்சந்திரன் கதையில் மயானகாண்டம் பார்க்கும் போது சந்திரமதியின் புலம்பல் மனத்தை உருக்குகிறது. நாமும் அழுகிறோம். அப்பொழுது பிறப்பது சோகரசம்; வெறும் சோகமல்ல; அதாவது அந்தச் சோகம் போலி யானது. இலக்கியச் சுவையால் உண்டானது. அந்த அழுகையின் அடித்தளத்திலே இன்பந்தான் இருக்கிறது. தன் குழந்தையை இழந்த தாயின் அழுகையை மீட்டும் கேட்க விரும்பமாட்டோம். அது ஆதிமுதல் அந்தம் வரையில் அழுகை; துக்கமயமான அழுகை. நாடகத்தில் வரும் சந்திரமதி புலம்பலையோ காசு கொடுத்துப் பல முறை கேட்கிறோம். புதிய நடிகன் வந்து நடிக்கிறானென்றால், 'ஏற்கனவே பார்த்ததுதானே?' என்று நினைப்பதில்லை. அதைப்போய்ப் பார்த்து இன்புறுகிறோம். நம் கண்ணிலே நீர் துளித்தாலும் கருத்திலே இன்பம் துளிக்கிறது. அது தான் ரசம்.

ஓர் உவமை சொல்லுகிறேன்: பாகற்காயைக் கடித்தால் நாக்கெல்லாம் கசந்து வழிகிறது; வாயிலெடுக்க வருகிறது. ஆனால் சர்க்கரையால் பாகற்காயைப் போலப் பண்ணி நிறம் பூசின மிட்டாய் வருகிறது. அதைப் பார்த்தால் அசல் பாகற்காயைப்போலவே இருக்கிறது. ஆனால் அதைக் கடித்தால் இனிக்கிறது. சர்க்கரையாலே மாம்பழம்போலப் பண்ணலாம்; எலுமிச்சம் பழமும் உருட்டலாம்; மிளகாய் மாதிரியே தோற்றும்படி அமைக்கலாம். எல்லாவற்றிற்கும் உருவந்தான் பேதமே ஒழியச் சுவை ஒன்றுதான்; இனிப்புத்தான்.

ரசமென்று சொல்வது இந்த இனிப்பைப் போன்றது. பலவகையான ரூபபேதங்கள் அதில் உண்டு. சோகம், ஹாஸ்யம், ரௌத்திரமென்று வெவ்வேறு வகையாகச் சொன்னாலும் எல்லாவற்றாலும் விளைவது இன்பம் ஒன்றே.

இந்த ரசத்தைப்பற்றி அலங்கார சாஸ்திரப் புலவர்கள் புத்தகங்கள் எழுதிக் குவித்திருக்கிறார்கள். இலக்கியக் கர்த்தர்கள் ரசங்கள் பில்கும்படியான அருமையான கவிதைகளைப் பாடி இருக்கிறார்கள்.

இலக்கியப் புலவர்களுக்கு மட்டும் ரச உணர்ச்சி ஏகபோக உரிமையன்று. ரசம் அல்லது சுவையை உணரும் ஆற்றலுள்ள ஒவ்வொருவனுக்கும் ரசம் சொந்தமே. மனிதனுடைய உணர்ச்சியிலே பிறந்த ரசம் வார்த்தையிலும், செயலிலும் உருவத்தை அடைகிறது.

வெறும் பேச்சிலே, தினசரி மனிதர்கள் பேசும் சம்பாஷணையிலே ரசம் இல்லையா? "ரசமாகப் பேசுகிறான்" என்று சில பேரைப்பற்றி நாம் மதிப்புரை சொல்லுகிறோமே! அந்தப் பேச்செல்லாம் ரசத்துக்கு இருப்பிடந்தான்.

ஒரு கோழையைப் பார்த்துப் பரிகசிக்கிறோம்; "இவனா! இவன் பெரிய வெண்ணெய் வெட்டிச் சிப்பாயல்லவா" என்கிறோம். நாமும் சிரிக்கிறோம்; கேட்ட

வர்களையும் சிரிக்க வைக்கிறோம். இதிலே ஹாஸ்ய ரசம் ஓரளவு இருக்கிறது. மற்றவர்களுடைய அறியாமையையும், பலவீனத்தையும், குறைபாடுகளையும் நயமாக எடுத்துச் சொல்லும்போது நகைச் சுவை பிறக்கிறது; நமக்குச் சிரிப்பு உண்டாகிறது.

பாமர மக்களிடத்தில் உலவிவரும் நாடோடிப் பாடல்களிலே இந்த நகைச் சுவை எந்த எந்த மாதிரியில் வெளிப்படுகிறது என்பதைப் பார்க்கலாமா?

* * * *

ஒரு மங்கை நல்லாள். அவள் தன்னை எல்லா ஆபரணங்களாலும் அலங்கரித்துக்கொண் டிருக்கிறாள். காலிலே பாடகம், இடையிலே பொன் ரேகை ஊடாடும் சேலை, காதிலே வைரத்தோடு, மூக்கிலே உயர்ந்த மூக்குப் பொட்டு— இத்தியாதி ஆடையாபரணங்கள் அவள் மேனியிலே மினுக்குகின்றன.

ஆனால் — ? அதுதான் பெருங்குறை. என்ன? பாட்டிலே நகைச் சுவை உண்டாகும்படி அந்தக் குறையைச் சொல்லுகிறான் நாடோடிப் பாவலன்.

காலிலே பாடகம் கிலுக்குதடி — தங்கமே
இடையிலே சேலை இழுக்குதடி — தங்கமே
காதிலே தோடு கனக்குதடி — தங்கமே
மூக்கிலே பொட்டு மினுக்குதடி — தங்கமே
எல்லாம் சரிதானடி — தங்கமே
இடதுகண்தான் பொட்டையடி!

* * * *

மனைவி எங்கேயோ போய்க் கெஞ்சிக் கூத்தாடிக் காலுக்குத் தண்டையும் காதுக்குப் பூச்சிக்கூடும் வாங்கிப் போட்டுக்கொண்டாள். அந்த அலங்காரத்தோடு தன்

புருஷனுக்கு முன்னாலே நின்றால் அவன் மயங்கிப்போய் அந்த இரவல் நகைகளுக்குப் பதிலாகப் புதிய நகைகளையே வாங்கித் தருவானென்று எண்ணி ஒய்யாரமாக அவனுக்கு எதிரே தோன்றினாள்.

கொடாக்கண்டர்களின் பரம்பரையிலே வந்த அவனுக்குப் பெண்டாட்டியின் மோக வலை ஒரு பொருட்டாகத் தோற்றவில்லை. என்னவோ யோசித்துக்கொண்டிருக்கிறான். அவன் திரும்பிப்பார்த்தால் அவள் தன் காதை அலைத்துப் பூச்சிக்கூட்டின் மகிமையைக் காட்டலாம்; கண்ணைச் சிமிட்டிக் கருத்தை உருக்கலாம்; காலை எடுத்து வைத்துத் தண்டையின் நாதத்தை எழுப்பலாம்! அவன்தான் மரம்மாதிரி இருக்கிறானே!

வாய் திறந்து கேட்டாலொழிய அவன் கவனத்தை இழுக்க முடியாதென்று தெரிந்துகொண்டாள் மனைவி; கேட்டும் விட்டாள்:

> இரவல் தண்டையாம் பூச்சிக் கூடாம்
> ஏத்திருக்குதா புருஷா?

அவன் அதற்குப் பதில் சொல்வதுதான் பலே ஜோர். "அப்படியா! மிகவும் நன்றாகப் பொருந்தியிருக்கிறது! கண்ணாலே பார்த்துச் சொல்வதல்ல; சத்திரத்திலே சகுனம் கேட்டேன்: அதனால் தெரிந்தது" என்கிறான்.

> சத்திரத்திலே சகுனம் கேட்டேன்
> சரியா இருக்குது பெண்டாட்டி!

என்ன கிண்டல் பாருங்கள்!

* * * *

பின் வரும் பாட்டில் வியாக்கியானம் இல்லாமலே சுவை தெரியும்.

சும்மா இருக்கிற சிட்டுக் குருவிக்குச்
சோத்தை வைப்பானேன்—அது
கொண்டையைக் கொண்டையை
ஆட்டிக்கிட்டுக் கொத்த வருவானேன்?

* * * *

*பிள்ளைகள் தங்கள் வீரத்தைச் சொல்லுகிறார்கள். சண்டை நிகழ்ந்தால் இந்த வீரர்கள் எங்கே இருப்பார்கள் தெரியுமா?*

ஆர்க்காட்டிலே சண்டையானால்-சந்த மாமா
அடுப்பங்கரையில் ஒளித்திருப்போம்-சந்த மாமா
வேலூரிலே சண்டையானால்-சந்த மாமா
வேலிப் புறத்தில் ஒளித்திருப்போம்-சந்த மாமா

* * * *

*ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத சமாசாரங்களைச் சில பாடல்கள் சொல்லும். தாளமும் எதுகைக் கட்டுந்தான் அவைகளிற் பிரதானம். ஏதாவது ஓரடியில் நகைப்பதற்கு விஷயம் இருக்கும். குழந்தைகள் வேடிக்கையாகப் பாடும் பாடல் வகைகளைச் சேர்ந்தவை இவை.*

வண்டி என்ன வண்டி?
வடக்கே போற வண்டி
வண்டி மாடு சண்டி
வண்டிக்காரன் நொண்டி!

மிளகு என்ன மிளகு?
மலையாளத்து மிளகு
பாட்டி செத்தால் எளவு
பத்துப் பணம் செலவு!

தோசை என்ன தோசை?
அரைத் துட்டுத் தோசை
தின்னத் தின்ன ஆசை
துடைப்பைக் கட்டைப் பூசை!
கோட்டை யாவது கோட்டை
தஞ்சா வூருக் கோட்டை
தண்ணீர்க் குடம் ஓட்டை
தானே வாடி வீட்டே!

*　　*　　*　　*

*பெரிய விஷயங்களைச் சொல்லித் தம் வீரத்தையும் பாராட்டும் தொனியோடு சிறு பிள்ளைகள் சொல்லும் சிலவகை ஹாஸ்யப் பாடல்கள் உண்டு.*

ஆட்டுக் குட்டி தேடப் போனேன்-சந்த மாமா
அடிக்கப் போனேன் கடிக்க வந்தது-சந்த மாமா!
நேத்துச் செத்த சாரைப் பாம்பை-சந்த மாமா
நேராகக்கண் டடிச்சுப் போட்டேன்-சந்த மாமா!
ரெண்டாட் டுக்கு எட்டுக் காலு-சந்த மாமா
என், பெண்டாட்டியைக் கேட்டுப்பாரு சந்த மாமா!
எட்டு நாளைக்குமுன் செத்த பாம்பை-சந்த மாமா, நான்
எட்ட நின்று குத்திப் போடுவேன்-சந்த மாமா!
வத்திக்கிடக்கிற ஏரியைக் கண்டால்-சந்த மாமா, நான்
வளைஞ்சு வளைஞ்சு நீச்சமடிப்பேன்-சந்த மாமா!
உயிராய்இருக்கிற பாம்பைக் கண்டால்-சந்த மாமா நான்
ஒருகாதம்போய்க் காதம் வருவேன்-சந்த மாமா!

செத்துக்கிடக்கிற பாம்பைக் கண்டால்-சந்த மாமா, நான்
சில்லாக் கோலால் குத்திப் போடுவேன்-சந்த மாமா!

மூணு கோழிக்கு ஆறு காலு-சந்த மாமா
பெட்டைக் கோழி முட்டை யிடும்-சந்த மாமா

* * * *

*அத்தானை முன்னிட்டும், மாமனை முன்னிட்டும் கிழவனை ஏசியும், கிழவியைப் பரிகசித்தும், மாப்பிள்ளையைக் கேலி செய்தும் பாடும் பல பாடல்களிலே நகைச்சுவை பல முறைகளிலே அமைந்திருக்கும், அவற்றைப் பிறகு பார்க்கலாம்.*

# 17

# இங்கிலீஷ் கலந்த பாடல்கள்

நாடோடி இலக்கியத்திற்கு ஆதியில்லை; அந்தம் இல்லை. மனித சாதி உண்டானபோது அதுவும் உண்டாயிற்று; மனித சாதி முடிவடையும்போது நாடோடி இலக்கியமும் முடிவடையும். இடைக்காலத்தில் மனித சமுதாயத்தின் நடையுடை பாவனைகளை ஏற்றுக்கொண்டு வளர்ந்துவரும். அந்த அந்த காலத்துக்கு ஏற்ற செய்திகளையும் முறைகளையும் ஏற்றுக்கொள்ளும். நாட்டில் உண்டாகும் புதுமைகள் முதல் முதலில் நாடோடிப் பாடல்களிலே ஏறும்.

தமிழ்நாட்டில் ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்ட பிறகு ஆங்கில மோகத்தில் வீழ்ந்து பெரும்பற்றுகப் பற்றிக் கொண்ட கனவான்கள் பலர். பாரத நாட்டில் ஆங்கில மோகமும், அந்த மொழியில் திறமையும் படைத்தவர்களிர் பெரும்பாலோர் தமிழ்நாட்டாரே என்று சொல்லி விடலாம். படித்த மனிதர்களிடமிருந்து அடுப்பங்கரை வரைக்கும் இங்கிலீஷ் வார்த்தைகள் எட்டிவிட்டன. அவசியத்தினுல் பல இங்கிலீஷ் வார்த்தைகள் தமிழே ஆகிவிட்டன. 'குழந்தை சீக்காய்ப் படுத்திருக்கிறுன்' என்று சர்வ சாதாரணமாகப் பட்டிக்காட்டான் கூடச் சொல்கிறுன். 'சீக்' என்ற பதம் ஆங்கிலத்திலிருந்து வந்ததென்று அவனுக்குத் தெரியாது. கோர்ட்டு, ஸ்கூல், பேப்பர், ஸார், ரைட், கிளாஸ், பாட்டில் முதலிய நூற்றுக்கணக்கான வார்த்தைகள் தமிழ் வழங்கும் இடங்களில் தமிழோடு கலந்தே வழங்குகின்றன.

இப்படிக் கலந்து வழங்கும் முறை பேச்சு வழக்கிலிருந்து நாடோடிப் பாடல்களில் ஏறிவிட்டது. இலக்கி

யங்களிலும் ஆங்கில மொழிகள் இடம்பெருமல் போக வில்லை. நாடோடிப் பாடல்களை மாத்திரம் இப்போது பார்க்கலாம்.

பெரியமுத்தம்மா, சின்னமுத்தம்மா என்ற இரண்டு பேரைப்பற்றி ஒரு பாட்டு. பெரியமுத்தம்மா கோபம் இல்லாமல் எதற்கும் சரியென்று சொல்லிவிடுகிறவள். சின்னமுத்தம்மாவோ கோபக்காரி. இதைத்தான் பின் வரும் கண்ணி சொல்கிறது.

ஆல்ரெடி திருநெல்வேலி பெரிய முத்தம்மா!
அதிலே கொஞ்சங் கோபக்காரி சின்ன முத்தம்மா!

இதில் ஆரம்பத்திலேயே ஆங்கில வார்த்தையாகிய ஆல்ரெடி* (Already) புகுந்துகொண் டிருக்கிறது.

*   *   *   *

ஒரு வெள்ளைக்காரனிடம் இந்து தேசத்து ஹரிஜன் பட்லராக இருந்தான். அவனுக்கு இன்னும் நன்ருக இங்கிலீஷ் பாஷை வரவில்லை. வந்த புதிதில் சில வார்த்தைகளைக் கற்றுக்கொண்டான். ஒரு நாள் ஒரு பூனை வந்து துரைக்கு வைத்திருந்த பாலைக் குடித்துப் போய்விட்டது. பட்லருக்குப் பூனைக்கு இங்கிலீஷில் பேர் தெரியவில்லை. அவன் துரைக்கு அபிநய சாமர்த்தியத் துடன் விஷயத்தை விளக்குகிருன்.

நாலு கால் *ஸார்! ஒரு வால் ஸார்!
மியாவ் மியாவ் ஸார்! *மில்க் ட்ரிங்க் ஸார்!
ஓடிப்போச்சு ஸார்!
— (Sir, Milk, Drink)

பட்லர் இங்கிலீஷ் என்ற வேடிக்கைப் பாஷையைப் பற்றி யாவரும் அறிவார்கள்.

*   *   *   *

*தாலாட்டுப் பாட்டில் இங்கிலீஷ் இணைந்து வரும் உதாரணம் ஒன்று வருமாறு:*

அம்மாவர நேரஞ்செல்லும் தூங்கு *பேபி தூங்கு
காக்கா வந்து கண்ணைக் குத்தும் தூங்கு பேபி தூங்கு
கழுகு வந்து குடலை அறுக்கும் தூங்கு பேபி தூங்கு
அப்பாவர நேரஞ் செல்லும் தூங்கு பேபி தூங்கு.

— (*Baby)

*ஆயாவின் பராமரிப்பிலே வளர்ந்த குழந்தைகள் தமிழையும் இங்கிலீஷையும் கலந்து பாடும் பாட்டுகள் பல.*

கடலோரம் கப்பல் பாரு
கப்பல் மேலே *போட்டைப் பாரு
போட்டு மேலே *ரோட்டைப் பாரு
ரோட்டு மேலே ஆயா பாரு
ஆயா கையிலே தட்டைப் பாரு
தட்டு மேலே லட்டைப் பாரு
லட்டு மேலே ஈயைப் பாரு
ஈ ஓட்டற கையைப் பாரு.

— (*Boat, Road)

* * * *

*ஆங்கில எழுத்துக்களைக் கற்றுக் கொள்ள ஆரம்பிக்கையிலே பழங்காலத்தில் வேடிக்கையாக இருந்திருக்கும். அ, ஆ, இ, ஈ என்று இல்லாமல் வேறு விதமாக இருப்பதைக் கண்டு குழந்தைகள் அந்த முறையை விநோதமாக ஏற்றுக்கொண்டிருப்பார்கள். அந்தக் காலத்தில் முளைத்த துணுக்கு ஒன்று.*

ஏ, பி, ஸீ, டி, துலுக்கன் தாடி
ஓ, பி, ஸீ, டி, ஒங்கப்பன் தாடி

இங்கிலீஷ் வார்த்தைகளை விரவுவித்து வெறும் ஓசை மாத்திரம் அமையும்படி உள்ள பாடல்கள் சில உண்டு.

ஒண்ணரி டூவரி டிக்கரி டன்
ஆபன் காபன் இங்லீஷ் மென்
ஆ இஸ் குளோப்

(One-nery Two-ery Dickery Ton
Often Coffen English-men
Ah Is Globe)

*    *    *    *

ஒரு விளையாட்டு. கிராமங்களில் குழந்தைகள் தங்கள் இரண்டு கைவிரல்களையும் கோத்துக்கொண்டு வலதுகைப் பாம்பு விரலை மாத்திரம் மடக்காமல் கையை மூடிக்கொள்வார்கள். ஒரு குழந்தையை, ''என் கையைத் திற'' என்று கையை மூடிக்கொண்ட ஒரு குழந்தை கேட்கும். கையைத் திறந்தவுடன், உள்ளே இருக்கும் பாம்புவிரலை அசைத்துக்கொண்டே 'உங்காம் படையான் வந்துட்டான்; உங்காம்படையான் வந்துட்டான்!' என்று பரிகாசம் பண்ணுவது வழக்கம்.

இதே அபிநயம் வேறுவித அர்த்தத்தோடு இங்கிலீஷ் வார்த்தைகளே அடங்கிய நாடோடிப் பாடலாக வழங்குகிறது. பாட்டு முழுவதும் இங்கிலீஷாக இருந்தாலும் பாட்டின் போக்கு, தமிழ்க் குழந்தைகளுக்கு வேடிக்கையாக அமைந்திருக்கிறது.

ஒரு குழந்தை அழுதுகொண்டிருக்கிறது. அதன் தகப்பனார், ''ஏன் அப்பா அழுகிறாய்?'' என்று கேட்கிறார்.

''அம்மா அடித்து விட்டாள்'' என்று குழந்தை சிணுங்குகிறது.

"எப்படி அப்பா?" என்று அப்பா கேட்கிறார்.

"இப்படியும் அப்படியும்" என்று குழந்தை தன் மூடிய கையைத் திறந்து பாம்பு விரலை அசைத்து அசைத்துக் காட்டுகிறது.

இந்த விளையாட்டில் ஒரு குழந்தை தகப்பனாராகவும் மற்றொரு குழந்தை அடிபட்ட குழந்தையாகவும் இருக்கும். பாட்டு வருமாறு :—

பப்பா பப்பா! - வாட் மை டியர்?
மம்மா மம்மா - பீட் மை டியர்
ஹௌ மை டியர்
திஸ் வே அண்ட் தட் வே
திஸ் வே அண்ட் தட் வே.

Papa Papa! - What my dear?
Mamma Mamma - Beat my dear
How my dear?
This way and that way
This way and that way.

இத்தகைய பாடல்கள் நம் நாட்டில் எந்த மொழிகள் வந்து புகுந்து வழங்கின என்று அறிவிக்கும் அடையாளங்களாக இருக்கின்றன.

இப்படியே தெலுங்கும் தமிழும் கலந்த பாடல்களும் வேறு மொழியின் கலப்புள்ள பாடல்களும் உண்டு. அவற்றில் மறைந்து போனவை போக மிஞ்சியிருப்பவை அதிகம் இல்லை.

## 18

# முத்து வீராயி காதல்

மோகனசுந்தரி, வசந்தவல்லி, பத்மாவதி, காந்தருவதத்தை என்ற பெயர்களைக் கேட்கும் போதே நமக்கு நாவலும், காவியமும் நினைவுக்கு வருகின்றன. காதல் நிகழ்ச்சிகளும், சிங்கார ரசமும் நிரம்பிய கதையின் நாயகிகளாகத்தக்க கௌரவம் அந்தப் பெயருடைய நாரீமணிகளுக்குத்தான் இருக்கிறதென்று நிச்சயம் செய்துவிட்டோம். கதை எழுதப் புகுந்தால் பாக்கியலக்ஷ்மியோ, பங்கஜலக்ஷ்மியோ காதல் புரிய வருகிறாள்; வெறும் லக்ஷ்மியையாவது அழைத்து வந்து நிறுத்துகிறோம். ஆனால், ராமாயி, கறுப்பாயி, வீராயி என்ற பெயர்களைச் சொல்லும்போதோ காதல் கீதல் ஒன்றும் ஞாபகத்துக்கு வருகிறதில்லை. சுண்ணாம்பு குத்துவதும், வீடு மெழுகுகிறதும், பாத்திரம் விளக்குகிறதுமே இந்த 'ஆயி' களின் தொழில்கள் என்று வைத்து விட்டோம்.

நாடோடிப் பாவலன் அப்படி நினைக்கவில்லை. வீராயியின் வீரத்தைத்தான் அவன் பாடுகிறான். முத்து வீராயியின் காதலை அவன் வருணிக்கிறான். ராமாயியின் துக்கத்தைச் சொல்லுகிறான். செல்லாயி, மருதாயி, கறுப்பாயி முதலிய பெண்களைக் கதாபாத்திரங்களாக வைத்துப் பாடுகிறான்.

முத்துவீராயி என்றால் காதல் புரியத் தெரியாதா? அவளுக்கு அழகில்லையா? பெண்மை இல்லையா? இன்பம் இல்லையா? அவளை நாயகியாக வைத்துப் பாடுகிற பாட்டிலே சுவை இல்லையா?—நிரம்ப இருக்கிறது.

* * * *

தென்னமரத் தோப்பாகிய நிலைக்களத்திலே முத்து வீராயியின் காதல் நாடகம் நிகழ்கிறது. தென்னமரச் சூழலிலே மரங்களெல்லாம் பாளை விரித்துப் பருவ அணங்குகளைப்போல நிற்கின்றன. பாளை மணம் கமழுகின்ற அந்த இடத்திலே முத்து வீராயியின் காதலன் அவளைக் காண்கிறான்; கண்டு காதல் கொள்கிறான். தென்னமரத் தோப்பு முழுவதும் நறுமணம் கமழ்கிறது. தென்றல் வீசுகிறது. விரிந்து மணக்கும் பாளைக்குள்ளே இரண்டு தேரைகள் இருப்பதைக் காதலன் பார்க்கிறான். 'பாளைக்குள்ளே நடக்கிறது, காதல் விளையாட்டு' என்று எண்ணி மயங்குகிறான்; முத்து வீராயியைப் பார்த்துச் சொல்கிறான்:

தென்ன மரத்துப் பாளைக்குள் ளேரெண்டு
தேரை இருந்து முழிக்குது பார்
தென்ன லடிக்குது என்னை மயக்குது
தேன்மொழி யேமுத்து வீராயி !

அவன் மயங்கிப்போய் முத்து வீராயியின் தேன் மொழியை எதிர்பார்க்கிறான்.

அயலிலே பாக்கு மரத்தின் 'பாளைக்குள்ளே ரெண்டு பட்சி யிருந்து முழிக்குது.' அதையும் தன் காதலிக்குக் காட்டுகிறான்.

பாக்கு மரத்துப் பாளைக்குள் ளேரெண்டு
பட்சி யிருந்து முழிக்குது பார்
பட்சி பறக்குது பாக்குத் துவக்குவது
பைங்கிளி யேமுத்து வீராயி !

அவன் அவளுக்காகக் காத்திருந்தாலும். அவளைச் சந்திக்க வேண்டுமென்று வீதியில் அவள் வீட்டுக்கு எதிரில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக்கொண்

-டிருந்தான். அவள் கண்ணிலே படுவாளென்று எண்ணினான். ஆனால், அவள் என்ன காரணத்தாலோ தலையைக் காட்டவில்லை. எத்தனை விதமாக அவன் ஏங்கி ஏங்கித் தவித்தான்! எவ்வளவு நொந்து போனான்!

வாடாத பூவே மருக்கொழுந் தேயுன்னை
வாசலி லேவரக் காணேனடி !
தேடாத நாளிலே தேடித்தேடி நொந்தேன்
தேன்மொழி யேமுத்து வீராயி !

"வாடாத பூவே, மருக்கொழுந்தே !" என்ற வார்த்தைகளில் அவன் எவ்வளவு ஆசையைக் கொட்டி விடுகிறான்!

இப்படி அவளுக்காக அவன் ஏங்கி வாடிப்போன காலங்களில் அவன் தன் சுகத்தைக் கவனித்தானா? எண்ணெய் தேய்த்து முழுகினானா? சோறே சரியாகச் சாப்பிடுவதில்லையே! அவன் தலைமயிர் சடைவிழுந்து போயிற்று. முத்து வீராயியைப் பெறுவதற்கு அவன் தவக்கோலம் பூண்டுவிட்டானோ?

ஒரு வருசமாய் ஒண்ணரை மாசமாய்
எண்ணெயுந் தேய்த்து முழுகாமல்
சடை வளர்த்ததும் சன்னாசி யானதும்
சம்மத மோமுத்து வீராயி !

இரண்டு உடலும் ஓருயிருமாகக் காதலர்கள் பழகுவார்கள். ஒருவருடைய வாழ்க்கைக்கு மற்றொருவர் இன்றியமையாதவர். ஒருவரால் மற்றொருவருடைய அழகு பயன் பெறுகிறது; இன்பம் உண்டாகிறது. இந்தத் தத்துவங்களையெல்லாம் பிரமாதமான வர்ணனைகளாலே விளக்குவதற்கு அவன் படிக்கவில்லை. தன் குடுமியிலே சுற்றிக்கொள்கிற முல்லைப்பூவை ரசிக்கத் தெரியும்; அவளுடைய முகத்திலே அழகு பெறும் மூக்குத்

தியின் சிறப்பை உணர்வான். முகத்துக்குத் திலகம் எத்தனை அழகு தருமென்பதை அவன் தன் கண்களால் அறிந்துகொண்டிருக்கிறான். இவற்றை வைத்துக் கொண்டு அந்தக் காதலன் தங்கள் இருவரின் ஒற்றுமையைப் பாடுகிறான்.

முல்லை அரும்படி நீஎனக்குச் சின்ன
மூக்குத்தி நத்தடி நானுனக்கு!
முல்லை அரும்புக்கும் மூக்குத்தி நத்துக்கும்
மோசமுண் டோமுத்து வீராயி?

சாந்துப் பொட்டடி நீஎனக்கு நல்ல
சவ்வாதுப் பொட்டடி நானுனக்கு!
சாந்துப் பொட்டுக்கும் சவ்வாதுப் பொட்டுக்கும்
சம்மத மோமுத்து வீராயி?

அவளோடு கொஞ்சிக் காதல் புரியும் அந்த ஆண் மகன் தன் கடமையை நன்கு தெரிந்தவன். "உன்னை எந்தக் காலத்திலும் அன்போடு ஆதரிப்பேன்" என்று சொல்லுகிறான். கல்யாண காலத்தில் அக்கினி பகவானுக்கு முன்னாலே வேதமந்திர கோஷத்துக்கு இடையே இதே வார்த்தைகளைத்தானே நாகரிகம் படைத்துச் சமூகத்தின் மேற்படியில் நிற்பவர்கள் வேறு பாஷையில் சொல்கிறார்கள்?

நன்மொழி சர்க்கரைக் கஞ்சிவார்த் துச்சில
நாள்போன பின்புவிட் டோட்டாமலே
அன்புடன் அல்லும் பகலுமுன் னைவைத்து
ஆதரிப் பேன்முத்து வீராயி!

காதலின் முதல் மோகம் மாறிய பிறகு அவன் அவளுக்கு உபதேசங்களைக்கூடச் செய்கிறான். உயர்ந்த கருத்துக்களை உடைய உபதேசமாக இருக்கிறது.

பெண்டுகள் பூத்தேடி வைக்க வேணும் வைத்தால்
பிறர் அறியாமல் இருக்க வேணும்
கொண்டைமேல் பூத்தோண வைத்தால் வேசியென்று
கூறுவா ரேமுத்து வீராயி!

தன்னடி பார்த்து நடப்பதே எவர்க்கும்
சற்குண மாமென்று சாற்றுவார்கள்
அன்ன நடையோடு முன்னும்பின் னும்பார்ப்பது
அழகல்ல வேமுத்து வீராயி!

# 19

## பரதேசியின் உபதேசம்

நாடோடிப் பாடல்களிலே ஞான மார்க்கத்தை உபதேசிக்கும் பாடல்கள் பல உண்டு. பிச்சை வாங்கி உண்ணும் பரதேசிகள், முன் காலத்தில் அந்தப் பாடல்களைப் பாடி வருவார்கள். பாட்டைக் கேட்கும்போது மனிதனுக்கு உடம்புக்குள்ளே உயிர் ஒன்று இருக்கிறது என்ற ஞாபகம் வரும்; இந்த மண்ணுலகத்துக்குப் புறம்பேயும் வாழ்வு உண்டென்பது தெரியவரும்; தினந்தோறும் நாம் செய்யும் வேலைகள் நமக்காகச் செய்வன அல்லவென்ற இரக்கம் உண்டாகும்.

நந்த வனத்திலோ ராண்டி — அவன்
நாலாறு மாசமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டுவந் தானொரு தோண்டி — அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி

என்று பரதேசி பாடும்போது, அதனுள்ளே பொதிந்த பொருளை நாம் உணர்ந்து, சிந்தனையில் ஆழ்கிறோம்.

'உலகமாகிய நந்தவனத்திலே நல்ல பூச் செடிகளைப் பயிர்பண்ணி, ஆண்டவனுக்கு அர்ச்சனை பண்ணவல்லவா வந்திருக்கிறோம்? நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி இந்தத் தோண்டி கிடைத்திருக்கிறது. இந்தத் தோண்டியைச் சரியானபடி உபயோகித்துச் செடிகளுக்கு நீர் வார்த்து, நந்தவனம் செழிக்கப் பண்ணவேண்டுமே. அப்படியில்லாமல், இந்தக் கருவியாகிய தோண்டியினிடம் மயங்கிப்போய், நம் லட்சியத்தையே மறந்து தலைகால் தெரியாமல் குதிக்கிறோமே! நமக்கு என்ன லாபம்?

கடைசியில் குடமும் கீழே விழுந்து உடைந்து போகிறது. என்றைக்காவது ஒரு நாள் உடைந்து போவதுதான். உடைவதற்குள்ளே, நம்மாலான முயற்சிசெய்து சில பூச் செடிகளுக்காவது நீர் விட்டிருக்கலாமே!'

இப்படிச் சிந்தனை கிளர்ந்து எழுகிறது. புத்தகங்களில் வேதாந்தத்தைப் படித்த அறிவாளிகளுக்கு இந்தச் சிந்தனை விரிவடைந்து, மேற்கோளுடன் நெஞ்சில் இடம் பெறுகிறது. பரதேசி தன் பாட்டுக்கு ஒரு கவளம் சோற்றைப் பெற்றுக்கொண்டு அடுத்த வீட்டுக்குப் போய்விடுகிறன்.

இந்த மாதிரி பல வகையான பாடல்கள் இருக்கின்றன. வெளிப்படையாக அர்த்தம் விளங்காமல் மறை பொருளை உடைய பாடல்கள் பல. சித்தர் பாடல்களென்று வழங்குவன எல்லாம் இந்த வகையைச் சேர்ந்தனவே. இடைக்காட்டுச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், கடுவெளிச் சித்தரென்று சொல்கிறவர்களெல்லாம் அஷ்டமாசித்தி கைவந்த சித்தர்கள் என்று நினைக்க வேண்டாம். அப்படி அவர்கள் உண்மையில் இருந்தார்களென்று வைத்துக் கொண்டாலும், அவர்களுக்கும் அவர்கள் பெயரால் வழங்கும் பாடல்களுக்கும் சம்பந்தம் இல்லை. பரதேசிகள் பல காலமாக ஞானமார்க்கமாகப் பாடிய பாடல்களே அவை. அவற்றை இயற்றிய புலவன் யாரோ ஒரு பரதேசி; அல்லது பரதேசிகளுடன் நெருங்கிப் பழகுபவன்.

இந்த உடம்பை எத்தனை விதமாக எவ்வளவு விசித்திரமாக அந்தப் பரதேசிகள் வருணிக்கிறார்கள் தெரியுமா?

**காய மேயிது பொய்யடா**
**காற்ற டைத்த பையடா**
**மாயனார் குயவன் செய்த**
**மண்ணு பாண்டம் ஓடடா.**

உப்பு மண்ணும் ஓட்டை மூங்கில்
ஒட்டி வைத்த கூடடா
உளுத்த நரம்பும் வெளுத்த தோலும்
இழுத்துக் கட்டிய கூடடா
குப்பைக் கீரை முளைத்தது போல்
கூடு கட்டின காடடா
கொழுத்த நரம்பும் புழுத்த தோலும்
இழுத்துக் கட்டின கூடடா!

*வேறொரு பரதேசி பாடுகிறான் கேளுங்கள்.*

தூங்கையிலே வாங்குகிற மூச்சு — மேலே
சுழிமாறி வாங்கையிலே போனாலும் போச்சு!
பாங்கான திருநாளுண் டாச்சு — எங்கும்
பலபேர்கள் கூடியே கதைபேச லாச்சு!
சுழல்கின்ற பம்பரக் கட்டை — விசிறித்
தூக்கையிலே கயிறறுந் தாலோலொட லொட்டை
பழகுகின்ற வாசிமனப் பூட்டை — உற்றுப்
பார்க்கையில் வெட்டவெளி பலபீத்தல் ஓட்டை.

*இந்த உடம்பில் எத்தனையோ ஆச்சரியங்கள் இருக்கின்றன. உலகத்தில் மேதாவிகள் கண்டுபிடிக்கின்ற சூட்சுமமான யந்திரங்களுக்கும் மேற்பட்ட யந்திரப் புதுமை இது. இந்த அருமையான புதுமையை ஒருவரும் பாராட்டுவதில்லை; இந்தச் சிங்காரக் கோயிலைக் கோயிலாக வைப்பதில்லை. இந்தக் கருத்தை ஒரு பரதேசியின் பாட்டில் பார்க்கிறோம்.*

சித்திரப் பதுமையிது சிங்காரக் கோயிலிது
மற்றப் பதுமையெல்லாம் — தங்கமே
மட்டிப் பதுமையடி — ஞானத் தங்கமே
மட்டிப் பதுமையடி
காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடைத்ததுபோல்
ஊற்றைச் சடலத்துள்ளே — தங்கமே
உயிர்நின் றுலாவுதடி — ஞானத் தங்கமே
உயிர்நின் றுலாவுதடி.

*இந்த உடலுக்கு எவ்வளவு காலம் கௌரவமென்பதை அவர் நினைவுறுத்துகிறார்.*

சாகுபடிக் கோட்டையிலே
சந்தைக்காரன் பேட்டையிலே
ஏகஜனக் கூட்டமடி — தங்கமே
ஏமன் வந்தால் ஓட்டமடி — ஞானத்தங்கமே
ஏமன் வந்தால் ஓட்டமடி.
ஆடை நமக்கிரவல் அணிந்ததெல் லாமிரவல்
பாடையும் இரவலடி — தங்கமே
பறையனைச் சேருமடி — ஞானத்தங்கமே
பறையனைச் சேருமடி.
அந்தப் பிணத்தை அலங்காரஞ் செய்து
இந்தப் பிணங்களெல்லாம் — தங்கமே
ஏதுக் கழுகுதடி — ஞானத்தங்கமே
ஏதுக் கழுகுதடி.
செத்த பிணத்தைச் சீரா யலங்கரித்துச்
சாகும் பிணங்களெல்லாம் — தங்கமே
சாய்ந்து விழுகுதடி — ஞானத் தங்கமே
சாய்ந்து விழுகுதடி.

தவத்துக் கொருவரடி தமிழுக் கிருவரடி
சவத்துக்கு நால்வரடி — தங்கமே
சகத்தில் வழக்கமடி — ஞானத்தங்கமே
சகத்தில் வழக்கமடி.

உடலை நினைந்து ஒழியா தழுதவரும்
சுடலை நெருங்கிவிட்டால் — தங்கமே
சொல்லாமல் போவாரடி — ஞானத்தங்கமே
சொல்லாமல் போவாரடி.

பெற்றோர் பௌத்திரரும் பெண்டிர் சகோதரரும்
உற்றோர் உறவினர்கள் — தங்கமே
ஓட்டம் பிடிப்பாரடி — ஞானத்தங்கமே
ஓட்டம் பிடிப்பாரடி.

நீரிருந்தா லேரியிலே நீர்ப்பறவை மெத்தவுண்டு
ஏரியிலே நீரொழிந்தால் — தங்கமே
ஏதொன்றும் நில்லாதடி — ஞானத்தங்கமே
ஏதொன்றும் நில்லாதடி.

*எல்லாம் யார் செயல்? அவரே சொல்லுகிறார்.*

ஆட்டிவைக்கும் ஐயன்செயல் ஆரறிய வல்லவர்கள்
சாட்டையில்லாப் பம்பரம்போல் — தங்கமே
சகமெங்கும் ஆடுதடி — ஞானத்தங்கமே
சகமெங்கும் ஆடுதடி.

*நூறல்ல, இரு நூறல்ல; ஆயிரங் கண்ணிகளை, இதேமாதிரி ஞானமார்க்கமான கண்ணிகளைத் தமிழ் நாட்டில் தேடித் தொகுத்தால் பெறலாம். சில பாடல்கள் என்ன என்னவோ பேருடன் அச்சாகியிருக்கின்றன; ஆனாலும் இலக்கிய ரசிகர்களுடைய பார்வைக்கு அவை இன்னும் வரவில்லை.*

# 20

## படகுக்காரன் பாட்டு

நதியில் மிதந்து செல்லுகிறது படகு. படகை ஓட்டும் ஓடக்காரன் கட்டிளங் காளை. மனத்தில் இன்ப உணர்ச்சியை உண்டாக்கும் மாலைக்காலத்தின் வர்ண மிட்ட கோலம் அந்த நதியின் நீரைச் செங்குழம்பாக்கிக் காட்டுகிறது. சூரியன் மலைவாயிலில் விழும்போது செக்கர் வானத்தின் செம்மை, நீரிலே பிரதிபலிக்கிறது. குபீரென்று பொங்கிய செம்மைத் திருக்கோல மத்தியிலே ஆற்றின் வேகத்தினிடையே படகு மெல்லத் தவழ்கிறது. அதன்மீது இருவரே இருக்கின்றனர். ஒருவன் படகோட்டி; மற்ெருருத்தி அவன் காதலி. அவனுடைய உள்ளத்தில் பூரிப்பு உண்டாக்கும் பொருள் அவள். வாழ்க்கையிலே சம்சார ஓடத்தை நடத்துகிறவன் அவன்; அதற்கு ஊக்கம் ஊட்டுகிறவள் அவள். அவளுடைய கடைக்கண்ணின் பணியிலே அவன் படகு ஒன்றைத் தானா ஓட்டுவான்? பெரிய கப்பலையே ஓட்டிவிடுவானே!

இந்த ரமணீயமான காலத்தில் அழகு துள்ளிக் குதிக்கும் காட்சிக்கு இடையே அவன் தன் காதலியைக் கடைக்கண்ணால் நோக்கிக்கொண்டே படகைத் தள்ளுகிறான். அவனுடைய இன்பநிலைக்கு ஈடே இல்லை.

நெஞ்சு இன்பத்தில் ஊறி விடவே அவனுடைய உணர்ச்சியிலே உல்லாசம் நிரம்பிவிடுகிறது. அப்போது எழுகிறது இனிய பாட்டு ஒன்று. அந்தப் பாட்டுக்கு இடையிடையே தாளம் போடுவதுபோல, அவள் தனிச் சொற்களைச் சொல்கிறாள். ஆண்மையும் வன்மையும் எழுச்சியும் உடைய குரலிலே, "மண்ணை நம்பி" என்று பாடுகிறான் அவன்; அவள் உடனே தன் பெண்மையும் மென்மையும் கவர்ச்சியும் உடைய

தோணியிலே "ஏலேலோ!" என்கிறாள். "மரமிருக்க" என்று வருகிறது ஆண் குரல்; "ஐலஸா" என்று முடிக்கிறது பெண் குரல். இப்படி ஒவ்வோரடியும் காதலன் காதலியர் இருவரும் பாடுவதனால் நிறைவுறுகிறது. அவள் ஏலேலோ, ஐலஸா போடாவிட்டால் பாட்டுக்குத் தாளமே அமைவதில்லை; லயம் கெட்டுப் போகிறது; அடி பூரணமாவதில்லை. அடி மட்டுந்தானா? பாட்டை முடிக்கும்போதுகூட அவள் தான் வருகிறாள்: அவளைப்பற்றித்தான் சொல்லி முடிக்கிறான் காதலன்.

மண்ணை நம்பி — ஏலேலோ
மரம் இருக்க — ஐலஸா
மரத்தை நம்பி — ஏலேலோ
கிளையிருக்க — ஐலஸா
கிளையை நம்பி — ஏலேலோ
கோலிருக்க — ஐலஸா
கோலை நம்பி — ஏலேலோ
இலையிருக்க — ஐலஸா
இலையை நம்பி — ஏலேலோ
பூவிருக்க — ஐலஸா
பூவை நம்பி — ஏலேலோ
பிஞ்சிருக்க — ஐலஸா
பிஞ்சை நம்பி - ஏலேலோ
காயிருக்க - ஐலஸா
காயை நம்பி – ஏலேலோ
பழமிருக்க - ஐலஸா
பழத்தை நம்பி - ஏலேலோ
நீயிருக்க - ஐலஸா
உன்னை நம்பி - ஏலேலோ
நானிருக்கேன் - ஐலஸா!

மண்ணிலிருந்து பழம் வரைக்கும் தொடர்ந்து வந்த பாட்டைப் படகை மறிப்பது போல மறித்து, "உன்னை நம்பி நானிருக்கேன்" என்று தொடர்பு படுத்தி முடிக்கிறன் படகுக்காரன். அவள் முகம் நாணத்தால் சிவக்கிறது. பாட்டின் மோகன ஒலியும் பொருளும் அவளிடத்தே நிறைவு பெறுகின்றன. மண்ணிலிருந்து அவன் அஸ்திவாரம் போட்டுக்கொண்டது கனிக்கு மேற் கனியாகிய அவளை மேலே காண்பதற்காகத்தான். விஷயத்தை நேரடியாகச் சொல்லாமல் எங்கேயோ ஆரம்பித்து அழகிய நிலைக்களனை ஏற்படுத்தி அதன் முடியாக, முக்கியக் கருத்தை அமைக்கும் கவிஞன், எழுத்தாளன் ஆகியவர்களுடைய இனத்தைச் சேர்ந்த வனக இருக்கிறன் இந்தப் படகுக்காரன்.

ஏலேல சிங்கன் என்று ஒரு பெரிய செல்வன் மயிலாப்பூரில் இருந்தானும். திருவள்ளுவருடைய மாணுக்கன் அவன்; பெரிய தர்மப் பிரபு; ஏழைகளுக்கு நிரம்பக் கூலி கொடுக்கும் தயாள குணம் உடையவன். அவனை அறியாத கூலியாட்களோ, ஏழைகளோ அந்த ஊரிலே இல்லை. அவனுடைய புகழ் பசிப்பிணியுடைய வர்களிடத்திலும் வறுமையால் வாடுபவர்களிடத்திலும் பரவியிருந்தது.

பெரிய கப்பல் வியாபாரி அவன். படகு தள்ளு பவர்கள் அவனுடைய புகழைப் பாடிப் படகை ஓட்டு வார்கள். ஏலேலோ என்ற வாய்பாடு அவன் பெயராகிய ஏலேலன் என்பதிலிருந்து வந்ததென்று ஒரு செய்தி வழங்குகிறது. கப்பல் பாட்டு "ஏலேலோ" என்று ஆரம்பிக்கும்; படகுக்காரன் பாட்டிலே இருப்பதுபோல "ஏலேலோ", "ஐலஸா" என்று இரண்டு சொற்கள் எதிரெதிர் வழங்குவது உண்டு. சுண்ணும்பு குத்துகிற பெண்கள் "ஏலேலமடி ஏலம்" என்பதை ஒவ்வோரடிக் கும் முடியாக வைத்துச் சில வகைப் பாடல்களைப் பாடுகி

ரூர்கள். இரண்டு கட்சியாகப் பிரித்துக்கொண்டு அடிகளைத் தம்முள் மாற்றிப் பாடுவார்கள்.

படகுப் பாட்டாக இருந்தாலும் விஷயம் படகு சம்பந்தமாகத்தான் இருக்க வேண்டுமென்பது இல்லை. கப்பல் பாட்டு, ஓடப்பாட்டு என்று சில மெட்டுக்களே உண்டாகிவிட்டன.

அவற்றிற்கும் கப்பலுக்கும் சம்பந்தமே இல்லை. தொடர்ச்சியாகச் சில விஷயங்களை ஒருங்கே சொல்ல வேண்டுமென்றால், முடுகி வரும்படி சேர்த்து அமைத்துக் கப்பல் பாட்டு ஆக்கி விடுவார்கள். இராமாயண ஓடம், பாரத ஓடம், நவராத்திரி ஓடம் முதலிய ஓடப் பாட்டுக்கள் இப்படி அமைந்தவையே.

சில ராகங்களின் பேர்களை அடுக்கிச் சொல்லும் கப்பல் பாட்டு ஒன்று வருமாறு:—

ஏலேலோ ஏலலில்லோ
　　தகுந்தத்தையா ஏலலில்லோ
நாகரிக மானதொரு நாட்டையலங் காரம்
　　நயமெத்த காம்போதி கனமெத்த தேசி
கன்னடா காபிநான் என்னடா சொல்வேன்
　　சபையலங் காரமுள்ள சாவேரி ராகம்
சாதக முள்ளசௌ ராஷ்டிர முகாரி
　　எல்லாம் புகழுமெத்த கல்யாணி ராகம்
இடிமுழங்கு ரவதேசி (?) தேசிக தோடி
　　இன்னும் சில ராகங்களை அபுருபமா ஏற்றிப்
பின்னாலே வருகுதையா சொன்னதொரு கப்பல்!

நெய்பவர்கள் தறி போடும்பொழுது ஒருங்கு சேர்ந்து பாடும் தறிப்பாட்டு ஒன்றில் ஆடை நெய்யும்போது ஆரம்பம் முதல் கடைசி வரையில் செய்யப்படும் காரியங்

*களெல்லாம் தொடர்ச்சியாக வருகின்றன. அந்தப் பாட்டு, கப்பல் பாட்டு மெட்டாக இருக்கிறது. ''ஏலேலோ - மயில் - வேலோனே'' என்று ஒவ்வொரு சந்தையும் முடிகிறது. அதன் முதற் பகுதி வருமாறு:—*

கொட்டிக்கோ வடக்கு முகமாகவே நின்று
குனிந்துமண் மீதில் மனமுமொன்றுக
வெட்டியா ஊைப்பிடித்து மேல்சேரத் தூக்கி
மேலுக் கெதிராகத் தாழவே போடு
கட்டியாகப் போகுது வெட்டியும் பாரு
காலரம் பானவன் மேல்விழப் போருன்
முட்டிக் காலு முழங்குடித்துத் தூக்கி
மூச்சை பிடித்தொரு பாய்ச்சலாத் தூக்கு
கொட்டாரம் பண்ணுதே கெட்டியாத் தூக்கு
ஒசந்தா அரைமட்டம் நிறைந்ததா பாரு
சட்டமா நீர்சொன்ன படியுமே ஆச்சு
தண்ணீர் மொண்டுவரச் சென்றதே கப்பல்!
ஏலேலோ - மயில் - வேலோனே!

*மாப்பிள்ளையை ஏசும் ஓடப் பாட்டு ஒன்று:*

ஏலேலோ — தத்தையா — ஏலலில்லோ
ஏலேலோ — ஏலலில்லோ
தேசாதி தேசமெங்கும் — தாய்தந்தை
தேடிவந்து மாப்பிள்ளையை
மோசமாக அழைத்துவந்து — வெகுபரிந்து
மிகவாக வார்த்தை சொல்லி

*(முடுகு)*

அத்தானே அத்தானே
அத்தானே கேளும்

அழகு சபை தனிலுள்ள
அனைவருங் கேளுங்கள்
தேவாரஞ் சொல்லென்றால்
தாவாரம் போவார்
தேவடியாள் வீடென்றால்
காவலா யிருப்பார்
ஆனைமே லேறென்றால்
பானைமே லேறுவார்
ஆத்துக்குப் போவென்றால்
ஊத்துக்கு போவார்
மாடிமே லேறென்றால்
சாடிமே லேறுவார்
மச்சுக்குள் நுழையென்றால்
குச்சுக்குள் நுழைவார்
கச்சேரி போவென்றால்
புதுச்சேரி போவார்
கணக்குகளைப் பாரென்றால்
பிணக்காகப் போவார்
அண்டையிலே வாருமென்றால்
சண்டையிலே போவார்
ஆடுகளைப் பாரென்றால்
மாடுகளை மேய்ப்பார்
இப்படிச் சமர்த்துள்ள
மாப்பிள்ளையைத் தேடி

இருந்தாரே உன் தந்தை
என் றுமே நாடி
போசனக் காரர்கள்
புகழ்கெட்டிக் காரர்
ஒருபருக்கை குறைந்தாலே
எழுந்திருக்க மாட்டார்
ஏலேலோ — தத்தையா
ஏலலில்லோ!

# 21

## சங்கடங்கள்

ஏழைப் பிச்சைக்காரன் நாள்தோறும் பிச்சை வாங்கிப் பிழைக்கிறான். ஏதோ தனக்குத் தெரிந்த பாட்டைப் பாடிக்கொண்டு நாலு வீதிக்குப் போய்ப் பிச்சை எடுத்துக் கிடைத்த அரிசியைப் பொங்கித் தின்று தன்னுடைய வாழ் நாட்களை ஒவ்வொன்றாக எண்ணிக் கொண்டு காலம் கடத்துகிறான். தர்மம் செய்வதென்பது இந்த நாட்டு மண்ணோடு பிறந்த இயல்பு. ஆகையால் அவன் பிச்சை கேட்கும்போது இல்லையென்னாமல் பிடி யரிசி போடும் தாய்மார்கள் இருக்கிறார்கள். கடைக்குப் போய்ப் பிச்சை கேட்டால் இரண்டு மிளகாயோ, உப்புக் கல்லோ, புளியோ, கொஞ்சம் பருப்போ கடைக்காரர்கள் தருகிறார்கள். கிடைத்த ஒரு காசு அரைக் காசுக்கு ஒரு நெருப்புப்பெட்டி வாங்கி வைத்துக்கொள்கிறான். ஏதோ ஒருவிதமாக அரிசியைச் சோறாக்கிக் குழப்பி வயிற்றுக் குழியை ஒரு நாளைக்கு நிரப்பிக்கொள்கிறான்.

தர்மத்தின் நிழலிலே வாழும் அவனுக்குச் சங்கடம் வருகிறது; எந்த உருவத்தில் வருகிறது தெரியுமா?

அவன் அங்கங்கே கிடக்கும் சுள்ளிகளைப் பொறுக்கி வந்து விறகாக உபயோகித்துக் கொள்கிறவன். ஒரு மாத காலமாக விடாமல் மழை பெய்வதால் அவனுக்கு விறகுப் பஞ்சம் வந்து விடுகிறது. அரிசியை யாசிக்கலாம்; பருப்பைப் பிச்சைவாங்கலாம். விறகை வாங்குவது வழக்கம் அல்லவே! அரிசியிருந்தும் பருப்பிருந்தும் அடுப்புக்கில்லாத சங்கடம் வந்து குறுக்கிடுகிறது; சோற்றுப் பிச்சைக்குப் புறப்பட்டு விடுகிறான்.

* * * *

இந்தப் பிச்சைக்காரனைவிட வாழ்க்கையில் ஒருபடி உயர்ந்தவன் அந்த ஏழைத் தொழிலாளி. அவன் நிரந்தரமாக வாழ்வதற்கு ஒரு குடிசையைக் கட்டிக் கொண்டிருக்கிறான். அன்றன்று வயிறு கழுவுவதற்கு வேண்டிய கூலிதான் அவனுக்குக் கிடைக்கிறது; அது கூடச் சில நாள் கிடைப்பதில்லை. அவனுடைய குடிசைக்கு மூங்கிற் பிளாச்சினால் ஒரு கதவு உண்டு. அதன்மேல் கீற்றுக்களைக் கட்டி ஏதோ ஒருவிதமாக மறைப்பை உண்டாக்கிக் கொள்கிறான். பெருங்காற்றினா லும் மழையினாலும் கதவு ஒடிந்து வீணாய்ப் போகிறது. மறுபடியும் அந்த மாதிரிக் கதவு போட முடியவில்லை அவனுக்கு. காற்றடிக்குது, தூள் பறக்குது; இந்த நிலையில் கதவில்லாத சங்கடம் அவனுக்குப் பெரிதாயிருக்கிறது.

* * *

மற்றொருவன்: சமூகத்தினிடையில் மானமாகப் பிழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்தவன் அவன். வீடு வாசல், மனைவி மக்கள், ஆடையாபரணம் என்ற வாழ்க்கைக் கருவிகள் அவனுக்கு உண்டு. 'இவன் இந்த உலகத்திலே சொர்க்க போகத்தை அநுபவிக்கிறவன்' என்று நாம் நினைக்கிறோம். அவனுக்கு விசனமே இரா தென்றுதான் தோன்றுகிறது. ஆனால் அவனை அந்த ரங்கமாகக் கேட்டுப் பாருங்கள்.

தீபாவளி வந்து விடுகிறது. தீபாவளிக்கு முன் ஒரு வாரகாலமாக அவனுடைய முகத்தில் ஒளியே இல்லை.

"ஏன் அப்பா இப்படி இருக்கிறாய்?"

"அதை ஏன் கேட்கிறாய்? பெரிய சங்கடத்தில் மாட்டிக்கொண்டிருக்கிறேன். தீபாவளி வரப்போகிறதே என்று குலை நடுங்குகிறது."

''என்ன சங்கதி?''

''இந்த மாசச் சம்பளத்தில் கொஞ்சந்தான் பாக்கி இருக்கிறது. என் மனைவி இந்தத் தீபாவளிக்குக் கட்டாயம் ஒரு பட்டுப்புடைவை வேண்டுமென்று மூன்று மாசமாக அடிபோட்டு வருகிறாள். குடும்பத்தை மூன்றும் பேருக்குத் தெரியாமல் கௌரவமாக நடத்திக் கொண்டு போவதற்கே மூச்சுத் திணறுகிறதே! இதில் பட்டுப் புடைவைக்கு எங்கே போவேன்?''

இப்படி அங்கலாய்த்துக் கொண்டே வீட்டுக்குப் போகிறான். அவன் மனைவி நிச்சயம் அன்று புடைவை கிடைக்குமென்று நம்பிப் புன்முறுவலோடு வந்து முன்னே நிற்கிறாள். சங்கடம் உதயமாகிறது: புடைவை இல்லாத சங்கடந்தான்!

* * * *

மித மிஞ்சிய சுகபோகங்களினால் வாழ்க்கையைச் சூதாட்டத்தைப்போலக் கருதும் அந்த 'மைனர்' பிள்ளையாண்டான் இருக்கிறானே, அவனுக்கு என்ன ஐயா குறைச்சல்? குந்தித் தின்றாலும் பத்துத் தலைமுறைக்குக் காணுமே பணம்! பரம்பரையாக வந்த பெருமையை நினைத்தானா? ஜனங்களின் பழியை நினைத்தானா? 'தாம் தூம்' என்று செலவு பண்ணி அநியாயமாகப் பணத்தைச் சூறையாடிக் காலையில் எழுந்திருந்தால் கடன்காரனுக்கும் வாரண்டுக்கும் பதில் சொல்ல வேண்டிய நிலைக்கு வந்திருக்கிறான். அவனுக்கு அந்த யமன்களைக் கண்டால் கொஞ்சம்கூட விசனம் உண்டாகவில்லை. அவன் மான உணர்ச்சி மரத்துப்போய் விட்டது. ஆனாலும் அவனுக்கு விசனம் இல்லையா? இருக்கிறது. அவனை இந்த நிலைக்குக் கொண்டு வந்து விட்ட ஒரு பேர்வழி, அவனைத் தனது மாய மோகவலைக்குட் பிடித்துப் பிணித்து அவன் செல்வத்தை உறிஞ்சிய பெண்பேய் ஒருத்தி, இருக்கிறாள். அந்த வேசியின் மோகம் இன்னும் அவனுக்கு நீங்கிய

பாடில்லை. தன்னை விற்றாவது அவளைத் திருப்திப்படுத்த வேண்டுமென்பது அவனது தீவிர விரதமாக இருக்கிறது: அவள் வந்து விட்டாள் என்றால், அவள் திருவடிக்குக் காணிக்கைக் செலுத்துவதிலேயே அவனுடைய யோசனை சென்றுவிடுகிறது.

தாசி வந்து வாசலில் நிற்கிறாள்; அவனுக்குச் சங்கடம் உண்டாகிறது: காசில்லாத சங்கடம்.

* * * *

இப்படி மனிதனுக்குத் தன்னுடைய வாழ்க்கை நிலைக்கும், கடமைக் கட்டுப்பாட்டுக்கும், ஒழுக்கத்துக்கும், சுகபோகத்துக்கும் இடையே வரும் குறைகள் சங்கடங்களாகின்றன. ஒவ்வொருவனுடைய நிலைக்கும் ஏற்றபடி அந்தச் சங்கடம் உருக்கொள்கிறது. எல்லாம் விசனத்தை உண்டாக்குவதில் ஒரே மாதிரி சக்தியை உடையன. இதைப் பின்வரும் நாடோடிப் பாடல் சொல்கிறது.

அரிசி இருக்குது பருப்பிருக்குது
அடுப்புக் கில்லாத சங்கடம்!
காற்றடிக்குது தூள்பறக்குது
கதவில் லாத சங்கடம்!
பொண்டாட்டி வந்து முன்னே நிற்கிறாள்
புடைவை இல்லாத சங்கடம்!
தாசி வந்து வாசலில் நிற்கிறாள்
காசில் லாத சங்கடம்!

இந்தச் சங்கடங்களெல்லாம் வெவ்வேறு நிலையில் வெவ்வேறாகத் தோன்றினாலும் மனிதனுடைய உள்ளத்தே குறையுணர்ச்சியை உண்டாக்குவதில் ஒன்று என்பதை இவ்வளவையும் ஒருங்கே சொல்லியிருப்பதனால் உணர்ந்து

கொள்ளலாம். இதைப் போலவே இலக்கிய உலகத்தில் ஒரு தனிப் பாடல் உலவுகிறது.

பாலுக்குச் சக்கரை இல்லை என்னும் மனிதனுக்கும் கூழுக்கு உப்பு இல்லை என்று அழும் ஏழைக்கும் விசனம் ஒன்றுதான் என்று அப்பாடல் தெரிவிக்கிறது:

பாலுக்குச் சர்க்கரை இல்லையென்
பார்க்கும் பருக்கையற்ற
கூழுக்குப் போடவுப் பில்லையென்
பாருக்கும் குற்றித்தைத்த
காலுக்குத் தோற்செருப் பில்லையென்
பார்க்கும் கனகதண்டி
மேலுக்குப் போட உறையின்றென்
பார்க்கும் விதனமொன்றே!

## ௨௨

# சாலையிலே காதல்

மதுரைக்கு அருகிலே ஒரு சாலை. அந்தச் சாலையின் இரு மருங்கிலும் ஓங்கி வளர்ந்த மரங்கள் இருக்கின்றன. சாலையிலே ஒரு கூண்டு வண்டி போய்க்கொண்டிருக்கிறது. அதற்குள்ளே ஒரு நங்கை, இளமையும் அழகும் பொருந்தியவள், அமர்ந்திருக்கிறாள்.

அந்த வண்டியைத் தொடர்ந்து இரும்பால் வடித்தாற் போன்ற ஆண் மகன் ஒருவன் செல்கிறான். வண்டியிலே போகிறவளுக்கும் அவனுக்கும் உறவு ஒன்றும் இல்லை; இருவரும் அயலார். ஒருவரை ஒருவர் பார்க்கும் நிலையில் அவர்கள் இருந்தார்கள்; அவ்வளவுதான்.

அது போதாதா? அவர்களுடைய கண்கள் தம் முள்ளே உறவாடிக் கொள்ளுகின்றன. அந்தப் பார்வையின் மூலமாகவே இரண்டு உள்ளங்களிலும் ஏதோ ஒரு சக்தி பாய்ந்து கொந்தளிக்கச் செய்கின்றது.

* * * *

இந்த அழகான காட்சியை ஒரு தமிழ்ப் புலவன் காவியமாகச் செய்தால், அதை அறிவுடையவர்களும் வித்துவான்களும் படித்து இன்புற்றுப் பாராட்டுவார்கள். ஆனால், இந்தக் காதல் நாடகத்தைப் பாடினவர் இன்னாரென்று தெரியாது. யாரோ நாடோடிப் பேர்வழி பாடியிருக்கிறான். அது சுண்ணாம்பு குத்தும் பெண்கள் பாடுவதற்கு ஏற்றதாக அமைந்திருக்கிறது. அவர்கள் மிகவும் உத்ஸாகத்தோடு பாடும் பாட்டும் சுண்ணாம்பு குத்தும் உலக்கையின் ஒலியாகிய தாளமும் அதன் பொருளும் ஒன்றோடு ஒன்று பொருந்தி அழகு செய்கின்றன.

வண்டி கட்டி மாடு கட்டி
ஏலேலமடி ஏலம்
மீனாட்சி யம்மன் கூண்டு கட்டி
ஏலேலமடி ஏலம்

என்று அப்பெண்கள் பாட ஆரம்பித்து விடுகிறார்கள். இனி நாம் வண்டியைத் தொடர்ந்து செல்வோம்.

* * * *

கண்இணை ஒன்றினை ஒன்று கவ்வி உள்ளத்தைப் பிணைத்துவிட்ட காளையும் நங்கையும் பேசாமல் இருக்கிறார்கள். வண்டி ஊர்கிறது. அதன்பின் அவன் மெல்ல நடக்கிறான். அவன் உள்ளமோ ஊசலாடுகிறது.

'இவளோடு பேச்சுக் கொடுக்கலாமா?' என்று யோசிக்கிறான். தைரியம் வரவில்லை.

''ஏ, பெண்ணே!'' என்று கூப்பிடுகிறான்; தொனி எழவில்லை; அவன் வாய்க்குள்ளே அடங்கிவிடுகிறது. சிறிது கனைத்துக் கொள்கிறான். மறுபுறமாகத் திரும்பியிருந்த மங்கை அவனை நோக்குகிறாள். இப்போது அவனுக்குத் தைரியம் வந்து விடுகிறது. அவள் காதிலே விழும்படி சொல்லுகிறான்.

வண்டிகட்டி மாடுகட்டி
ஏலேலமடி ஏலம்
மீனாட்சியம்மன் கூண்டுகட்டி
ஏலேலமடி ஏலம்
கூண்டுக்குள்ளே போறபெண்ணே
ஏலேலமடி ஏலம்
கூப்பிட்டாலுங் கேக்கலையே
ஏலேலமடி ஏலம்.

அவள் என்ன பதில் சொல்லுவாள்? ''கேட்கிறது! உனக்கு என்ன வேண்டும்?'' என்பாளா?

அவனுடைய துணிச்சல் கண்டு அவளுக்குக் கோபந் தான் வருகிறது. மங்கையரின் இயல்பு இதுதான். உள்ளம் ஆழத்திலே போராடிக்கொண்டிருந்தாலும் வெளியே விட்டுக்கொடுக்காமல் வீரம் பேசுவார்கள். அதைத்தான் வண்டிக்குள்ளே இருக்கும் பெண் செய்கிறாள்.

சாலையிலே ரெண்டுமரம்
ஏலேலமடி ஏலம்
சாமிதுரை வச்சமரம்
ஏலேலமடி ஏலம்
எல்லோருக்கும் ஏத்தமரம்
ஏலேலமடி ஏலம்
உனக்குத்தாண்டா தூக்குமரம்
ஏலேலமடி ஏலம்.

சாலைமரத்தைத் தூக்குமரமென்று சொல்லி, அவள் பயமுறுத்துகிறாள். ''ஜாக்கிரதை! கண்டபடி பேசாதே!'' என்று எச்சரிக்கை செய்வதற்குப் பதிலாக அப்படி எதையோ சொல்வது போலச் சொல்கிறாள்.

அவன் பூரித்துப் போகிறான். ஏன் தெரியுமா? அது தூக்கு மரமாக இருக்கட்டும், கற்பக விருட்சமாக இருக்கட்டும்; அதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. அவள் பேசினாளே, அதுவே போதும்! நெருப்பென்றால் வாய் சுட்டுவிடுமா? அவள் தூக்கு மரம் என்று சொன்ன மாத்திரத்தில், அவன் மரண தண்டனை அடைந்தவனாகி விடுவானா? தூக்கு மரமென்று அவள் சொன்னபோது அவனுக்கு உயிரா போய்விட்டது? இல்லை, இல்லை! போன உயிர் வந்ததென்றுதான் சொல்ல வேண்டும்.

அவள் பேசத் துணிந்து விட்டாள். இனி அவன் விடுவானா? அவள் பேச்சோடே ஒட்டிக் கொண்டு தொடர்கிறான்; "அப்படியா? அந்தத் தூக்குமரத் தண்டைதான் வாக்குமூலம் கேட்கிறார்கள்; சொல்" என்று சாமர்த்தியமாகச் சம்பாஷணையைத் தொடர்பு படுத்துகிறான்.

தூக்குமரத் தண்டையிலே
ஏலேலமடி ஏலம்
வாக்குமூலங் கேக்கிறாங்க
ஏலேலமடி ஏலம்.

அவன் தான் கேட்கிறான். அவனுக்கு இப்போது ஒரு சந்தேகம் வந்துவிடுகிறது. அந்த நங்கை கன்னியா? கட்டிக்கொடுத்த பெண்ணா? இதை எப்படித் தெரிந்து கொள்கிறது? அவள் ஒருத்தனுக்கு உரியவளாக, முன்பே மணமானவளாக இருந்தால், அவள் பெண்மையினால் அவனுக்குப் பயன் இல்லை; அவள் ஓர் ஆணுக்குச் சமானந்தான். கன்னியாக இருந்தால்தான் அவளைப் பெண்ணாகப் பார்ப்பதற்குப் பயன் உண்டு.

அவன் மீண்டும் பேச்சில் தொடர்பு அறுமமரத்தைப் பற்றிக்கொண்டு கேட்கத் தொடங்குகிறான்:

ஒருமரத்தை வெட்டிப் போட்டு
ஏலேலமடி ஏலம்
ஒருமரத்தை ஊஞ்சல் கட்டி
ஏலேலமடி ஏலம்
ஊஞ்சல்மேலே போகுங் கிளி
ஏலேலமடி ஏலம் - அது
ஆண்கிளியோ பெண்கிளியோ
ஏலேலமடி ஏலம்.

அவள், தான் தாயின் பாதுகாப்பில் இருக்கும் கன்னிப் பெண் என்பதைக் குறிப்பாகச் சொல்லுகிருள். முதலில் எழுந்த கோபம் இப்போது எங்கேயோ ஓடிப்போய் விட்டது. தன்னை மறந்து காதல் மீதூர 'மச்சான்' என்று அவனை அழைக்கிருள்.

ஆண்கிளியும் அல்ல மச்சான்
ஏலேலமடி ஏலம்
பெண்கிளியும் அல்ல மச்சான்
ஏலேலமடி ஏலம்
தாயை மறந்த கிளி
ஏலேலமடி ஏலம்
தாய்வீட்டுக்குப் போகுங் கிளி
ஏலேலமடி ஏலம்

தெரிந்துகொள்ள வேண்டிய செய்திகளெல்லாம் அந்த இளங் காளை தெரிந்துகொண்டான். அவள் உள்ளத்தையும் 'மச்சான்' என்று வாய் நிரம்ப அவள் சொன்ன வார்த்தையாலே உணர்ந்தான்.

வண்டி மிகவும் மெதுவாகப் போய்க்கொண்டிருக்கும் போது இந்த இரண்டு உள்ளங்களையும் உறவாட வைத்த காதலின் வேகத்தை என்னவென்று சொல்லுவது! எல்லாம் மறைபொருளான பேச்சு. அதனுள்ளே காதலுணர்ச்சி!

அவன், இனி அவளை நெருங்கலாம். உள்ளம் இரண்டும் ஒட்டிக்கொண்டன என்ருல், பிறகு அவற்றைப் பிரிக்க யாரால் முடியும்? அவன் வண்டியை அணுகுகிருன்.

ஓடுகிற ஓட்டத்திலே
ஏலேலமடி ஏலம்
ஒத்தப்பனை ஓரத்திலே
ஏலேலமடி ஏலம்
எட்டிஒரு முத்தங்கொடு
ஏலேலமடி ஏலம்
ஏறிக்கிறேன் வண்டிமேலே
ஏலேலமடி ஏலம்!

*இதற்குப் பதில் அவள் வாய் தருகிறது! வார்த்தையாக அல்ல — !*

*வண்டியாகிய ஊஞ்சலில் இப்போது இரண்டு கிளிகள் அமர்ந்துகொண்டன.*

# 23

# குருவியின் கல்யாணம்

குழந்தைகளின் கண்களிலும் கற்பனையிலும் அடிக்கடி தோன்றும் இனிய பறவை குருவி. அவர்களுக்குக் கதை கூறும் பாட்டி குருவியைக் கதாநாயகனாக வைத்து எவ்வளவோ கதைகளைக் கூறுகிறாள். விடுகதைகளில் குருவி பல வகையில் வருகிறது. பாட்டுக்களிலோ கணக்கு வழக்கே இல்லை. பாரதியார்கூட, 'பாப்பா பாட்'டில்,

> சின்னஞ் சிறுகுருவி போலே — நீ
> திரிந்து பறந்துவா பாப்பா

என்று சொல்லுகிறார். குழந்தையினுடைய தோழர்களுக்குள் குருவி முக்கியமானது. இதை உலகத்துக் குழந்தைப் பாட்டுக்களிலும் கதைகளிலும் காணலாம்.

நாடோடிப் பாடல்களில் சின்னஞ்சிறு குருவி பல பல விதமாகக் காட்சி அளிக்கிறது. பல இடங்களில் உவமைப் பொருளாக வருகிறது.

வேடன் விரித்த வலையிலே ஒரு சிட்டுக் குருவி — பெட்டை — வந்து அகப்பட்டுக்கொண்டது. தொடர்ந்து ஆண் குருவி ஒன்றும் வந்து சிக்கியது.

வலையிலே மாட்டிக்கொண்டாலும் ஆணும் பெண்ணுமாக இருப்பதிலே ஓர் ஆறுதல் உண்டாயிற்றுப் போலும்!

வலை மிகவும் பெரியது. சின்னஞ் சிறு சிட்டுக் குருவிக்காக மட்டும் அமைத்ததல்ல; பறவைப்

பிரபஞ்சமே வந்து சிக்கிக்கொள்ளும்படியான அமைப்பு வாய்ந்தது.

சிட்டுக் குருவிக்கு அடுத்தபடி பெரிதாக இருக்கிற வண்ணாத்திக் குருவி வந்து வலையில் மாட்டிக்கொண்டது; பிறகு நாரை வந்தது; காக்காய் வந்தது. இப்படிக் கூட்டம் கூடினவுடனே அந்தப் பறவைக் கூட்டத்தின் துயரமே மறைந்துவிட்டது. பலர் ஒன்று சேர்ந்து அநுபவிக்கும் போது துன்பத்திற்கு வலி குறைந்து விடுகிறது.

பெரியவர்களாகிய நாரைகளும் காக்கையும் தங்களையும் விடுவித்துக்கொண்டு குருவிகளையும் விடுவித்துக் கொள்ளும் திறமை பொருந்தியவை. அந்தப் பறவைகள் ஆண் குருவியையும் பெண் குருவியையும் பார்த்தபோது அவ்விரண்டையும் வேறு ஒரு வகையில் சிறைப்படுத்த வேண்டுமென்று நினைத்தன. ஆணும் பெண்ணும் சேரும் இடத்திலே இன்ப விழா இல்லாமல் இருக்கலாமா? இரண்டு குருவிகளுக்கும் கல்யாணம் செய்யத் தீர்மானம் ஆயிற்று. 'ஜிகிஜிகிச்சாங் குருவி' யாகிய பெண் குருவிக்கும், 'டேக்குருவி' யாகிய ஆணுக்கும் சம்பிரமமாகக் கல்யாணம் ஆயிற்று. இந்தக் கல்யாண விமரிசையை, வலையில் மாட்டிக்கொண்டது முதலாக வரிசையாகச் சொல்லுகிறது நாடோடிப் பாட்டு ஒன்று.

1. ஜிகிஜிகிச்சாங் குருவி வந்து
ஜிலாம் மாட்டிக்கிச்சாம் — குருவி
ஜிலாம் மாட்டிக்கிச்சாம் — குருவி
ஜிலாம் மாட்டிக்கிச்சாம்.

2. அதிலே ஒரு டேக்குருவி
அதுவும் மாட்டிக்கிச்சாம் — குருவி
அதுவும் மாட்டிக்கிச்சாம்.

3. வண்ணாத்திக் குருவி வந்து
வலையில் மாட்டிக்கிச்சாம் — குருவி
வலையில் மாட்டிக்கிச்சாம்.

4. செங்காலு நாரை வந்து
சேவகம் பண்ணிக்கிச்சாம் — குருவி
சேவகம் பண்ணிக்கிச்சாம்.

5. நத்தைக்குத்து நாரை வந்து
நாயம் பண்ணிக்கிச்சாம் — குருவி
நாயம் பண்ணிக்கிச்சாம்.

6. பார்க்கப் போன கம்பளிப் பூச்சி
பல்லை இளித்ததாம் — பூச்சி
பல்லை இளித்ததாம்.

7. கள்ளிக் காக்காய் ஓடிவந்து
காலை நீட்டிக்கிச்சாம் — காக்காய்
காலை நீட்டிக்கிச்சாம்.

8. மஞ்சப் பூசிக்கிச் சாங்குருவி
மாலை போட்டுக் கிச்சாம் — குருவி
மாலை போட்டுக் கிச்சாம்

9. பொட்டு இட்டுக்கிச்சாங் குருவி
மை இட்டுக்கிச் சாம் — குருவி
மை இட்டுக்கிச்சாம்.

10. பந்தல் போட்டுக்கிச்சாங் குருவி
மோளம் அடிச்சிக்கிச்சாம் — குருவி
மோளம் அடிச்சிக்கிச்சாம்.

11. தாலி கட்டிக்கிச் சாங்குருவி
கண்ணாலம் பண்ணிக்கிச்சாம் — குருவி
கண்ணாலம் பண்ணிக்கிச்சாம்
டும் டும் டும் டும் குருவி
கண்ணாலம் பண்ணிக்கிச்சாம்.

இந்தப் பாட்டின் ஓசை அழகே குழந்தைகளுக்கு உற்சாகத்தை ஊட்டுவதாக இருக்கின்றது.

# 24

## வாடிய உள்ளம்

தமிழ் இலக்கியத்திலே காதலைப்பற்றிச் சொல்லும் பகுதிக்கு அகப்பொருள் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். அந்த அகப்பொருள் தமிழுக்கே சிறப்பானது என்றும் பழங்காலத்தில் அகத்துறை அமைந்த பாடல்களைப் புலவர்கள் மிகவும் ஊக்கத்தோடு பாடினார்களென்றும் புலவர்கள் சொல்லிக்கொள்வார்கள்.

காதல் என்பது ஆண் பெண் என்ற பகுப்புடைய உயிர்கள் எல்லாவற்றிற்கும் உரியது. மனித சாதிக்கு அது சிறப்பாக உரியது. காதலை வாழ்க்கையில் உயர்ந்த இன்பமாகவும் மிகவும் மேன்மையான உணர்ச்சியாகவும் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்பது லட்சியவாதிகளின் கொள்கை. கவிஞர்களுக்கோ காதல் தெய்வத்துக்குச் சமானமானது. காதலைப் பாடாத கவியே உலகத்தில் இல்லை என்று சொல்லிவிடலாம். எந்த எந்த மொழியிலே கவிதை இருக்கிறதோ அந்த அந்தப் மொழி இலக்கியத்திலே காதலும் நிரம்ப இருக்கும்.

"எல்லா மொழிகளுக்கும் பொதுவான காதலைத் தமிழர்கள் மாத்திரம் தங்களுக்கே உரியதென்று சொல்லிக்கொள்ளுதல் எவ்வாறு பொருந்தும்?" என்ற கேள்வி எழுவது நியாயந்தான். காதல் தமிழர்களுக்கே உரிய சிறப்பு உணர்ச்சியல்ல. காதற் கவிதைகளும் தமிழ் மொழிக்கே தனியுரிமைப் பொருளல்ல. ஆனால் தமிழர்கள் மற்றவர்கள் செய்யாத ஒரு காரியத்தைச் செய்திருக்கிறார்கள். காதல் வாழ்க்கையை ஒரு நாடகத்தைப் போல விரித்து ஒன்றன்பின் ஒன்றாக உணர்ச்சி வகைகளையும் நிகழ்ச்சிகளையும் தனித்தனித் துறையாக வகுத்து இலக்

கணமும் இலக்கியமும் செய்திருக்கிறார்கள். இன்ன பொருளை இன்ன இன்னபடி சொல்லிக்கொண்டு போகவேண்டும் என்ற வரையறையே தமிழர்கள் தங்கள் சொத்தென்று பாராட்டி உரிமை கொண்டாடுவதற்கு உரியது. அந்த வரையறை பொருட்போக்கைச் சிறைப் படுத்தி வெறும் வாய்பாடாக வைத்துவிடவில்லை. கலைத் தன்மை நிரம்பிய வரம்பு கட்டி அழகுபடுத்துகிறது.

ஒரு சிறிய உதாரணத்தைக் கவனிக்கலாம்: இந்தக் காதல் சித்திரம் அவ்வளவும் உலகத்தில் உண்மை யாகவே நிகழ்வதன்று என்று புலவர்கள் சொல்லு கிறார்கள். 'இல்லது, இனியது, நல்லது, புலவர்களால் நாட்டப்படுவது' என்று சொல்வார்கள். அமானுஷ்ய மானது, லட்சிய வாழ்க்கையாகக் கருதுவதற்கு உரியது, கலையம்சம் நிரம்பியது, கவிதைச் சுவைக்கு வளப்பம் தருவது என்ற கருத்தோடுதான் அப்படிச் சொல்லு கிறார்கள். ஒரு காதலனும் காதலியும் அன்பு பூண்டு இன்பம் நுகர்கிறார்கள் என்ற செய்தி இந்த அகப் பொருளில் வருகின்றது. இந்த நாடகத்துக்கு நாயகனாக உலகத்திலுள்ள ஒருவனை வைக்கக் கூடாது. யாரையா வது பாட்டினாற் புகழவேண்டும் என்றால் அவன் பேரை வேறு ஏதாவது ஒரு சம்பந்தம்பற்றிப் பாட்டிலே சொல்லலாமே ஒழிய, காதல் நடத்தும் நாயகனாகச் சொல்வது அகப்பொருளுக்குப் புறம்பானது. இந்த வரையறை காதலை மானுஷ்யமாக்காமல் தெய்விகமாக்கி விடுகிறது. கவிதையின் சுவையைப் புற உலக நினைவோடு நுகராமல் காதலின் நுட்பத்தை உள்ளபடி எண்ணிக் கருத்தில் ஊறும் இன்பத்தை நுகரும் வாய்ப்பை உண்டாக்குகிறது.

இந்தமாதிரி புலவர்களால் பழங்காலந் தொடங்கிப் போற்றிப் பாதுகாக்கப் பெற்று வந்த காதற் கவிதை படரும் துறைகள் பல. காதலனும் காதலியும் பிறர் அறியாதபடி தம்முள்ளே கலந்து இன்புறுதலும்,

இடையிடையே தடை நிகழ்தலும், அது நீங்கவேண்டு மென்று விரும்பிக் காதலி துயருறுதலும் இவைபோன்ற வேறு நிகழ்ச்சிகளும் அடங்கிய பகுதிதான் மிகவும் முக்கியமானது. எல்லோரும் அறிய மணந்துகொண்டு கணவன் மனைவியாக வாழும் வாழ்க்கையை மற்றொரு பகுதி சொல்லும். முற்பகுதிக்குக் களவென்றும், பிற் பகுதிக்குக் கற்பென்றும் பெயர் வைக்கிறார்கள்.

களவென்னும் பகுதி மிகவும் சுவை பொருந்திய காட்சிகளை உடையது. காதலன் காதலியைத் தேடிக் கொண்டு வருவதும், கட்டுக்காவலுக்குள் அடங்கி நிற்கும் காதலி அவனைக் குறித்த இடத்தில் குறித்த காலத்தில் சந்திக்க முடியாமல் அவதியுறுவதும், இருவர் உள்ளத்திலும் எழும் உணர்ச்சிகளும் கவிதையின் சுவையை மிகுவித்துச் சுவைமயமாக்குகின்றன.

*   *   *   *

தன் காதலன் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் குறிப் பிட்ட இடத்தில் வந்து நிற்கிறானென்பதைக் காதலி உணர்ந்தும் அவனைப் போய்ச் சந்திக்க முடியவில்லை. என்றால் அவள் மனம் என்ன பாடுபடும்! வேலை செய்ய ஓடுமா? தன் காதலன் தன்னைக் காணுமல் ஏமாந்து போவானே என்ற வருத்தம், அவனைச் சந்திக்க முடிய வில்லையே என்ற குறை, அவன் அங்கே நிற்பதை யாரேனும் கண்டுபிடித்துவிட்டால் என்செய்வது என்ற அச்சம் - எல்லாம் சேர்ந்து அவள் உள்ளத்தில் போராடு கின்றன.

நல்ல வேலையாக அவளோடு உயிருக்கு உயிராகப் பழகும் தோழி ஒருத்தி இருக்கிறாள். அவள்தான் அந்த இரண்டு காதலர்களுடைய தெய்வக் காதலும் படர்ந்து வளர உதவியாக இருப்பவள். காதலி தன்னுடைய உள்ளத்தில் பொங்கி எழும் உணர்ச்சிகளை அவளிடம் சொல்லுகிறாள். உள்ளத் துயரை வெளியிடுவதில்

ஓரளவு ஆறுதல் ஏற்படும் அல்லவா? தவிர, தலைவியின் உள்ளத்தில் ஏழு கடல்களும் புரண்டால்தான் என்ன? அவள் கருத்தை நாம் எப்படி உணரப் போகிறோம்? அந்த உணர்ச்சி வார்த்தைகளாக வந்தால்தானே கவிதைக்கு உரிய பொருளாகும்? காதலி தனியே பேசிக் கொண்டே இருந்தால் நாடகச் சுவை சிறவாதே. ஆகவே அவளைப் பேச வைப்பதற்கு அந்த உயிர்த் தோழி உபகாரமாக இருக்கிறாள். காதலன் காதலியருக்கு அத் தோழி வேண்டுமோ இல்லையோ, கவிஞனுக்கு அவள் அவசியமாகிறாள். காதலி தோழியிடம் தன் மனத் துயரை உரைப்பதும், தோழி ஆறுதல் கூறுவதும், காதலனிடம் தோழி தலைவியின் நிலையை எடுத்து உரைப்பதும் ஆகிய பேச்சு வகைகளினாலே, உணர்ச்சி யளவிலே நின்ற ஊமைக்காதல் கவிதைக்கு உரிய காதல் ஆகிவிடுகிறது.

* * * *

புலவர்களின் இலக்கியத்திலே காணப்படும் இந்தக் காதல் விசித்திரங்களை உலகத்திலும் பார்க்கலாம். காதலர்கள் மறைவாகக் காதல் புரிவதுதான் இயற் கைக்குப் பொருத்தமானது. ஆகவே உலக முழுவதும் களவுக் காதல் நடந்துகொண்டுதான் இருக்கிறது. உண்மை வாழ்க்கையின் ஓவியமாகிய நாடோடி இலக் கியம் இதற்குச் சாட்சி கூறுகிறது. முன்னே சொன்ன காதல் நிகழ்ச்சியை நாடோடிப் பாட்டிலும் பார்க் கிறோம்.

தன் காதலனை மாமன் என்று அழைப்பது நாட்டுப் புறத்துச் சம்பிரதாயம். காதலி வீட்டில் வேலை செய்து கொண்டிருக்கிறாள். அவளுடைய காதலன் அவளைச் சந்திப்பதற்காக வந்து அருகிலே உள்ள மாந்தோப்பிலே நிற்கிறான். வசந்த காலமும், இயற்கையெழில் குலுங்கும் மாந்தோப்பும் புலவன் கற்பிக்கும் கவிதைக்குத்தான்

சொந்தமென்று நினைக்காதீர்கள். நாடோடிக்கும் அவை சொந்தப் பொருள்களே.

தன் காதலன் வந்து நிற்பதை அவன் செய்யும் சங்கேத ஒலியால் காதலி உணர்ந்துகொள்கிறாள். அவள் உள்ளம் தவியாகத் தவிக்கிறது. ஒரே ஓட்டமாகப் போய் அவனைக் கட்டி அணைத்துக்கொள்ள வேண்டுமென்று ஆத்திரப்படுகிறது. வீடென்னும் சிறையில் இருக்கும் அவளுக்கு அவ்வளவு சுதந்தரம் ஏது? அவளால் போக முடியவில்லை. தன் காதலன் வருவானென்றும் அவனைப் போய்ச் சந்திக்கலாமென்றும் அவள் ஆவலோடு அலங்காரப் பொருள்களை வாங்கி வைத்திருக்கிறாள். தன் காதலனைச் சந்திக்கும்போது மடித்துக்கொடுக்க நல்ல வெற்றிலை வாங்கி வைத்திருக்கிறாள். அவனுக்குப் பொட்டிடச் சந்தனம் அரைத்து வைத்திருக்கிறாள். தன்னை அலங்கரித்துக் கொள்ளப் பூ வைத்திருக்கிறாள். அவளுக்கு அரளிப் பூத்தான் இருக்கிறது. அதைப் பிறர் அறியாமல் இறைவானத்திலே செருகி வைத்திருக்கிறாள். இவற்றை உபயோகப் படுத்தலாமென்றும் தன் காதலனை—மாமனை—மாந்தோப்பிலே சந்தித்து மகிழலாம் என்றும் அவள் கனவு காண்கிறாள். பாவம்! அவள் விருப்பம் நிறைவேறவில்லை. அப்பொழுதுதான் அவளுடைய தாய் உடனிருந்து ஏதோ வேலை செய்யும்படி சொல்லிக் கொண்டு இருக்கிறாள். வாசலிலே தகப்பனும் அண்ணன்மாரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். இவ்வளவு பேருக்கும் தெரியாமல் எப்படிப் போவது? முடியவில்லை.

ஒரு நாள் கழிந்தது. அவளுடைய ஆயுளில் ஒரு பாதி வியர்த்தமாகி விட்டதுபோன்ற துக்கம் அவளுக்கு ஏற்பட்டது. மறுநாளும் அவளுடைய காதலன் வருகிறான். அவனுடைய வாய் ஊதல்-அதை வீளை என்று பழந்தமிழர் சொல்வார்கள் - அவள் காதில்

இனிமையாக விழுகிறது. அவளை அழைக்கும் குறிப்பு ஒலி அது. இன்றும் காவல் அதிகமாக இருக்கிறது. அவள் உள்ளம் துடிக்கிறது; முகம் வாடுகிறது. உடம்பில் சோர்வு உண்டாகிறது. செய்கிற காரியத்திலே புத்தி போகவில்லை.

இந்த நிலையில் இங்கும் ஒரு தோழி — காதலியின் சிநேகிதக்காரி - வருகிறாள். காதலியின் தோற்றத்திலே புலப்பட்ட சோர்வு அவள் கண்ணை உறுத்துகிறது: ''ஏன் இப்படி இருக்கிறாய்?'' என்று அந்தரங்கமாகக் கேட்கிறாள்.

காதலி சொல்ல எண்ணுகிறாள். வார்த்தை வர வில்லை; அவளுக்குத் துக்கம் பொங்குகின்றது. முதல் நாள் வாங்கி வைத்த வெற்றிலை இன்று வாடிப்போயிற்று; அரைத்துவைத்த சந்தனம் உலர்ந்துபோயிற்று; இறை வானத்திலே செருகிவைத்த பூ, குருவி கொத்தியதால் அழகு குலைந்துவிட்டது. இந்தக் குறைகளைத்தான் வெளிப்படையாகச் சொல்லலாம் என்று நினைக்கிறாள். ஆனால் எல்லாவற்றிற்கும் சிகரமான குறையை அவள் தன்னை அறியாமலே கடைசியில் சேர்த்துச் சொல்லி விடுகிறாள்:

வாட வெத்தலை வதங்க வெத்தலை
வாய்க்கு நல்லால்லே
நேத்து வச்ச சந்தனப் பொட்டு
நெத்திக்கு நல்லால்லே
குருவி கொத்தின அரளிப் பூவு
கொண்டைக்கு நல்லால்லே
மாமன் வந்து தோப்பிலே நிக்குது
மனசுக்கு நல்லால்லே!

அவள் உள்ளத்தை வாடும் வெற்றிலை என்னலாமா? உலர்ந்த சந்தனம் என்னலாமா! குருவி கொத்தின மலர் என்னலாமா?——சே, சே! இந்த உபமானங்களெல்லாம் எங்கே! அவளது வாடிய உள்ளத்தின் நிலை எங்கே! அதைப் புலப்படுத்த எந்த மொழியிலும் வார்த்தைகள் இல்லை.

## 25

# கோமாளிப் பாட்டு

தமிழ் நாட்டு விதூஷகனுக்குக் கோமாளி என்று பெயர். மற்றவர்களுக்குச் சிரிப்பு உண்டாக்கும் வேஷம், ஆட்டம், பாட்டு, பேச்சு எல்லாம் அவனிடத்தில் குடி கொண்டிருக்கும். வெறும் விநோதத்துக்காகவே கோமாளி வேஷம் போட்டுக்கொண்டு ஆடுவது இந்த நாட்டு வழக்கம். "என்னடா கோமாளிக் கூத்தாக இருக்கிறதே!" என்று தமிழ்நாட்டு மக்கள் சொல்வது உண்டு; விசேஷப் பயன் இல்லாமல் விநோதம் உண்டாக்குவதையே முக்கிய நோக்கமாகக் கொண்ட காரியங்களை அப்படிச் சொல்வார்கள்.

கிராமங்களில் 'ராதா கல்யாண' உற்சவம் பஜனை மடங்களில் நடத்துவார்கள். அதில் கடைசி நாள் ஆஞ்சநேயர் வேஷம், கோமாளி வேஷம் எல்லாம் போட்டுக் கொள்வார்கள். மாரியம்மன் உற்சவம் முதலிய திரு விழாக்களில் பலவகையான வேஷங்களை போட்டுக் கொண்டு தொழிலாளிகளும் வேலைக்காரர்களும் செல்வர்களிடம் பணம் வாங்குவார்கள். அந்த வேஷங்களுள் கோமாளி வேஷமும் ஒன்று.

கோமாளியின் திருவுருவம் எப்படி இருக்கும் தெரியுமா? தலையிலே ஒரு கோணற் குல்லாய் கும்மாச்சியாக உயர்ந்து நுனியிலே வளைந்திருக்கும். பழுக்காக் காகிதத்தினால் அலங்காரம் செய்யப்பட்ட அந்தக் கிரீடத்தைப் புனைந்து கோமாளி வருவான். நெற்றியிலே திருநாமம், மீசை, தாடி நிரம்ப இருக்கும். நரைத்துப் போன தாடியும் மீசையும் உடையவனாகக் கோமாளிக்கு உருவம் கற்பித்திருக்கிறார்கள். அதனால் புளிச்சை

நாரைக்கொண்டு தாடியையும் மீசையையும் புனைந்து கொள்வான் கோமாளி வேஷக்காரன். அவனுக்கு விகாரமான பல் வேண்டும். சிறு சிறு சோழிகளை இரட்டை வரிசையாகக் கோத்து வாய்க்கு மேல் கட்டிக் கொள்வான். சதா பல்லை இளித்துக்கொண்டே இருப்பான் என்பது அதன் குறிப்பு. பிறரைச் சிரிக்க வைப்பதோடு தானும் கோமாளம் அடிக்கும் தொழில் உடையவன் அவன்.

கழுத்திலிருந்து ஒரு நீண்ட பையைத் தொங்கப் போட்டுக் கொள்வான். அதற்குள் எல்லாவிதமான பொருள்களும் இருக்கும். யார் என்ன கொடுத்தாலும் வாங்கி அதற்குள்ளே போட்டுக் கொள்வான். அவனுடைய வயிறு பெரிதாக இருக்கும். தொந்தி வயிறு என்று காட்டுவதற்குத் துணியை வைத்துக் கட்டிக் கொண்டிருப்பான். கோமாளிக்கு வயிறு பெரிது, பெருந் தீனிக்காரன் என்று கற்பனை செய்திருக்கிறார்கள். பெருந்தீனியும் தொந்தியும் உடைய விநாயகக் கடவுளைக் கூடக் கோமாளிக்கு இனமாகச் சொல்லிவிடலாம். அவருக்கு விகட விநாயகர் என்பதே ஒரு பெயர்.

யாரேனும் கர்ப்பமாக இருந்தால் கிராமத்தில் உள்ளவர்கள், ''கோமாளி வேஷம்!'' என்று குறிப்பாகவும் வேடிக்கையாகவும் அதைப் புலப்படுத்துவார்கள். கோமாளியின் வயிறு பெரிது என்பதை இந்த வழக்கும் புலப்படுத்தும்.

காலிலே சலங்கை கட்டிக்கொண்டு ஆட்டம் போடுவான், தமிழ் நாட்டு விதூஷகனாகிய கோமாளி. அவன் நடக்கிற நடையிலேயே கோணல் இருக்கும். இடி இடியென்று சிரிப்பதும், பைத்தியக்காரனைப்போல நடிப்பதும், வேடிக்கையான பாடல்களைப் பாடிக் குதிப்பதும் அவனுடைய விளையாடல்கள்.

அவன் பாடும் பாடல்களாக அங்கங்கே வழங்குவன பல உண்டு. அந்தப் பாட்டின் வார்த்தைகளிலும், அர்த்தத்திலும் நகைச்சுவை இருக்கும். குழந்தைகள் அந்தப் பாடல்களைப் பாடிக்கொண்டு குதூகலத்தோடு கூத்தாடுவார்கள்.

ஒரு கோமாளிப் பாடலைக் கவனிப்போம்:

திருப்பதிக்குப் போயி வந்தேன் நாராயுணு - நான்
திருமொட்டை அடித்து வந்தேன் நாராயுணு
அங்கே ஒரு சோளக் கொல்லை நாராயுணு - நான்
அதிலே ஒரு கதிர் ஒடிச்சேன் நாராயுணு
கொல்லைக்காரன் கண்டுக்கிட்டான் நாராயுணு - என்னைக்
கோலைக்கொண்டு அடிச்சுப்போட்டான் நாராயுணு.

திருப்பதிக்கு போனானும்! திருமொட்டை அடித்துக் கொண்டானும்! திருட்டு வேலை செய்து அடி பட்டானும்! 'திருமொட்டை' என்றும் 'நாராயுணு' என்றும் அவன் சொல்வதிலே கூட வேடிக்கை இருக்கிறது.

காலையிலே எழுந்திருந்து நாராயுணு - நான்
காலு கையைக் கழுவிக்கிட்டு நாராயுணு
பட்டை நாமம் இட்டுக்கிட்டு நாராயுணு - நான்
பழைய சோத்தைத் தின்னுப்புட்டு நாராயுணு
பூக்குடலை எடுத்துக்கிட்டு நாராயுணு - நான்
பூப்பறிக்கப் போகையிலே நாராயுணு
தோட்டக்காரன் கண்டுக்கிட்டு நாராயுணு - என்னைத்
தொப்புத் தொப்புனு போட்டடிச்சான் நாராயுணு!

வாழ்க்கையில் இத்தகைய கோமாளிகளும் இவர்களால் உண்டாகும் வேடிக்கை விநோதமும் இல்லாவிட்டால் மனிதனுக்கு மகிழ்ச்சி எவ்வளவோ பங்கு குறைந்து போகும்.

---

இக் கட்டுரையில் வரும் இரண்டு பாடல்களையும் உதவியவர் வித்துவான் ஸ்ரீ தே. வீரராகவன் அவர்கள்.

# 26

## மலரும் உள்ளமும்

**கா**தல் நிரம்பிய உள்ளத்திலே, தான் செய்யும் எல்லாக் காரியங்களும் தன் காதலைப் பெற்றவர்களுக்கு உபகாரமாக இருக்க வேண்டுமென்ற எண்ணமே எழுகிறது. காதலன் தன் காதலியின் நன்மையையும் அவள் உள்ளம் களித்து இன்புற வேண்டும் என்பதையுமே கருதி முயற்சிகளை மேற்கொள்கிறான். அவளோ தான் செய்யும் காரியங்கள் எல்லாவற்றிற்கும் தன் காதலனது நன்மையை இலக்காகக் கொண்டிருக்கிறாள். அவள் தன்னை அழகு செய்து கொள்வதுகூடத் தனக்காக அல்ல; பிறர் கண்டு பாராட்டவேண்டும் என்பதற்காகவும் அல்ல; தன் இயற்கை அழகெல்லாம் யாருக்குரியதோ அந்த உயிர்க் காதலன் கண்டு களித்து இன்புறவேண்டும் என்பதற்காகவே அவள் தன்னை அலங்கரித்துக்கொள்கிறாள்; ஆடை உடுத்துக் கொள்கிறாள்; அணியும் அணிகிறாள். எல்லாம் அவன் திருப்தியை நினைந்துதான்.

மாலைக் காலத்தில்தான் மனிதன் ஓய்வு பெறுகிறான். செய்கின்ற தொழிலில் ஈடுபட்டுப் பகல் முழுதும் உழைத்து விட்டு 'அப்பாடி!' என்று வீட்டுக்குச் செல்கிறான். அங்கே வீட்டுத் தெய்வமாகிய மனைவி அலங்காரம் செய்துகொண்டு இன்முகமும் புன்னகையும் பூத்து அவனை வரவேற்கிறாள். அப்பொழுது அவனுக்கு எத்தனை மகிழ்ச்சி உண்டாகிறது! உழைப்பினால் ஏற்பட்ட சிரமம் அவ்வளவும் மறந்து போகிறது. எல்லாம் அந்தப் புன்னகையின் மோகனத் தன்மையினால்.

அவளும் அவனது வருகையினாலே அடையும் இன்பம் சொல்லத் தரமா? காலையில் உணவு உண்டு வேலைக்குப்

போனவன், மாலையிலே களைத்துப்போய் வருகிறானே, அவனுக்கு இன்முகம் காட்டி ஆறுதல் செய்யவேண்டும் என்று எண்ணி அவள் அவனை வரவேற்பதில்லை. சூரியன் வருவதும் தாமரை மலர்வதும் இயற்கை நியதி. அது போல அவன் வரவே, அவள் முகம் மலர்கிறாள். அவன் இல்லாத வீட்டிலே அவளுக்கு வேலை இருக்கிறது; வீட்டைப் பாதுகாக்கும் வேலை இருக்கிறது. அவன் இருக்கும்பொழுதோ இன்பம் இருக்கிறது. அவன் தனக்கு அருகிலே இருக்கிறான் என்ற நினைப்பு ஒன்றே அவளுக்கு எத்தனையோ உற்சாகத்தைக் கொடுக்கிறது.

அவன் வருவான் என்று எண்ணி அதற்குள் காபி போட்டு வைக்கிறாள்; பலகாரம் செய்து வைக்கிறாள். தலைவாரிப் பின்னிக்கொள்கிறாள். முகத்தைக் கழுவிப் பொட்டிட்டு மையிட்டுக் கொள்கிறாள். மாலைக்காலத்தில் களைப்புடன் வரும் காதலனுக்குமுன் புதுமலர்ச்சி பெற்ற மலரைப்போல நிற்பதற்குத் தயாராகிறாள்.

மல்லிகைப்பூ மாலையில் வீதியிலே வருகிறது. வாங்கி வைக்கிறாள். ரோஜாப்பூ வாங்கி வைக்கிறாள். அவன் வந்தவுடனே அந்தப் பூவைச் சூட்டிக்கொள்ளவேண்டும் என்று அவற்றை வைத்திருக்கிறாள்.

அவள் முகமலர்ச்சிக்கும் மனமலர்ச்சிக்கும் சூட்டிக் கொள்ளும் புது மலர் சோபையைக் கொடுக்கிறது. காதலன் ஆசையோடு அந்த அழகுப் பிழம்பைக் கண்ணால் நுகர்ந்து களைப்புத் தீர்கிறான்; சிற்றுண்டி அருந்திப் பசியுந் தீர்கிறான்.

* * * *

தினந்தோறும் இவ்வாறு புதுமை யழகிலே ஒளிரும் மடமங்கையும் அதைக்கண்டு புத்துணர்ச்சி பெறும் காதலனும் ஒவ்வொரு நாளும் தம் வாழ்க்கையைப் புதுக்கிக் கொள்கிறார்கள்.

இந்த நெறியிலே சென்றுகொண்டிருந்த துணைவர்களின் வாழ்வில் இடையே சிறு பிரிவு நேர்கிறது. காதலன் ஏதோ காரியமாக வெளியூருக்குச் செல்கிறான். சிலநாட்கள் தங்கிவிட்டு வரவேண்டிய வேலை இருக்கிறது. போய் அடிக்கடி கடிதம் எழுதுகிறான்.

அவன் பிரிந்திருக்கும் நாட்களிலே அவள் சுத்தத்தை உத்தேசித்து நீராடினாள்; முகம் கழுவிக் கொண்டாள். தலையை ஒருவாறு கோதி முடித்துக் கொண்டாள். வழக்கம்போல் அலங்காரம் செய்து கொள்ளவில்லை. மலர் வாங்கி வைத்துக்கொள்ளவில்லை. ஆபரணங்களைப் புனைந்து கொள்ளவில்லை. அவன் கண்களுக்கு விருந்து செய்வதற்காக ஏற்பட்டவை அவை. அவன்தான் இல்லையே! இந்த அலங்காரங்கள் யாருக்காக? இது மட்டுமா? நாவிற்கு ருசியான சமையலை, விதவிதமான உணவுகளை, சமைக்கத் தெரிந்தவள் அவள்; அவனுடைய ருசி தெரிந்து சமைத்து உண்பிப்பவள். அவன் ஊரில் இல்லாவிட்டால் வழக்கப்படி சமைத்து அவள் உண்பதுதானே? அதுதான் இல்லை. ஏதோ வற்றல் குழம்பு செய்து வெறுஞ் சோற்றை வடித்து வயிற்றை நிரப்பிக் கொள்கிறாள். அவன் இல்லாதபோது அறுசுவை உண்டியாக இருந்தாலும் அவளுக்கு ருசிக்காது.

* * * *

அவன் ஒரு நாளைக் குறிப்பிட்டு அன்று மாலை வருவதாகக் கடிதம் எழுதியிருக்கிறான். அவளுக்கு உண்டான குதூகலம் வருணித்து முடிவதா, என்ன? வீட்டைப் புதுமுறையில் அலங்கரித்தாள்; தூசு தும்பையெல்லாம் தட்டினாள். புது மணவாளப் பிள்ளையை வரவேற்பதைப் போன்ற ஏற்பாடுகளெல்லாம் செய்தாள். கடிதம் வந்ததுமுதல் அவளுக்கு ஒரு நிமிஷம் கழிவது யுகமாக இருந்தது. எப்பொழுது மாலை வரும் என்று ஏங்கிக் காத்துக் கிடந்தாள்.

மாலை வந்தது. தன்னை என்றும் இல்லாதபடி அலங்கரித்துக் கொண்டாள். மல்லிகைப் பூவும், ரோஜாப் பூவும் நிறைய வாங்கித் தொடுத்து வைத்தாள். இன்று அவன் கையாலேயே அந்த மலரைச் சூட்டிக் கொள்ளவேண்டும் என்ற ஆவல் அவள் உள்ளத்தே தீவிரமாக உண்டாயிற்று.

மாலை வந்தது. மலர் வந்தது. தென்றல் வந்தது. உலகம் முழுவதும் தண்ணென்ற உணர்ச்சி பரவியது. அவளும் தன் ஆருயிர்க் காதலனை எதிர்பார்த்து வாசலுக்கும் உள்ளுக்குமாகப் போய்ப் போய் வருகிறாள். வானத்தைப் பார்க்கிறாள். செக்கர்வானம் மறைந்து வெண்ணிலவு வெள்ளம் பெருகத் தொடங்கிவிட்டது. வானுலகம் முழுவதும் ஒரேயடியாக மல்லிகை மலர் பூத்ததுபோல உடுக்கள் குபீரென்று தோன்றிப் பளிச்சிடுகின்றன. அவள் உள்ளே வைத்திருக்கும் மல்லிகை மலர் அவள் கருங்குழலிலே புகுந்து பளிச்சிட இன்னும் நேரம் வரவில்லை.

என்ன இது! நேரம் ஆகிக்கொண்டிருக்கிறது; காதலன் வரவில்லையே! இருட்டிவிட்டது. அவள் உள்ளத்திலும் இருள் புகுந்தது. அவள் வதனம் வாடத் தொடங்கியது. உள்ளே சென்று படுக்கையில் தொப்பென்று விழுகிறாள். உணவு கொள்ளவில்லை. எதிரே செப்பில் மல்லிகை அவளைக் கண்டு சிரிக்கிறது. ரோஜாப்பூ தன்னைப் பயன்படுத்திக்கொள்ளவில்லையே என்று சிவக்கிறது.

அவளுக்குத் தூக்கம் வருமா? மனம் வாடி உடல் சோர்ந்து கண்ணீர் வார அவள் படுத்திருக்கிறாள். மல்லிகையும் ரோஜாவும் மெல்ல மெல்ல வாடுகின்றன. அவள் அவற்றிலே கண்ணைச் செலுத்துகிறாள்; உள்ளங் குமுறி வருகிறது, பாட்டு:

மன்னன் வருவா ரென்று
　　மல்லிகைப்பூ வாங்கி வைத்தேன்
மன்னன் வரவில்லையே!
　　மல்லிகைப்பூ வாடிப்போச்சே!
ராஜா வருவா ரென்று
　　ரோஜாப்பூ வாங்கி வைத்தேன்
ராஜா வரவில்லையே!
　　ரோஜாப்பூ வாடிப் போச்சே!

*மலர் வாடிற்று? அல்லது அவளது மெல்லிய பெண்ணுள்ளமாகிய மலர் வாடிற்று? இரண்டுமே வாடிவிட்டன.*

# 27

## அடிபட்ட நாய்

பிறருக்குத் தெரியும்படி அவமானம் அடைவது மனிதர்கள் பொறுக்கத் தகாத நிகழ்ச்சி. அவமானம் அடைவதனால் வரும் கோபம் ஒரு பங்கு; அதை மற்ற வர்கள் உணர்ந்து விட்டார்களே என்ற ஆத்திரமோ பத்துப் பங்கு.

ஒருவன் தடுக்கி விழுந்து காயம்பட்டுக் கொள்கிறான். அவன் உடம்பில் பட்ட காயத்தால் அவனுக்கு ஓரளவு வேதனை இருக்கத்தான் இருக்கும். ஆனால் அவன் அதைப் பெரிதாக நினைப்பதில்லை. அவன் விழும்போது பார்த்துவிட்டுச் சிரிக்கிறார்களே, அவர்கள் சிரிப்பினால் உண்டாகும் மனப் புண்தான் அதிக வேதனையை உண் டாக்குகிறது. பல்லைக் கடித்துக்கொள்கிறான். அப்படியே அவர்களை நசுக்கிவிடலாமா என்று ஆத்திரம் ஆத்திர மாக வருகிறது அவனுக்கு. சிரித்தவர்கள் குழந்தை களாக இருந்துவிட்டாலோ பளீர் பளீரென்று கன்னத்தில் அறைந்தே விடுகிறான்.

அவன் விழுந்ததற்கு அவர்கள் காரணமென்று கோபித்துக்கொண்டா அப்படிச் செய்கிறான்? இல்லை, இல்லை. அவன் விழுந்ததை விளம்பரப்படுத்துபவர் களாக அவர்கள் இருக்கிறார்களே என்பதுதான் அவனுடைய ஆத்திரத்திற்குக் காரணம்.

இந்த மான உணர்ச்சி சிறு வயசு முதற்கொண்டே மனிதஜாதியிடம் ஏற்பட்டு வளர்ந்து வருகிறது. பிறர் தன்னை அழுகு காட்டும்போது குழந்தைக்கு அழுகையும் கோபமும் வருவதை நாம் பார்க்கவில்லையா?

மனிதர்பால் உள்ள குறைகளைக் கிண்டல் பண்ணு வதற்கு மிருகங்களின்மேல் அக்குறைகளை ஏற்றி உருவகமாகச் சொல்வது ஒரு சம்பிரதாயம். மேல் நாட்டினரும் இந்த உருவகக் கதைகளை விரும்புகிறார்கள். ஈஸாப் என்பவர் எழுதியுள்ள உருவகக் கதைகளெல்லாம் மனிதருடைய இயல்புகளை மிருகங்களின்மேல் ஏற்றிச் சொன்ன கதைகளே. நம் நாட்டுப் பஞ்ச தந்திரக் கதைகளும் அந்த இனத்தைச் சார்ந்தனவே.

தமிழ் இலக்கியங்களிலும் கருத்தை வெளிப்படையாகச் சொல்லாமல் உவமையாகவுள்ள ஒரு பொருளின் மேல் ஏற்றி மறைபொருளாகச் சொல்லும் வகை ஒன்று உண்டு.

ஒரு கணவன் தன் மனைவியைத் துறந்து இரவில் வேசி வீட்டுக்குப் போய்த் தங்கிவிட்டு விடியற்காலையில் தன் வீட்டை நோக்கி வருகிறான். அவன் மனைவியின் தோழி அவன் வருகையைத் தன் தோழியாகிய வீட்டுக்காரிக்குத் தெரிவிப்பாள். வெளிப்படையாகத் தெரிவிக்க மாட்டாள். குறிப்பாகப் புலப்படுத்துவாள். ''எருமை மாடு தாமரைப் பொய்கையைக் கலக்கி நீலோற்பல மலரை உண்டுவிட்டு வைக்கோற்போரைக் கொம்பினால் கிண்டி, வைக்கோல் அக்கொம்பிலே இருக்க, மெல்ல வருகிறது'' என்பதுபோலச் சொல்லுவாள். 'வீட்டுக்காரன், நல்ல மனைவியின் உள்ளத்தைக் கலங்கச் செய்து, தாழ்ந்த மகளிரோடு இன்புற்று, தான் செய்த அடாத செயல் புறத்தே தோற்றும்படியான சந்தனம் முதலிய அடையாளங்களுடன் வருகிறான்' என்று அதற்கு அர்த்தம் கொள்ளவேண்டும். இந்த அர்த்தத்தை மறைத்து உபமானத்தால் சொல்வதை உள்ளுறையுவமம் என்று இலக்கணம் சொல்கிறது.

மனித உலக உணர்ச்சிகளையும் நிகழ்ச்சிகளையும் பிறபொருள்களின்மேல் ஏற்றிச் சொல்லும் முறையை

நாடோடிப் பாவலனும் உணர்ந்திருக்கிறான். தான்பட்ட அவமானத்தைப் பிறர் காணக்கூடாது என்று எண்ணும் மனித சாதியின் எண்ணத்தை ஒரு நாயின் மேல் வைத்து அவன் பாடுகிறான்.

*  *  *  *

ஆண் நாய் ஒன்று மிகவும் சாமர்த்தியமாகத் திறந்து கிடக்கும் வீடுகளில் நுழைந்து ஆட்களின் கண்ணில் படாமல் அங்குள்ள உணவு வகைகளைப் பாத்திரத்தோடு தூக்கிக்கொண்டு வந்துவிடும். அதனுடைய மனைவியாகிய பெண்நாய் அந்த உணவை ஆசையோடு வாங்கித் தன் கணவனைப் பாராட்டும். இரண்டும் சேர்ந்து உண்டு இன்புறும்.

கூழ் சமைத்த பானையானாலும் சரி, சோறுசமைத்த பெரிய பானையானாலும் சரி, ஜாக்கிரதையாகக் கௌவிக்கொண்டுவரும் அந்த நாயரசு, ஒரு நாள் முகத்திலும் கன்னத்திலும் அடிபட்டு இரத்தம் ஒழுக ஓடிவந்தது. அந்தக் காட்சியைக் கண்டு பெண் நாய் உடல் நடுங்கி உள்ளம் வெதும்பியது. 'இவ்வளவு நாளும் மிகவும் தந்திரமாகப் பானைகளைக் கௌவி வரும் இவரை யார் அடித்திருப்பார்கள்? இவரை அடிக்கும் திறனுடையவரும் இருக்கிறாரா?' என்று நினைத்தது பெண் நாய். தன் கணவன், சௌரியத்துக்குத் தலைவரம்பு என்பது அதன் நினைவு. ஆகையால் அதன் முகத்தில் உள்ள காயங்களைக் காணும்போது, அந்த அக்கிரமச் செயலைச் செய்தவர் யாரென்று தெரிந்து கொள்ளத் துடிக்கும் உள்ளத்தோடு பெண் நாய் கேட்கிறது.

> கூழ்ப்பானை திருடிவரும்
> கொற்றவரே, உம்மை யார் அடிச்சார்?
> மாப்பானை திருடிவரும்
> மன்னவரே, உம்மை யார் அடிச்சார்?

ஆண் நாய்க்கு அவமானம் தாங்க முடியவில்லை. தான் பட்ட அடியைப்பற்றிப் பேசுவதற்கே அதற்கு வெறுப்பாக இருக்கிறது. ஆனாலும் காயம் பலமாகத் தான் பட்டிருக்கிறது. காய்ச்சி ஒற்றினால் வலிக்கு இதமாக இருக்கும். அதைச் செய்யாமல் பெண் நாய் ஆத்திரத்தையல்லவா கிளப்புகிறது? இது மட்டுமா? ஏதோ அடிபட்டு விட்டது. மூன்றும் பேருக்குத் தெரியாமல் ஆண் நாய் ஓடி வந்திருக்கிறது. பெண் நாய், "யார் அடித்தார்? எதற்காக அடித்தார்? ஏன் போனாய்?" என்றெல்லாம் கேள்வி கேட்டுக்கொண்டிருந்தால் பக்கத்தில் வேறு யார் காதிலாவது விழுந்து விடுமே! 'பகலில் பக்கம் பார்த்துப் பேசு, ராத்திரி அதுவும் பேசாதே' என்று பழமொழி சொல்லுகிறதே! பெண் நாயின் குறுக்கு விசாரணை, தான் பட்ட அவமானத்தை விளம்பரப்படுத்திவிடுமென்று பயப்படுகிறது ஆண் நாய். "அந்த விசாரணை யெல்லாம் பின்னே வைத்துக் கொள்ளலாம்; இப்போது உடனே காய்ச்சி ஒற்று" என்று மெல்லச் சொல்லி வேண்டுகிறது:

> அடி - மெள்ளச் சொல்லடி
> பின்னே சொல்லடி
> காய்ச்சி ஒற்றடி கன்னத்திலே.

பெண் நாய் தன் கணவனது சாமர்த்தியத்தை நினைத்துப் பார்க்கிறது. மிகவும் ஜாக்கிரதையாக ஒதுங்கிப் பதுங்கித் திருடிவரும் அதன் இயல்பு பெண் நாய்க்கு நன்றாகத் தெரியும். எச்சில் இலை விழுந்தாற்கூட எட்டி எட்டிப் பார்த்துத் தனக்கு அபாயம் இல்லை என்று தெரிந்தால்தான் ஆண் நாய் அங்கே போகும். கல் எடுத்து யாராவது போடுவது தெரிந்தால் காதவழி தூரம் காற்றாய்ப் பறந்துவிடும்! இந்த ஆற்றல்களை யெல்லாம் எடுத்துச் சொல்லிப் பெண் நாய் இரங்குகிறது:

எச்சில் இலை போட்டக்கால்
எட்டி எட்டிப் பார்ப்பீரே,
கல்லெடுத்துப் போட்டக்கால்
காதவழி போவீரே!

"இதற்கெல்லாம் இப்பொழுது என்ன அவசரம்?" என்று எரிச்சல் எரிச்சலாக வருகிறது அடிபட்ட ஆண் நாய்க்கு. மீண்டும் கெஞ்சிக் கேட்டுக் கொள்வதுபோலச் சொல்கிறது:

அடி - மெள்ளச் சொல்லடி
பின்னே சொல்லடி
காய்ச்சி ஒற்றடி
கன்னத்திலே !

'பிறர் காதில் இந்த அவமானச் செய்தி விழுந்து விடப் போகிறதே' என்ற அதன் நினைவிலே நாயையா நாம் பார்க்கிறோம்? இல்லை, இல்லை; மனிதர்களைத்தான் காண்கிறோம்; அடிபட்ட நாயைப்போல் அவமானப் பட்ட மனிதர்களின் பேச்சைத்தான் கேட்கிறோம்.

---

இதிலுள்ள பாடல்களை எனக்கு உதவியவர் வித்துவான் ஸ்ரீ த. ரா. சேதுபதி.

# 28

## கள்ளக் காதல்

"கூட்டமுகி ஜாரனிடம் காதலது போலே" என்று கோபால கிருஷ்ண பாரதியார் பாடுகிறார். இறைவனிடத்தில் இடையறாத பக்தி இருக்கவேண்டும் என்பதற்கு உவமையாக, கட்டழகி ஒருத்தி தன் கள்ளக் காதலனிடத்தில் கொள்ளும் காதலைச் சொல்லுகிறார். பரபுருஷனிடத்தில் காதல் பூண்டு இன்புற்றுச் சொந்தப் புருஷனிடம் தன் கெட்ட ஒழுக்கத்தை மறைக்கும் இந்த நாடகத்தை வேதாந்த சித்தாந்த நூல்கள்கூட உபமானமாகச் சொல்கின்றன.

கணவனை ஏமாற்றி வேறு ஆடவனிடம் இன்பம் துய்க்கும் இந்த நட்பு, தர்ம சாஸ்திரங்களால் கண்டிக்கப்படுகிறது. ஆனால் என்ன? உலகத்தில் இது எக்காலத்தும் இருந்து கொண்டே இருக்கிறது. நாடோடியாக வழங்கும் கதைகளில் இத்தகைய நட்பைப் 'பச்சை பச்சையாக'ச் சொல்பவை பல. விக்கிரமாதித்தன் கதையும் அதற்கு இனமாகிய அரபிக் கதைகள் முதலிய உலகத்துக் கதைகளும் இத்தகைய கள்ள நட்பை எவ்வளவு சுவாரசியமாக வருணிக்கின்றன!

கற்புடைய மகளிருக்குப் பெருமை உண்டாவது இத்தகைய ஒழுக்கமுடைய பெண்களாலேதான். கற்பைக் காத்து நிற்கும் மகளிரைத் தெய்வமாக வழிபடுவதற்குக் காரணம் அங்ஙனம் நிற்கும் நிலை அரிதாக இருத்தல்தான்.

நாடோடி இலக்கியத்தில் கள்ளக் காதலருடைய நாடகங்கள் பல உண்டு. விசித்திரமான நிகழ்ச்சி

களினிடையே காதலனையும் காதலியையும் பார்க்கலாம். சில காட்சிகள் வருமாறு:

* * * *

ஒரு பெண் நெல்லுக் குத்துகிறாள். அவள் கணவன் வேலையாக வெளியில் போயிருக்கிறான். வீட்டுக்குப் புறத்திலே மரத்தடியில் ஒரு பாறைக்குழியே உரலாக அவள் நெல்லைக் குத்துகிறாள். அன்று அந்த வேளையிலே அவளுடைய கள்ளக் காதலன் வருவதாகச் சொல்லியிருந்தான். அவனை எதிர்பார்த்து அவள் குத்திக்கொண்டிருக்கிறாள்.

அவன் வந்துவிட்டான். அவளுடைய உணர்ச்சி பொங்கிப் பெருக்கெடுத்து ஓடுகிறது. அவனோடு இன்பமாகப் பேசி அளவளாவுகிறாள். பிறகு அவன் விடை பெற்றுக்கொண்டு போகிறான். அவள் மனம் அவனது பிரிவினால் ஊசலாடுகிறது. அவள் அவனை நிமிர்ந்து பார்த்துக்கொண்டே நிற்கிறாள். உலக்கை தடுமாறுகிறது. அவன் போய்க்கொண்டே இருந்தவன், திடீரென்று நின்று ஏதோ சொல்கிறான். அவன் முகத்தில் பயத்தின் அறிகுறி தோன்றுகிறது. அதைச் சொல்லிவிட்டு அவன் விரைவாகப் போய்விடுகிறான். அவன் என்ன சொன்னான்?

அவன் விடை பெற்றுச் சென்றபோது எதிர்ப் பக்கத்திலிருந்து அந்தப் பெண்ணின் கணவன் வந்து விட்டான். அவன் நெடுந்தூரத்தில் வருவதைக் கள்ளக் காதலன் கவனித்தான். அந்தப் பெண்ணோ இந்த உலகத்தையே மறந்து கள்ளக் காதலன் போகும் கோலத்திலே கண்ணையும் கருத்தையும் பதிய வைத்திருந்தாள். பின்னால் தன் கணவன் வருவதை அவள் கவனிக்கவில்லை. அவன் அவளை அணுகி உண்மை தெரிந்துகொண்டால்—? இந்த அச்சத்தால் முன்னே செல்லும் கள்ளக் காதலன் அவளை எச்சரிக்கிறான்.

நெல்லுக் குத்தற பெண்ணே
சும்மா பாக்கிறே என்னே — உன்
புருசன் வாரான் பின்னே — நீ
புடைச்சுப் போடடி கண்ணே !
ஆஹாங்.........ஊஹூங் !

இந்தப் பாட்டு இப்போது நெல்லுக் குத்துகிற பாட்டாக வழங்குகிறது.

* * * *

இரவில் தன் கணவனுக்கு உணவு பரிமாறும் சமயத்தில் சோர நாயகனைச் சந்திப்பது ஒருத்திக்கு வழக்கம். கணவன் உண்டுகொண்டிருப்பான். அப்போது சோர நாயகன் புறக்கடைப் பக்கத்தில் வந்து தான் கொண்டுவந்த மணியை ஆட்டித் தன் வரவைக் குறிப்பிப்பான். அவள், "ஐயையோ! மாடுவந்து கீரைப் பாத்தியை அழித்துவிடுமே!" என்று ஓடுவாள். அவள் வரும் வரைக்கும் கணவன் பாதி உண்ட நிலையில் உட்கார்ந்திருப்பான். அவளோ சோர நாயகனைக் கண்டு அளவளாவிவிட்டு வந்து, மாடுகளை ஓட்டிவிட்டு வந்ததாகச் சொல்லுவாள். பாதி சாப்பிடும்போது கணவன் எழுந்து வரமாட்டானென்பது அவள் நம்பிக்கை.

இரண்டு நாளைக்கு ஒரு தடவை, மூன்று நாளைக்கு ஒரு தடவை இப்படியே நடந்துகொண்டு வந்தது. கணவன் எவ்வளவுதான் முட்டாளாக இருந்தாலும் அடுத்தடுத்து இப்படி நடக்கிறதே என்று யோசிக்க மாட்டானா? யோசித்தான். சிறிது சந்தேகம் தட்டியது. அதை நிவர்த்தி செய்துகொள்ள எண்ணினான்.

அன்று வழக்கம்போல் அவள் இலையில் சோற்றைப் போட்டுக் குழம்பையும் ஊற்றி முடித்தாளோ இல்லையோ, கொல்லைப்புறத்தில் மணியொலி கேட்டது.

உடனே அவள் மாட்டை ஓட்டும் சாக்கைச் சொல்லிப் புறப்படத் தொடங்கினாள். அவள் கணவன் அன்று விழித்துக் கொண்டவனாயிற்றே! "இந்தா, நீ போக வேண்டாம். இந்த மாடுகள் இப்படி அடிக்கடி வந்து தொந்தரவு படுத்துவதைச் சகிக்க முடியாது. நீ போய் விரட்டினால் இப்படித்தான் வரும். அவைகளுக்குத் தகுந்தபடி சூடு கொடுத்தால்தான் சரிப்படும். காலை ஒடித்துப் போட்டால் இந்தப் பக்கமே வராது" என்று சொல்லி அருகில் இருந்த ஒரு பெரிய தடியை எடுத்துக் கொண்டு அவன் புறப்பட்டான்.

இதை அவள் எதிர்பார்க்கவில்லை. இடி விழுந்தது போலாயிற்று. ஆனாலும் அவளுடைய புத்தி அதி சீக்கிரத்தில் ஒரு தந்திரத்தைக் கண்டு பிடித்தது. குழந்தை தூளியில் தூங்கிக்கொண் டிருந்தது. வேகமாக அதனருகே சென்று நறுக்கென்று கிள்ளிவிட்டாள். அது சிணுங்கத் தொடங்கியது. உடனே அவள் தூளியை ஆட்டிக்கொண்டே பின் வரும் தாலாட்டை வாய்விட்டுக் கொல்லைப்புறம் வரையில் கேட்கும்படி பாடத் தொடங்கினாள்.

"தண்டெடுத்தார் தடிஎடுத்தார் தாமே புறப்பட்டார்
மணிகட்டி மாடுகளா! நாக்கைப் பிடித்து ஓடுங்கள்!"

இது குழந்தையை எண்ணிப் பாடிய தாலாட்டா? தன் கள்ளக் காதலனை எச்சரிக்கும் எச்சரிக்கை அல்லவா?

* * * *

சொந்தக் கணவன் ஊரில் இல்லை. அவன் வரச் சில நாட்கள் ஆகும் என்று எண்ணிய மங்கை தன் கள்ள நாயகனுக்கு இவ்விஷயத்தைத் தெரிவித்தாள். அவன் வந்துவிட்டான். வீட்டில் வேறு யாரும் இல்லை. வந்த

ஆண்பிள்ளை தன் மனம் போனபடி இருக்கலாம். அவனும் அவளும் உல்லாசமாகப் பேசிக் கொட்டம் அடிக்கிறார்கள். அவனுக்குப் பசி உண்டோ இல்லையோ? அவள் கையாலே ஏதாவது வாங்கி உண்ணவேண்டுமென்று ஆசை; கேட்கிறான்;

"வங்கார வடிமூத்துப் பொம்பளே—கொஞ்சம்
வடிச்ச கஞ்சி கிடிச்ச கஞ்சி இல்லையோ?"

கஞ்சியா? தன் உயிரைப் போன்ற அருமைக் காதலனுக்குக் கஞ்சியா கொடுப்பது? என்ன அருமையான சமயம் வாய்த்திருக்கிறது? அவனுக்கு விருந்தல்லவா சமைத்துப்போட வேண்டும்? இதை முன்பே யோசித்து அவள் விருந்து செய்து வைத்திருக்க வேண்டாமா? அவள் அவன் வரப்போகிறான் என்ற மயக்கத்திலே எல்லாவற்றையும் மறந்திருந்தாள். அவன் கஞ்சி கேட்ட போதுதான் தான் தவறு செய்ததாக எண்ணினாள். அவள் இரக்கத்தோடு சொல்கிறாள்:

"அப்பவே சொன்னையோ ஆம்பளே—கொஞ்சம்
சம்பா அரிசி போட்டுச் சமைப்பனே!"

சம்பா அரிசிச் சோறு உயர்ந்ததல்லவா? அதைத் தான் அவனுக்குச் சமைத்துப் போடவேண்டும். இனி அவள் சும்மா இருப்பாளா?

சமைத்துக் கிமைத்துமே வச்சாளாம்— பயல்
சம்மணம் போட்டுக்கிட்டு உண்பானும்!

சம்பா அரிசியை அவன் எங்கே பார்த்திருக்கப் போகிறான்? சம்மணம் போட்டு ஆற அமர உண்ணத் தொடங்கினான். சோறு மட்டும் சம்பாச் சோறாக இருந்தால் போதுமா? அதற்கு வேண்டிய மற்ற இனம் வேண்டாமா?

தேனிலே இருநாழி வார்த்தாளம்—தினே
மாவிலே இம்புட்டு வச்சாளாம்
பாலிலே இருநாழி வார்த்தாளாம்—பழஞ்
சோத்திலே இம்புட்டு வச்சாளாம்.

*வயிறு வெடிக்கத் தின்னும் விருந்து! அவன் தேனையும் பாலையும் கண்டவனு? அவனுக்குப் பிடிக்குமென்றுதான் அவள் சம்பாச் சோறு, தேன், தினைமா, பால் இவ்வளவுக்கும் இடையிலே பழஞ் சோற்றையும் வைத்தாள். தேனும் பாலும் இருந்தாலும் பழஞ்சோறு இல்லாவிட்டால் அவன் பசி ஆருது. இவ்வளவு இருந்தும் அவன் ஒரு குறை காணுகிருன். தேனின் சுவை அவனுக்குத் தெரியவில்லை. ''கருப்பட்டி இல்லையே!'' என்று கேட்கிருன். வேறு எதையோ கேட்கிருன்.*

''அடி இத்தனையும் வச்சயே பொம்பளே—கொஞ்சம்
கடிச்சுக்கக் கருப்பட்டி இல்லையோ?''

*அவன் கேட்ட பொருள்கள் கிடைக்கும்படி இல்லை. அவள் பதில் சொல்கிருள்:*

''கருப்பட்டிப் பானே கனம் போட்டுத் தொங்குது
கண்டங் கருவாடு சுரையிலே.''

*இப்படி அவள் சொல்லிக்கொண் டிருக்கும்போது,*

''கண்டங் கருவாடு சுரையிலே—அவள்
கொண்ட கணவனும் வந்திட்டான்.''

*அப்புறம் அங்கே தேனுவது பாலாவது! விருந்தாவது, மருந்தாவது! அவள் நடு நடுங்கிப் போகிருள், அந்தப் 'பயலை'ப் பார்த்து.*

''என் - குடியைக் கெடுக்க வந்த கோமானே, நீ
எறவானம் பார்த்துமே தொத்தடா!''

என்று அவசர அவசரமாகச் சொல்லி அவனை முடுக்கு கிறாள்:

> எறவானம் பார்த்துமே தொத்தையில்—பயல்
> எதிர்க்குச்சி தடுக்கியே விழுந்தானும்!

விழுந்தால் சப்தம் கேட்காதா? கணவன் காதில் திட்டுப்புட்டென்று சப்தம் கேட்கிறது.

> "அடி, திட்டுப்புட் டுன்னுது என்ன?—அடி
> திருட்டுவெள் ளாட்டிநீ சொல்லடி."

அவள் சொல்வது:

> "என்னைக்கும் இல்லாத கரும்பூனை
> எலியைத் துரத்தியே ஓடிச்சே!"

அவன்:

> "அடி, போனாலும் போகுதே பொம்பளே—பெரிய
> போகிணியில் சோறிட்டது யாருக்கு?"

அவள்:

> "அட, பிள்ளையைப் பெத்த பெரும்பாவி—உன்றன்
> பிரிய மகனுக்குச் சோறிட்டேன்."

பாவம்! அந்த அப்பாவி மகன் எங்கேயோ தூங்கிக் கொண் டிருந்தான். புருஷனுக்குத் தெரியாதா இந்தச் சூது? அவன் நாலு திசையும் பார்த்துப் பயலைக் கண்டு பிடித்துவிட்டான்.

> "வடக்காலே தெக்காலே மேற்காலே கிழக்காலே!
> உள்ளத்தைச் சொல்லடா சின்னக் காத்தான்"

என்று கேட்டால், அவன் என்ன சொல்வான்?

# 29

# மாரியம்மன் பாட்டு

தமிழ் நாட்டிலேதான் திருக்கோயில்கள் அதிகம். சிவாலயங்களும் விஷ்ணுவாலயங்களும் கிராமங்கள் தோறும் இருக்கின்றன. ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்று ஔவைப் பாட்டி பாடுகிறாள். ''திருக்கோயில் இல்லாத திருவில் ஊர் அடவி காடு..'' என்று திருநாவுக்கரசர் சொல்கிறார். தமிழர் தம்முடைய கலைச் செல்வங்களுக்கு உறைவிடமாகக் கோயில்களை வைத்துப் பாதுகாத்தார்கள். சில கோயில்களில் செல்வத்தைச் சேமித்த நிதியும் இருந்தன; அதற்குக் கோயிற் பண்டாரம் என்று பெயர்.

சிவ விஷ்ணு ஆலயங்களின் வழிபாட்டு முறை முதலியன, தூய்மை, ஒழுக்கம், அறிவு எல்லாம் உடையவர்களால் நடத்தப்பெறும். குடி மக்களில் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களின் வழிபாட்டுக்கும் தனித்தனியே கோயில்கள் உண்டு. பிடாரிகோயில், காளி கோயில், ஐயனார் கோயில், பகவதியம்மன் கோயில், மாரியம்மன் கோயில் முதலிய கோயில்கள் கிராமதேவதை கோயில்கள் என்று வழங்கப்படும். இந்தக் கோயில் விழாக்களில் ஊரில் உள்ள குடிமக்கள் அனைவரும் கலந்துகொண்டு ஊக்கத்தோடு வழிபடுவார்கள்.

மாரியம்மன் வழிபாடு தமிழ் நாட்டில் மிகவும் சிறப்பாக நடந்துவருகிறது. எல்லாச் சாதியினரும் மாரியம்மனை வழிபடுகின்றனர். அம்மை நோய்க்கு மூலகாரணம் மாரியம்மன் என்ற கொள்கையினால் அத்தெய்வத்துக்கு மிக்க சிறப்பு ஏற்பட்டிருக்கிறது.

கிராமங்களில் மாரியம்மனுக்குக் காப்புக் கட்டித் தேர் விழா நடைபெறும். ஆவேச ஊர்வலங்களும், கரகம் அக்கினிச் சட்டி எடுப்பதும், அலகு குத்திக் கொண்டு வருவதும், வேறு பிரார்த்தனைகளும் நடைபெறும். அப்பொழுது அவர்கள் பாடிவரும் பாடல்கள் பல. ஊருக்கு ஊர் வெவ்வேறு விதமான பாடல்கள் வழங்கும்.

பின்னே வரும் பாடல்கள் கரூரில் மாரியம்மன் திருவிழாவின்போது பாடப்பெறுவன. காப்புக் கட்டின போது அம்மனுக்குத் தண்ணீர் எடுத்துச் செல்பவர்கள் பாடிக்கொண்டே போகும் பாட்டுக்கள் :

**1**

ஆவோ.........ஐயாவோ !
கொண்டான் கொண்டான் நெல்லுக் குத்தி,
கொழக்கட்டையேலே சோறுக்கி
மாங்குளத்துத் தண்ணியிலே
மயங்கறாளாம் மாரியாத்தா !
ஆவோ.........ஐயாவோ !

**2**

அல்லித் துறையிலே
அழகான மூக்குத்தி
அழகான மூக்குத்தி
வெச்சு மறந்தாளாம்
பாத்தவங்க குடுத்துடுங்க
பசுவை வித்துப் பணந்தாறேன்
எடுத்தவங்க குடுத்துடுங்க
எருமை வித்துப் பணந்தாறேன்
ஆவோ.........ஐயாவோ !

## 3

ஒரு காசாங் கருகுமணி
கழுத்து ரொம்பப் பூட்டி
கழுத்து ரெண்டுந் தெறிக்குதடி
கண்ணனூரு மாரி
இரண்டொழக்காங் கருகமணி
கழுத்து ரொம்பப் பூட்டி,
கழுத்து ரெண்டுந் தெறிக்குதடி
கண்ணனூரு மாரி !

*(இப்படியே பத்து வரையில் வரும்)*

## 4

ஆதி பரஞ்சோதி
அழகு முத்து மாரி
ஆவாரங் காட்டிலே
தாவாரங் கட்டப் போயி
தாவாரம் பத்தாமல்
தவிக்கிறாளாம் மாரியாத்தா.
ஆலாஞ் சருகிலே
ஆனை வந்து மேயுதுன்னு
ஆனை விலைமதிக்கப்
புறப்பட்டாளாம் மாரியாத்தா.
பூலாஞ் செறுவிலே
பூனைவந்து மேயுதுன்னு
பூனை விலைமதிக்கப்
புறப்பட்டாளாம் மாரியாத்தா.

அல்லித் துறையிலே
புல்லுச் செதுக்கப் போய்
அழகான மூக்குத்தியை
வெச்சு மறந்தாளாம்
பார்த்தவங்க குடுத்துடுங்க
பழனிச் சீமை மூக்குத்தி
கண்டவங்க குடுத்துடுங்க
கண்டிச் சீமை மூக்குத்தி
பாத்தவங்க குடுத்துடுங்க
பசுவை வித்துப் பணந் தாறேன்.
கண்டவங்க குடுத்துடுங்க
பன்னி குத்திப் பணந் தாறேன்

## 5

உச்சி மலைமேலே
ஊமத்தம் பூப்போலே
பச்சைக் கிளிபோலே
பறக்கிறாளாம் மாரியாத்தா
ஆதி பரஞ்சோதி
அழகுமுத்து மாரி
கண்ணனூரு மேடையிலே
பள்ளிகொண்ட தாயி !

## 6

எலோரும் போற பக்கம் கல்லுங் கரடும்
மாரியாத்தா போற வழி தேருந் திருநாளும் !

